பழியும், பாவமும் வாசல்ல

நிக்குது. தலைமுறை கடந்தும் கட்டணும் வரி

# சாபம் மரணம் அமானுஷ்யம்



யாணன்

'உற்று
நோக்கினால்
ஒவ்வொரு
மரணமும்
ஓர் அமானுஷ்ய
நிகழ்வே!'
-யாணன்



## வாழ்த்துரை...! எழுத்தாளர் என்.கணேசன்

ஒவ்வொரு வினையும் விளைவிலேயே முடிகிறது. நல்ல வினைகள் வரங்களாகவும், புண்ணியங்களாகவும் செய் தவர் கணக்கில் தங்கி விட, தீவினைகள் சாபங்க ளாகவும், பாவங்களாகவும் செய்தவர் கணக்கில் பதி வாகி விடுகிறது. அவற்றின் பலனை வினை ஆற்றிய வன் அனுபவித்து முடியும் வரை கணக்கு முடிவடைவ தில்லை. சிலவற்றிற்குப் பலன் சீக்கிரமாகவே கிடைத்து விட சிலவற்றிற்குப் பலன் காலங்கடந்து
கிடைக்கிறது. சில விளைவுகளை பிறவிகள் கடந்தும் அனுபவித்தே தீர வேண்டியிருக்கிறது. பல தீவினைகள் தனக்கும் தன் சந்ததிக்கும் சொத்து சேர்த்து வைப்பதற் காகவே ஒருவரால் செய்யப்படுகின்றன. தவறான வழி யில் சேர்த்து வைக்கும் சொத்து அந்தச் சந்ததிக்குப் பயன்படுவதற்குப் பதிலாக சாபமாகத் தங்கி சந்ததியை எப்படியெல்லாமோ வதைக்கின்றது.

சொல்லொணாத் துன்பங்களில் ஒருவரோ, ஒரு குடும் பமோ அல்லல்படும்போது அதன் மூல காரணமான தீவினைகள் பெரும்பாலானோரின் கருத்தில் அகப்ப டுவதில்லை. அமானுஷ்யமாகவும், அசாதாரணமாகவும் தோன்றும் நிகழ்வுகளைத் திகைப்புடனேயே அவர்கள் காணுகிறார்கள். அருமை நண்பர் யாணன் அவர்க

ளின் இந்த 'சாபம், மரணம், அமானுஷ்யம்' நூலில் இது போன்ற அமானுஷ்யமும், விசித்திரமானதுமான சம்ப வங்களும் அதன் மூல காரணங்களும் மிகச் சுவாரசிய மாக அலசப்படுகின்றன.

பாவ புண்ணியக் கணக்குகளை அலட்சியப்படுத்தி தான்தோன்றித் தனமாய் இக்காலத்தில் பலரும் நடந்து கொள்வதை நாம் காண்கிறோம். அவர்களுக்கெல்லாம் பாடமாகவும், எச்சரிக்கை மணியாகவும் இந்த நூல் அமைந்திருக்கிறது என்றால் அது மிகையாகாது. அத னால் இது இக்காலத்திற்கு அவசியமான நூல் என்றே சொல்ல வேண்டும். இந்த நூலின் இன்னொரு மிகப்பெ ரிய விசேஷம் என்னவென்றால் இதில் விவரிக்கப்படும் பெரும்பாலான நிகழ்வுகள் திரு யாணன் அவர்கள் தன் வாழ்க்கையில் பல கட்டங்களில் கண்டதும், கேட்டது மாய் இருப்பது தான். எல்லாவற்றிற்கும் ஒரு மௌன சாட்சியாய் இருந்து விவரிப்பதைப் போன்ற உணர்வை இந்த அருமையான நூலில் அவர் ஏற்படுத்தி விடுகிறார். இது போன்ற தர்ம, நியாயங்களை எடுத்துக்கூறி வழிந டத்தும் நூல்களை அவர் மேலும் எழுத வேண்டும் என் பதே என் அவா.

அன்புடன்

என்.கணேசன்

## காணிக்கை...!



பிறந்தது முதல் பிழைக்க மாட்டேன் என கணித்த பலரது அனுமானங்களையும் பொய்யாக்கி... என் உயிர் வளர்த்த, அவ்வா (தாய்வழிப் பாட்டி) லெட்சுமி அம் மாளுக்கு... ! அவர் மறைந்து எத்தனையோ ஆண்டு கள் கழிந்தாலும், இன்றும் நீங்கா நினைவுகளாய்... ! சில ஆண்டுகளுக்கு முன் எனது தாயார் திதி அன்று உச்சி வெயிலில் ஐந்து நொடிகள் காட்சி தந்து மறைந்தார்.

என் சிறுவயதில் அவர் கதை போல் சொன்ன சில நிஜங் கள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன.

அதே போல் சில ஆண்டுகளுக்கு முன் மறைந்துவிட்ட அன்பிற்கினிய 'அண்ணன்' அளக்குடி ரவிக்கு...!

அடியேன், ஆயுள் உள்ளவரை அண்ணனை மறக்க இய லாது!

## முன்னுரை...!

அரசியலில், அதிகாரத்தில், கலைத்துறையில் பலரை, நட்சத்திரமாக ஜொலிக்க வைக்கும் சக்தி படைத்த, பலரது வீடுகளில் என்ன நிலை? குத்துவிளக்கு கீழே இருட்டு என்பதுபோல்... வம்சம் ஜெயிப்பதில்லை. பிள் ளைகள் படுதோல்வி அடைகிறார்கள்! ஏன்? என்ன இர கசியம்?

ஒருவருடைய வாழ்த்து மற்றொருவரை வாழ வைக் குமா? பலரின் வாழ்த்துகளால், பலரின் பிராத்தனைக ளால் ஒரு நன்மை நிகழும் என்பதற்கு விஞ்ஞானத்திடம் விளக்கம் உண்டா? இல்லவே இல்லை. மெய்ஞானத் திடம்தான் அதற்கு விளக்கம் உண்டு, விடை உண்டு. அந்த விடையை, விளக்கத்தை விஞ்ஞானம் ஒருநா ளும் விளங்கிக்கொள்ள இயலாது.

பொதுவாக வாழ்த்துகளை நம்புகிற, பிறரிடமிருந்து ஆசிகளை பெற முனைப்பு காட்டுகிற நாம்; மற்ற வர்களின் பழிசொல்லுக்கு ஆளாகாமல் வாழ்வேண்டும் எனும் அக்கரை கொள்வதில்லை.

பாவம் பழிசொல்லுக்கு ஆளாகாதே எனும் முன்னோர் உபதேசங்கள், இப்போது பரிகாசத்துக்கு உரியவை. தப்பு செய்யுறவன் தான் ஸார், நல்லாயிருக்கான், இந் தக்காலத்துல போயி பாவம், சாபம்ன்னு சொல்லிகிட் டு...போங்க ஸார் எனும் எதிர்வாதங்களே அதிகம்.

வீட்டுச் சுவற்றில் குளவிகள் கட்டும் மண்கூட்டைத் தெரியாமல் சேதாரம் செய்துவிட்டால் கூட... வீட்டில் உள்ள பெரியோர்கள் பதறுவார்கள். சில நம்பிக்கைகள் முன்னோர்களை வழிநடத்தியது. அதனை அவர்கள் மீறாமல் வாழ்ந்தனர். அவர்கள் வாழ்க்கையில் செல்வம், செல்வக்கு, இருந்ததைவிட நிம்மதி நிறைந்திருந்தது.

இன்றைய வாழ்க்கை அறிவியல் மயமானது. மனசாட் சிக்கு மதிப்பு கிடையாது. கொலை செய்வதும் கூட இங்கே ஒரு தொழில்! எல்லாமே பிசினஸ், அதான் ஸார் மார்கெட்டிங், இதெல்லாம் புரொபஷனல் எத்திக்ஸ் ஸார்... இப்படி பல மாயாஜால வார்த்தைகள் சமூகத்தில் புழங்குகின்றன.

சமூகம் அறிவை முதன்மைப்படுத்தி, ஞானத்தை வெளியே தள்ளிவிட்டது. விளைவு... பிறரது துன்பத்தை போக்கக்கூடிய மருத்துவத்தை பயிலும் மாணவர் இரு வர் கடந்தாண்டு சென்னையில் என்ன செய்தார்கள்? கொஞ்சி விளையாடும் நாய் குட்டி ஒன்றை மாடியில் இருந்து தூக்கி வீசி அதன் வேதனையை வீடியோ எடுத் தார்கள். ஒருவரின் வேதனை மற்றொருவரின் மகிழ்ச் சியா?

அண்மையில் சென்னையில் நடந்த நிகழ்வு இன்னும் பதபதைக்கக்கூடியது. நடைபாதை ஓரம் தூங்கிய முதிய வர் ஒருவரை மூன்று இளைஞர்கள் சேர்ந்து உயிருடன் கொளுத்த முயன்றுள்ளனர்.

பந்து பட்டு கண்ணாடி உடைந்தது போல..ஆப்பிளில் கத்தி சொருகி இரத்தம் வருவது போல... குரூர படங்கள் கார்களில் ஒட்டப்படுகிறது. இத்தகைய இரசனை சமு கத்திற்கு என்ன தரும்? குழந்தை அழுவது போல பைக் ஹாரன்... வைத்துக்கொள்கிறார்கள். ஹாரன் ஒலித்

தால்.. சாலையே பதற்றமடைகிறது. அதை சம்பந்தப்பட் டவன் இரசிக்கிறான். இதெல்லாம் எதனால்...?

ஆதாரம், சாட்சி, இல்லை என்றால்.. தவறுகள் தண் டிக்கப்படாது என நம்புகிறார்கள். உண்மை அதுவல்ல! தண்டனைகள் தலைமுறைகள் தாண்டியும் தொடரு கின்றன என்பதை குடும்பங்கள் தோறும் இயற்கை உணர்த்துகிறது. விழிப்படைந்தோர் பழி பாவத்துக்கு அஞ்சுகிறார்கள்! மனசாட்சிக்கு கட்டுப்பட்டு வாழ்கிறார் கள்! அப்படியான வாழ்க்கைக்கு வழிகாட்டவும், எச் சரிக்கையடைய வைக்கவுமே இந்நூல்... இத்தொட ரில் வரும் சம்பவங்கள் அத்தனையும் இந்த மண்ணில் எங்கோ,

எப்போதோ நடந்தவைதான். முப்பதாண்டு கால அடி யேனின் ஞானத்தேடலில் பலரிடமிருந்து அறிந்தவற்றில் கொஞ்சம்தான் இந்த நூல்! நூலாக தங்கள் கரங்க ளில் தவழும் இந்த படைப்பு...இதற்கு முன் குமுதம் ரிப் போர்ட்டர் இதழில் தொடராக வெளிவந்தது.

இப்படியான நிகழ்வுகளை வைத்து ஓர் தொடர் எழுத லாம் என குமுதம் ரிப்போர்ட்டர் இதழின் ஆசிரியர் திரு. க.குபேந்திரன் அவர்களிடம் பகிர்ந்தபோது... வெகுவாக ஊக்கப்படுத்தினார். கட்டுரைகளை இரசித்து இரசித்து வாசித்தார்! அவரது தூண்டுதலாலேயே தொடர்ந்து எழுத முடிந்தது. அவருக்கும், இத்தொடரை அங்கீ கரித்து நூலாக வெளியிட அனுமதியளித்த குமுதம் நிறுவனத்தின் நிர்வாக இயக்குநர் திரு. பா.வரதராசன் அவர்களும் எனது மனமார்ந்த நன்றியை தெரிவிக்கி றேன். தொடராக வெளிவந்தபொழுது.. இடம் கருதி சில கட்டுரைகள் சுருக்கப்பட்டன. எனினும் இந்நூலில் அடி யேன் எழுதியவை அப்படியே முழுமையாக இடம்பெற் றுள்ளன.

இத்தொடர் நூலாக வரவேண்டும் என்பதில்... அதிக அக்கறைக் கொண்டதோடு, நூலுக்கு வாழ்த்துரையும் வழங்கி சிறப்பித்த அன்பிற்கினிய எழுத்தாளர் என்.கணேசன் அவர்களுக்கும்... தொடரை தொடர்ந்து வாசித்து ஊக்கப்படுத்திய பத்திரிக்கையாளர் விகேஷ்க்கும், அதேபோல் கட்டுரைகள் ஓவொன்றையும் பலரது பார்வைக்கு அனுப்பி படிக்க வைத்த தம்பி பிலாலுக்கும், என் மனமார்ந்த நன்றிகள்... தொடரை தொடர்ந்து வாசித்துவிட்டு தொலைபேசியில் வெகுவாக பாரட்டிய நடிகர் எஸ்.வி.சேகருக்கும் என் நன்றிகள்! அதேபோல் இத்தொடர் மூலம் மெய்ஞான தேடலில் சதா ஈடுபடும் மருத்துவர் சித்தர் பாண்டியனின் பந்தம் உருவாக காரணமாக அமைந்த பிரபஞ்ச சக்தியை வணங்குகிறேன். காலம்...அடியேனுக்கு உதவியாக, வழிகாட்டியாக சில நல் ஆத்மாக்களை தொடர்ந்து அனுப்பி வருகிறது. எனது முந்தைய நூல்களில் சில முக்கியமான நண்பர்களை குறிப்பிட்டு நன்றி பாராட்டியிருக்கிறேன்...

இந்நூலிலும் அப்படி சிலர்...திருச்சி சண்முகம் ஐயா... இப்படியான மனிதர்கள் பழகக் கிடைத்தது அடியேன் பாக்கியமே... அவரது பேச்சு தோரணை பழையகால நடிகர் தங்கவேலுவை எனக்கு நினைவுபடுத்தும். 'துக்ளக் சோ' வைப்போல மொட்டை தலையை தனது அடையாளமாக மாற்றிக்கொண்டார்... தனது வித்தியாசமான அனுபவங்கள் பலவற்றை பகிர்ந்துள்ளார். அத்தனையும் வாழ்வியல் படிப்பினைகள்.

அன்பிற்கினிய ஹரிஹர மஹாதேவன்... அதிர்ந்து பேச மாட்டார். அற்புதமான மனிதர். சமூகம் மேம்பட சத்தமில்லாமல் பல பணிகள் செய்து வருகிறார். பொறிஞர் சிவராமன்... நற்பண்புகள் பலவற்றை தன்னகத்தே கொண்ட அன்பிற்கினியவர். தர்மபுரி நரேன் மறக்க முடி

யாத மற்றொரு மனிதநேயர். அதேபோல் அன்புத் தம்பி கயப்பாக்கம் ரமேசு,உள்ளிட்ட யாவருக்கும் நன்றி கூறி மகிழ்கிறேன்...

அன்புடன்,

யாணன்

சென்னை - மெட்ரோ ரயில் சுரங்கப் பணியின் போது நடந்த நிகழ்வு குறித்து அதிகாரிகள்...

பிண அறை அருகே கேரள நம்பூதிரிகள் பூஜை

[illegible]

இரவு, பகலாக பொழுதுகள் சுழலும் இப்பூமியில் நம் கண்களுக்கு புலப்படாத அரூப உலகம் ஒன்றும் இதனு டேயே இரண்டற கலந்து கிடக்கிறது. அதனுள் மனித னின் விஞ்ஞானம் ஆட்சி செய்ய இயலாது. மெய்ஞா னமே பிரவேசிக்கும்!

எப்படி...?

ஐபூதங்களில் காற்று அரூபமாகத்தானே இயங்குகிறது. காற்றை காண முடியாது. உணரவே முடியும்! அதுபோ ல...அமானுஷ்ய நிகழ்வுகள், சூட்சம குறியீடுகள் நம் மைச்சுற்றி நாளும் நிகழ்கின்றன. விழிப்படைந்தவர்கள் மாயையில் இருந்து விலகி நிற்பர். அமானுஷ்ய அனு பவங்களை உணர்ந்தவர்களே பிறரது அனுபவங்களை யும் ஏற்பர். இப்பூமியில் சிலருக்கே, சில நொடிகள்

கிடைக்கின்றன... அத்தகைய அனுபவங்கள்! ஆச்சரி யங்கள்! உணரும் ஆற்றல்கள்!!

## தங்கையின் குரல்!



என் கால்சட்டைக் கால பருவம், அடியக்கமங்கலம் எனும் அழகிய கிராமம் ஒன்றில் கழிந்தது. அங்கி ருந்து சுமார் 15 கிலோ மீட்டர் தொலைவில் இருந்தது, தாய்வழி பாட்டியின் வீடு. தாயாரோடு அடிக்கடி பாட்டி வீட்டிற்கு செல்கிற வாய்ப்பும் கிடைத்து வந்தது. பாட் டிக்கு பேரக்குழந்தைகள் பலர் இருப்பினும், சிறு வய தில் அடியேன் அதிக நோய்வாய்ப்பட்டு பிழைத்ததின் காரணமாக என் மீது கூடுதல் பரிவு, பாசம் உண்டு. எனக்கு மட்டும் திண்பண்டங்களில் கொஞ்சம் கூடுத லாக கொடுத்து மகிழ்வார், பாட்டி. இரவில் அவர் அரு கில் படுத்துறங்குவது உண்டு. நல்லதங்காள் போன்ற கதைகள் பல உருக்கமாய்

சொல்லக் கேட்டிருக்கேன். பகலில் சுற்றித்திரிய ஏரா ளமான சுதந்திரம் கிடைக்கும். தோப்பு, குளம் மற்றும் வயல்வெளிகள் என விதவிதமான விளையாட்டு தளங் கள். மாட்டுவண்டி ஓட்ட பழகுதல் என உயிர்ப்பான அனுபவங்கள். அதனால் பாட்டி

வீட்டுக்குச் செல்வதில் எப்போதும் அதிக விருப்பம் ஏற் படும். தீபாவளி, பொங்கல் போன்ற பண்டிகைகளை வீட்டில் கொண்டாடியபின் என் அம்மா, பாட்டி வீட்டிற்கு புறப்பட்டுப் போவார்கள். அப்படி ஒருமுறை பொங்கல் பண்டிகைக்கு போனபோதுதான் முதல் முறையாக ஒரு வித்தியாசத்தை அங்கே என்னால் கவனிக்க முடிந்தது.

ஆமாம். பொங்கலன்று பாட்டி வீட்டில் பொங்கல் பானை வைத்து வழிபடவில்லை. அம்மா வீட்டிலிருந்து எடுத் துச் சென்றிருந்த பொங்கலைத்தான் பாட்டி வீட்டில் கொடுத்தார்கள். சட்டென.."பாட்டி நீங்க பொங்கபானை வைக்கலையா?" என கேட்டேன். அதற்கு பாட்டியோடு சேர்ந்து அம்மாவும் வேகமாக பதிலளித்தார்கள். பாட்டி வீட்லே எப்பயும் மாட்டு பொங்கலன்னைக்குத்தான், சூரியனுக்கு படைக்கிற பொங்கல் பண்டிகையும் சேர்த்து கொண்டாடுவாங்க என்றார். அந்த பதிலே அப்போது போதும் என்பதுபோல் அந்த பேச்சை அப்படியே விட் டுவிட்டு பனஞ்சுளைகளை சாப்பிடுவதிலும், பனங்காய் களை வைத்து வண்டி செய்து விளையாடுவதிலும் கவ னமானேன். அடுத்தநாள், அதாவது மாட்டுப்பொங்கல் அன்றுதான் சூரியப்பொங்கலும் வைத்தார்கள்.

பிறகு ஒரு இரவில்... பாட்டியோடு படுத்துத்தூங்குகிற நேரத்தில், "பொங்கலன்று ஏன் பொங்கல் செய்வ தில்லை?" என மீண்டும் கேட்டேன். அப்போதுதான் பாட்டி அந்த நிகழ்வைக் கூறினார்கள்.

தாத்தா வழி முன்னோர் குடும்பத்தில் நடந்த அந்த துயர நிகழ்வை கதைபோல் சொல்ல ஆரம்பித்தார்...

"நாலு தலமுறைக்கு முன்னாலே, நம்ப வீட்டிலே ஒரு தாத்தா பாட்டி இருந்திருக்காங்க. அவங்களுக்கு நாலு பிள்ளைங்க ஒரு மக இருந்திருக்காங்க. வீட்லே ஒரே பெண்ணுங்கிறதாலே ரொம்பவே செல்லமா வளர்த்தி ருக்காங்க. நாலு அண்ணன்களும் தங்களுக்கு இருக்கிற ஒரே தங்கச்சிங்கிறதாலே ரொம்பவே பிரியமா நடத்தி யிருக்காங்க. ரொம்ப வசதியான குடும்பம். கொல்லைப் பக்கம் பெரிய தோட்டம். வாழை, எலுமிச்சை, கொய்யா, மாமரம், தென்னை எல்லாம் அந்தத் தோட்டத்தில இருந்திருக்கு. அப்ப எல்லாம் பெரிய வீடுகள்ல பின்பக் கம்

சுண்ணாம்பு காளவாய்ன்னு ஒண்ணு இருக்கும். நாம வெத்திலைக்கு தடவிக்கிற சுண்ணாம்பு, வீட்டுக்கு அடிக்கிற சுண்ணாம்பு எல்லாம் சந்தையில போயி கிளிஞ்சல் வாங்கிட்டு வந்து காளவாயில போட்டு சுண் ணாம்பா மாத்துவாங்க. சுண்ணாம்பு காளவாய்ன்னா பெரிய அடுப்பு மாதிரி அனல் அடிக்கும். உள்ளே சுண் ணாம்பு தளபுளன்னு கொதிச்சிட்டிருக்கும்.

வீட்ல இருந்த தங்கச்சிக்கு பெரிய பெரிய ஜமீன்ல இருந் தெல்லாம் வரன் கேட்டு வந்திட்டிருக்கு. பொண்ணு, பார்க்க மகாலட்சுமி மாதிரி இருப்பாளாம். தலைமுடி கால் தொடைல வந்து இடிக்குமாம். சிரிச்ச முகமா இருப்பாளாம். அவங்க பொறந்துதான் தாத்தா நெறய சொத்து வாங்கியிருக்கிறார். இப்படி வீடே கொண்டாடு றாங்க... அந்த பெண்ணை. தை பொறந்திடுச்சி அன் னைக்கு வீட்ல பொங்கல். பொங்கல் முடிஞ்சதும் கல் யாண ஏற்பாடுகள செய்யணும்னு வீட்ல இருக்கிற பெரி யவங்கெல்லாம் முடிவு செஞ்சிருக்கிறாங்க.

பொங்கல் முடிஞ்சி மத்தியானமா, அந்த பொண்ணு என்ன பண்ணிருக்கான்னா? தலை குளிச்ச ஈரம் காயட்டுமேன்னு கொல்லையில போயி லேசா வெயில்ல தல முடிய உலர்த்தியிருக்கா. அப்படியே எலுமிச்ச தோட்டத்துக்குள்ள போயி விழுந்து கிடக்கிற பழங்களை பொறுக்கி முந்தானையில சேகரிச்சுக் கிட்டுயிருந்திருக்கா.

அப்ப, வெயில் காயறத்திற்காக விரிச்சு வைத்திருந்த தல மயிறுல நாலு, எலுமிச்ச முள்ளுல எதிர்பாராம சிக்கிக்கிது. சிக்குன அந்த மயிற தன் கையால இழுக்கிறா, செடி வளையுதே தவிர, சிக்கு விடுபடல. அப்ப அந்த பொண்ணு கொஞ்சம் கோபமா அந்த எலுமிச்ச செடிக்கிட்ட 'சீய் என்னை விடு'ன்னு சொல்றா. அந்த காலத்தில வீட்டுக்குள்ள டாய்லட், பாத்ரூமெல்லாம் கிடையாதே. எல்லாரும் வீட்டுக்குப் பின்னாடி இருக்கிற கொல்லையிலதானே மறைவா போயி மலம் கழிப்பாங்க. அந்தப் பெரிய கொல்லையோடு இன்னொரு மூளையில, மறைவாய் மலம் கழித்துக் கொண்டிருந்தான் அண்ணன் ஒருவன். திடீரென அடர்ந்த செடிகளுக்கு இடையே இருந்து 'சீய் விடு'ன்னு தங்கையோட குரலைக் கேட்டு சந்தேகமடைகிறான்.

'என்னடா மதிய நேரத்தில எலுமிச்ச தோட்டத்துக்குள்ள தங்கச்சி குரல் கேட்குதே'ன்னு தப்பா யோசிக்கிறான். சட்டுனு கொல்லைக்கடைசியில இருக்கிற குளத்தில கால் கழுவிக்கிட்டு வீட்டுக்கு வறான். அங்க சேகரிச்ச எலுமிச்சம் பழத்தை ஒரு கூடையில போட்டுட்டு விரிந்த தல மயிறை முடிச்சுப் போட்டுட்டு குனிஞ்சி கூடத்தை கூட்டிகிட்டுக் இருக்கிறா தங்கச்சி.

உள்ளே வந்த அண்ணன், சட்டென தங்கச்சியைப் பார்த்து 'எலுமிச்சை தோட்டத்தில யாரோடு பேசிக்

கிட்டு இருந்தே?' என கேட்கிறான். 'நான் யாரோ டும் பேசலங்'கிறா, தங்கச்சி. உடனே அண்ணனுக்கு, 'தங்கச்சி பொய் சொல்றாளே'ங்கிற ஆத்திரம். கோபமா 'ஏண்டி மறைக்கிறே, உன்கூட இருந்தது யாரு? ஒழுங்க சொல்லு'ன்னு அதட்டுகிறான். முதல்ல 'அண்ணன் விளையாட்டா பேசுறானோ'ன்னு நினைச்சிருந்த தங் கச்சி, அண்ணனோடு அசல் கோபத்தை பார்த்ததும் பீதியடையிறா. இதுக்குள்ள வீட்டிலிருந்த பெத்தவங்க ளும், மற்ற அண்ணன்மார்களும் சத்தம் கேட்டு என் னமோ ஏதோன்னு கூடத்திற்கு வந்துடுறாங்க. எல்லோ ருக்கும் முன்னாடி மூத்த அண்ணன் சொல்றான், 'நான் கொல்லையில் மலம் கழிக்கப் போயிருந்தேன். அப் போது எலுமிச்சை தோட்டத்திலிருந்து சீய் விடுன்னு யாருகிட்டயோ இவ சிணுங்கின குரல் கேட்டுது. நான் சட்டென வந்து பார்க்கிறதுக்குள்ள, இவ வீட்டிற்கு வந் துட்டா. இவளோடு பேசுனவனும் ஓடிட்டான். இவளோ எலுமிச்சை செடியோட பேசினேன்னு முழு பூசணிக் காயை சோத்துல மறைக்கிறா'ன்னு கோபத்துல மூக்கு பொடைக்க பேசியிருக்கான்.

அண்ணந்தான் நம்பல. அப்பா அம்மாவாது நாம சொல் றத நம்பமாட்டாங்களான்னு திரும்பவும் தங்கச்சிக்காரி நடந்த உண்மையைச் சொல்றா, "என் ஈரகூந்தலை காயவைக்கவே கொல்லைக்குப் போனேன். அப்ப அங் கிருந்த எலுமிச்சை கன்னுல என் கூந்தலோட ஒரு கீற்று சிக்கிகிட்டது. நான் தண்ணீ ஊத்தி வளர்த்த செடிங்க கிட்ட நான் பாசமா பேசுறது உண்டு. அப்படித்தான் அந்த செடிகிட்ட செல்லமாக 'சீய் விடு'ன்னேன். அதைத்தான் அண்ணன் தவறாக புரிஞ்சிகிட்டாங்க"ன்னு

சொல்லுறா. அவ சொன்னது சரியின்னுபட்டாலும், காது கொடுத்து கேட்டவன் அண்ணனாயிற்றே! அதனால அம்மாக்காரி 'ஒண்ணும் பயப்படாதேடி அண்ணன்

சொன்னது மாதிரி எதாவது நடந்திருந்தாலும் மறைக் காம சொல்லு'ன்னு கேட்டுறாங்க.

நாம சத்தியத்த பேசினாலும், சந்தேகத்தோட பார்க்கி றாங்களேன்னு ஓவென்று அழுதிருக்கிறாள். அப்போதும் அவளது பேச்சை நம்பாத அண்ணன்மார்கள் 'செஞ்ச தப்பு தெரிஞ்சுட்டதேன்னு அழுது அரட்டி நம்மயெல் லாம் ஏமாத்த பார்க்கிறா'ன்னு குத்தமா பேசுறாங்க. தன் பேச்சை அண்ணன்கள்தான் நம்பல. அப்பாவது நம்பு வார்ன்னு அவர் காலில் விழுந்து மன்றாடுறா. அவ ரும் சந்தேகப்படுற மாதிரியே பாக்குறாரு. வெறுட் டென எழுந்து நின்னா. முடி போட்டிருந்த தலைமயிரை அவிழ்த்தாள்.. பொங்க கும்பிட்ட பானைப் பார்த்தாள். கண்ணகி போல சாபம் கொடுத்தாள்.

'நா சொன்னது உண்மையின்னா அடுத்த பொங்கலுக்கு பானையில பாலுக்கு பதிலா என் ரத்தம் பொங்கும்.' ஆவேசமா, கொல்லைப்பக்கம் ஓடினாள், கொதிச்சிக் கிட்டிருந்த சுண்ணாம்பு காளவாயி மேல ஏறி உள்ள குதித்து உயிரை விட்டுட்டாள்.

விக்கித்து நின்னுது குடும்பம். தவறு செய்திட்டோ மேன்னு வருந்தினாங்க. ஒருத்தரை ஒருத்தர் குறை சொல்லிக்கிட்டாங்க. மாசம் பல ஆனது. சாவுத்தீட்டு முடிந்து, அடுத்த பொங்கல் வந்துது. பானை வைச் சாங்க. பொங்கியது! அந்த பெண் சொன்னது போல்...ரத் தமாக! சாபம் பலித்தது.



குடும்பமே பானைக்கு முன்பாக சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார்கள். 'மன்னிச்சுடு தாயே' என கதறினார்கள். அன்றிலிருந்து இந்த வம்சத்தின் வீட்டு தெய்வமாக அவள் மாறினாள்." என்றார் பாட்டி. சில நூறு ஆண்டுகள் கடந்து விட்டாலும் அந்த வம்சத்தில் இன்றும் பொங்கலன்று... சூரியனுக்கு பொங்கல் வைப் பதில்லை. வீட்டு தெய்வத்திற்கு படைக்கிறார்கள். பாட் டிக்காலத்தில் பொங்கலுக்கு மட்டுமல்ல வீட்டில் சுபகா ரியங்கள் எது செய்தாலும் முதல் நாள் சுவற்றில் மஞ்ச ளால் ஒரு பெண் முகம் வரைந்து, புது உடை வைத்து, பொங்கல் வைத்து வணங்கிய பின்னரே சுப காரியங்கள் தொடங்குவதை அவர் வழக்கமாக வைத்திருந்தார்.

## 2.உயிர் பிச்சை!



அந்த வீட்டைக் கடந்து போகிற போது நம்மை அறி யாமல் ஒரு எச்சரிக்கை ஏற்படும். பெரும்பாலும் அந்த பெண், வீட்டு வாசலிலோ, தெருவிலோ உட்கார்ந்தி ருப்பாள். நான் பார்க்கும் போது அவளுக்கு இருபது வயது தாண்டி இருக்கும். பருமனான உடல். அவளுக்கு பாவாடை தாவணிதான் அணிவித்திருப்பார்கள். அது நைட்டி வராத காலம். இரட்டை ஜடை பின்னி ரிப்பன் கட்டி விட்டிருப்பார்கள்.

எனக்கு அப்போது பன்னிரெண்டு வயது இருக்கலாம். அந்த வீட்டைக் கடந்து போகிற போது அந்தப்பெண் ணைப் பார்த்ததும் பயத்தில் அம்மாவின் கைகளைக் கெட்டியாய் பிடித்துக்கொள்வேன். அம்மா அந்த பெண் ணின் பெயரைச் சொல்லி, ஏதோ பேசுவார். அந்தபெண் ஒருமாதிரி மவுனமாய் பார்ப்பாள். சில சமயம் முகத்தைத் திருப்பிக்கொள்வாள். உதட்டை மடக்கி கடித்துக் கொள்வாள். வாயை கோணிக்கொண்டு முனுகுவாள். துணி விலகியிருந்தாலும் பிரஞ்னையற்றே இருப்பாள். சிலசமயம் ஓடி வந்து அம்மாவின் கையில் இருக்கும் பையை பிடுங்குவாள். தின்பண்டம் இருக்கிறதா எனப் பார்ப்பாள். பின்னாடியே அவளது அம்மாவோ, அவள்

மாமாவோ கையில் கம்போடு வந்து அதட்டி அவளை அழைத்துச் செல்வர். எங்களுக்கும் அவர்கள் தூரத்து உறவுக்காரர்கள் தான்.

பிற்காலங்களில் அம்மாவிடம் கேட்டிருக்கிறேன். "ஏன் அவுங்க ஒரு மாதிரியா இருக்காங்க?" என்பேன். அதற்கு என் அம்மா..."குழந்தையில அவ எப்படியிருந்தா தெரியுமா? என்று ஒரு பெரு மூச்சு விடுவாள்.

"படுசுட்டி, என்ன செய்ய? ஊர் கண் பட்டுடுச்சி. இரண்டரை வயசு இருக்கும்போதே அவளுக்கு பட்டுபாவாடைக் கட்டி, குஞ்சம் வைச்சு ஜடைபோட்டு இடுப்பில தங்க ஒட்டியாணம் அணிவித்து, அம்பாள் விக்ரகம் மாதிரி பெரியம்மா அலங்காரம் செய்யும் பாரு... தெரு கண்ணெல்லாம் அவ மேலதான். விட்டுலேர்ந்து ஒரு பொருளையும் எடுத்துட்டு போக முடியாது. நெல் அளக்க மரக்கா கேட்டு, நம்ம பாட்டி வீட்டுலேர்ந்து ஆள் அனுப்பினா, எங்க வீட்டு மரக்காவா, எங்க எடுத்துட்டு போறேன்னு பிடுங்கிகிட்டு தரமாட்டாளாம்.. அத்தனை பொறுப்பு. நல்ல வாயாடி. மூன்றரை வயசுல ஒரு ஜுரம் வந்துது. பதினெட்டுநாள் படுத்த படுக்கையா இருந்தா. எந்த மருந்துக்கும் கட்டுப்படலை. எல்லாரும் பொழைக்க மாட்டான்னு நினைச்சாங்க. ஆனா உயிர் பிழைச்சா. பிழைச்சு என்ன புண்ணியம்?. பழைய சுட்டிப் பெண்ணா அவ இல்ல. அவளுடைய நடவடிக்கைகள் புதுசா இருந்தது. குரங்கு போல நடந்துக்க ஆரம்பிச்சா. பாக்காத வைத்தியர் இல்ல. போகாத கோயில் இல்ல. பல வருஷம் ஓடிட்டு. நல்லா இருந்திருந்தா, அவளுக்கும் கல்யாணம் நடந்து இன்னைக்கு உன்னாட்டம் புள்ள இருந்திருக்கும்." என்ற என் தாய், வேதனையோடு மேலும் சொன்னார்கள்...

"பட்ட காலுலேயே படும் என்கிற மாதிரி... ஏதோ கருத்து வேறுபாட்டால... பெரியம்மா வாழ்க்கையில மற்றொரு அடி விழுந்தது. அவுங்க கணவனை பிரிஞ்சாங்க.. மன நலம் சரியில்லாத மகளோடு பிறந்த வீட்டுக்கே திரும்பி வந்துட்டாங்க, திரும்பி வந்த தங்கச்சிக்கும், அவரது மக ளுக்கும் துணையாக கூட பிறந்த அண்ணன் இருந்தாரு. தங்கச்சி வாழ்க்கை இப்படி துயரமா ஆயிட்டேன்னு நினைச்சி, அவரும் கடைசி வரைக்கும் கல்யாணம் பண் ணிக்கல. கலைந்து போன கோலம் போல் ஆகிவிட் டது அந்த வீடு. குரங்குபோல் சேட்டை செய்கிற அப் பெண் வாழும், அந்த வீட்டிற்கு உறவுக்காரர்கள் அரி தாய் சென்றார்கள்.. பாசாங்கு செய்து பழகின சமூகம்.

அப்போதெல்லாம் சாதிய துவேஷம் குறையாத கிரா மங்கள். பண்ணையாட்கள் நிலைப்படித் தாண்டி வர மாட்டார்கள். அண்ணனும், தங்கையும் வயதுக்கு வந்த முரட்டுப்பெண்ணை பராமரிக்கும் சக்தியை உடலள வில் இழந்தனர். அதனால் சமூகம் பார்த்த சாதியை தூக்கி எறிந்தனர். தங்கள் வீட்டு மாட்டுத் தொழு வத்துக்கு வேலைக்கு வந்த நடவாளையும், அவளது கணவனையும் தங்கள் வீட்டு உறுப்பினர்களாக ஏற்றுக் கொண்டனர். அவர்கள்தான், அப்பெண்ணை பெரும் பாலும் பராமரித்தனர். அப்பெண்ணின் மொழி அவர்க ளுக்குப் புரிந்தது. அவர்கள் மொழியை அப்பெண் புரிந் துகொண்டாள். அவளை அன்றாடம் குளிக்க வைத்து, துணி மாத்தி, உணவு ஊட்டி தங்கள் மகளைப் போல் அந்த தம்பதியினர் பகலில் கவனித்து விட்டு, இரவு தங் கள் வீடு செல்வர். அவர்களின் உயரிய தொண்டுக்காக கொஞ்சம் நிலங்களை எழுதித் தந்தார்கள்.

இறுதியில் புற்றுநோய் வந்து அந்த பெரியம்மா இறந்தார். அதன்பின் ஓரிரு ஆண்டுகளில் அதாவது 35 வயதில் அந்தக் குரங்குப்பெண்ணும் இறந்துபோனார். அந்தக்

குடும்பம் இருந்த நினைவுகளே இப்போது அந்த ஊரில் பலருக்கு இருக்காது.

இந்தக் கதையை ஏன் சொல்லணும்? இதற்கு பின் னால் சாப நிகழ்வு ஒன்று இருக்கிறது. அதை எனது பாட்டி சொல்லியிருக்கிறார். அந்த மனநலம் குன்றிய பெண்ணின் தந்தை வழி கொள்ளுத்தாத்தா சம்பந்தப் பட்ட நிகழ்வு அது. அந்த தாத்தாவுக்கு சொந்தமாக பெரிய கொய்யா தோப்பு இருந்ததாம். அங்கே குரங்கு கள் சேட்டை அதிகம். அதுக்கு மருந்து வைக்கிறதும், குறவனை அழைத்து வந்து சுட்டு பிடிக்கிறதும், வலைக் கட்டி பிடிக்கிறதுமாக இருந்திருக்கிறார், தாத்தா.

அப்படியான குரங்கு கூட்டத்தில் ஒரு முரட்டு பெண் குரங்கு இருந்திருக்கிறது. பிடிக்க வருபவனைக் கண்டு பயந்து ஓடாமல் எதிர்த்து பாய்ந்து மனுஷனை விரட் டும் சக்தியோடு இருந்திருக்கிறது. அந்த குரங்கை ஒரு கௌரவ பிரச்னையாக கருதிக்கொண்டார்,தாத்தா. நீண்ட மாதங்களாக நீடித்த பிரச்னைக்கு முற்றுப்புள்ளி வைக்க முடிவு செஞ்சாரு தாத்தா. திருப்பதி பெரு மாளை வழிபடுகிற வழியில வந்த குடும்பம் என்பத தால அவரது கோபத்தை தடுத்து பார்த்து இருக்காங்க, அவரோட மனைவி. இருந்தாலும் அவர் பிடிவாதத்தை

மாத்திக்கல. வெளியூர்லேர்ந்து பிரபலமான குறவனை அழைத்து வந்து தோப்புல தங்க வச்சருக்காரு. வந்த குறவன்கிட்ட ஒரு கண்டிஷன் போட்டாராம் தாத்தா. 'குரங்க நீ உயிரோடு பிடிச்சித்தரணும். இத்தனை நாளா தோப்பையே அழிச்சி அட்டுழியம் செஞ்ச அந்தக் குரங்கை என் கையால சுட்டுக் கொல்லணும்' என குற வனிடம் சொல்லியிருக்கிறார். அவனும் அதற்கு ஒத்துக் கொண்டு வலை கட்டி வைத்தான்.

முதல்நாள் வலைகளை அறுத்த குரங்கு, மூணாவது நாள் காலையில வசமா சிக்கிக்கிட்டுது. குறவன் குஷி யில வேகவேகமா வந்து தாத்தாகிட்ட 'ஐயா குரங்கைப் பிடிச்சுச்டேன்' என

சொல்லியிருக்கிறான். அவரும் உற்சாகத்தோட தோப் புக்கு போயிருக்கிறார். வலையில சிக்குன குரங்கு ஆவேசத்தோடு சீறிக்கிட்டு இருந்துருக்கு. குறவன் துப் பாக்கியில மருந்து இடிச்சியிருக்கான். முரட்டு குரங்கு சிக்கிக்கிட்டதை கேள்விப்பட்ட பக்கத்து வயல்களி@ல வேலை செஞ்சவங்களெல்லாம் வேடிக்கை பார்க்க வந் துட்டாங்க. தாத்தா துப்பாக்கியைத் தூக்கி குரங்கை நோக்கி குறி வைக்கிறார். அதுவரை ஆவேசம இருந்த குரங்கு வலைக்குள்ளேயே எழுந்து நின்னு 'என்னை கொன்னுடாதீங்கன்னு' சொல்ற மாதிரி கையெடுத்து தாத்தாவப் பார்த்து கும்பிட்டுதாம். அதனுடைய விநோ தமான நடவடிக்கையை கவனித்த குறவன், 'ஐயா வேண்டாம்ங்க'ன்னு தடுத்திருக்கான். அதைக் கவனிக் காம அவரு சுட்டுட்டாரு. சினையா இருந்த அதோட வயத்துலேர்ந்து குட்டிகள் விழ ரத்தக் குழம்பாய் சுருண்டு விழுந்தது தாய் குரங்கு..

சில வருடம் கழித்து, 'குரங்கைச் சுட்ட அந்தத் தாத்தா மனசு சரியில்லாம இருந்துருக்காரு. ஜோசியக்கா ரர் சொன்னாருன்னு ஆஞ்சிநேயக் கோயிலுக்கு நிலம் எழுதி வச்சாங்களாம்.' என தன் நினைவுகளை, என்னி டம் கதைபோல் கூறினார், பாட்டி.

என் அடிமனதில் ஆழப்பதிந்த இந்த நிகழ்வை பிற் காலத்தில் கருங்குரங்கு போன்றவற்றை சாப்பிடக்கூடிய ஆதிவாசிகளைச் சந்திக்க நேர்ந்தபோது கேட்டிருக்கி றேன். "நீங்கள் கொல்வதற்காக குரங்கைப் பிடிக்கும் போது அதன் செய்கைகள் எப்படி இருக்கும்?, கையெ

டுத்து கும்பிட்டிருக்கிறதா?" அவர்கள் ஆச்சரியத்தோடு சொன்னார்கள்... "நாங்களும் குரங்கை வேட்டையாடியி ருக்கோம். அது எங்களுக்கு சாதாரண விஷயம். ஆனா நீங்க சொல்ற குரங்கு ஒரு அதிசயமுங்க. நாங்க அப்ப டியான குரங்கைப் பார்த்தது இல்ல. மனுஷனை மாதிரி கையெடுத்து கும்பிட்டிருக்கே. அதை கொன்னுருக்க கூடாது. அதுவும் குட்டி வயத்துல இருந்ததால உயிர் பிச்சை கேட்டு கும்பிட்டிருக்கு. அதை விட்டிருக்கணும். மீறி சுட்டது பாவம்ங்க. அதோடு சாபம்தாங்க... அந்த பெண்ணைப் பாதிச்சுட்டு" என்றார்கள்.

## 3.கண் கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம்



திருட்டு மாங்காய்க்கு தனி சுவையுண்டு என பேசுவார் பலர் உண்டு. திருட்டை குற்றமாக கருதாமல் மாங்காய் சுவையை, எச்சில் ஊற வர்ணிப்பர். அது தன் சாமர்த் தியம் என வாதிடுவார். நான் திருடுவதை கண்டுபிடிக்க வேண்டிய திறமை முதலாளிக்கு இல்லாதது, அவரது குறை, அதற்கு நான் ஏன் வருந்த வேண்டும்? என நூதனமாக வாதிடுவர். முதலாளி அறியாமல், அவருக்கு வலிக்காமல் அவர் பையை சுரண்டுவது என்னுடைய

சாமர்த்தியம் அல்லவா? அதை நீங்கள் பாராட்ட வேண்டாமா? என்பர் சிலர்.

அது அறம் இல்லையே. தர்மநெறிப்படி தவறு இல்லையா? என வினவினால் நம்மை ஏளனமாக பார்ப்பர். அவர்கள் பாவ புண்ணியங்களில் நம்பிக்கை இல்லாதவர்கள். பிறரின் பாவ, சாப விளைவுகளை உணராதவர்கள். இத்தகையவர்களை நான் பரிதாபமாக பார்ப்பதோடு சரி.இத்தகையவர்கள் உணராத ரகசியம் ஒன்று உண்டு. தாங்கள் தப்பித்துக்கொண்டதாக நினைத்து மாயையில் மயங்குகிறார்கள். உண்மையில் தப்பிக்கவில்லை. இத்தனை சொத்தும் தகாத வழியில் யாருக்காக பாடுபட்டு சேர்க்க நினைக்கிறோர்களோ, அவர்களுக்கு பின்வரும் அவர்களது தலைமுறையினர், அத்தனை பாவ, சாபத்துக்கும் வரி கட்டுகிறார்கள், பாரம் சுமக்கிறார்கள் என்பதை உணராதவர்கள். இரண்டு, மூன்று தலைமுறை கணக்கை பார்க்கத் தெரிந்தவர்களால்தான் இந்த உண்மையை புரிந்து கொள்ள முடியும்.

அறை கதவு திறந்தது. வெளிச்சமும், வெளிகாற்றும் உள்ளே நுழைந்தது. பெரியவர் முகத்தில் மெல்லிய புன்னகை. அன்றாடம் பணிவிடை செய்யும் தாதி பெண் மணி வந்திருந்தாள். “ஐயா எப்படி இருக்கிறீங்க?” கேட்டபடியே கர்சீப்பால் தன் மூக்கை நாசூக்காக பொத்தினாள். அறை முழுதும் பரவி இருந்தது சீழ்நாற்றம். கையோடு கொண்டு வந்த மருந்து, பேண்டேஜ் துணிகளை மேஜையில் வைத்தாள். “சீக்கிரம் எமன் கூப்பிட்டுகிட்டான்னா போதும்ன்னு இருக்கு தாயீ” பலகீனமாய் சொன்னார் பெரியவர். அவரது கண்கள் ஓரம் நீர் கசிந்த சுவடு தெரிந்தது.

"தெய்வம் நல்லவங்களுக்குத்தான் சோதனை கொடுக்கும்ன்னு சொல்லுவாங்க, என்ன செய்றது?” ஏதோ ஆறு

தல் சொல்லியபடி சிறுநீர் இருந்து வைத்திருந்த புட்டியை எடுத்து ஊற்றிவிட்டு பினாயில் கலந்த தண்ணீரில் அலசினாள், தாதி. வெந்நீரில் துணியை நனைத்து பெரியவரின் முகம், முதுகு என துடைத்துவிட்டாள்.

“நீ என்ன பாவம் செஞ்சியோ இந்தக் கிழவன் மூத்திரத்தை கழுவ வேண்டி இருக்கு” சலிப்பாய் பெரியவர் பேச...,

“ஐயா எனக்கு எந்த கஷ்டமும் இல்ல. நீங்க சங்கடப்படாதீங்க.” என்றவாறே பணிவிடைகளைத் தொடர்ந்தாள் தாதி.

அப்போது கையெடுத்து கும்பிட்டவாறே பெரியவர் சொன்னார் “சங்கடம் இருந்தாலும் பொறுத்துக்கம்மா. வராமா மட்டும் இருந்திராதே. ஆண்டவன் நாட்களை எண்ண ஆரம்பிச்சுட்டான். சீக்கிரமே உனக்கு விடுதலை கிடைச்சுடும்.” மனம் வெதும்பி பேசினார். பெரியவரின் வாயில் கோதுமை கஞ்சியை ஊற்றினாள், தாதி.

“இராத்திரியெல்லாம் காலு இரண்டும் நமைச்சல் தாங்கல.” என்றபோது வலியின் கொடுரம் பெரியவரின் கண்களில் நீர் கோர்த்தது. “இன்னைக்கு கட்டு மாத்தி கட்டிரலாம்” என்றபடி படுக்கையில் கிடத்திருந்த கால்களின் ஒன்றின் பேண்டேஜைப் பிரித்தாள்.

சீழ்நாற்றம் வயிற்றை குமட்டியது. வீங்கி வெடித்திருந்த காலில் வடிந்த சீழையும், இரத்தக் கசிவையும் பஞ்சால் துடைத்தாள். அடுத்து அவள் செய்தது, உடைமையுடையோர் செய்ய தயங்கியது. மிகுந்த சகிப்பு தன்மையோடு மூக்கு கண்ணாடியை போட்டுக்கொண்டு காலில் உள்ள புண்களில் அங்கொன்றும் இங்கொன்றுமாக நெளிந்த சிறு புழுக்கள் ஒவ்வொன்றையும் பொறுமையாக இடுக்கியால் எடுத்து அப்புறப்படுத்தினாள். காலில் மீண்டும் மருந்து தடவி, பேண்டேஜ் சுற்றினாள். இரண்டு

காலும் இவ்வாறு கட்டு மாற்றி, கட்டி முடிக்கும் போது பெரியவர் கண் அசந்திருந்தார். “ஐயா மதியமா வாரேன்” என்று சொல்லியபடி அவரின் பதிலுக்கு காத்திராமல் அறைக்கதவை சத்தமில்லாமல் மூடியபடி வெளியேறி னாள் தாதி.

சரி, இந்த பெரியவர் யார்?

என் வாழ்க்கையில் சொக்குத்தாத்தா என்று ஒரு முதி யவரை என் திருமணத்திற்கு முன்பாக சிறிது காலம் சந்தித்து பழகியிருக்கிறேன். அவர் பல்வேறு அபூர்வ மான மனிதர்களோடு பழகியவர். பல அபூர்வமான விஷ யங்கள் எல்லாம் என்னிடம் பகிர்ந்திருக்கிறார். அப்படி அவர் அறுபதுகளில் நடந்ததாக சொன்ன ஒரு நிகழ்வு தான் இந்த பெரியவரின் கதை.

பெரியவருக்கு சொந்த ஊர் கும்பகோணம் பக்கம். சின்ன வயசுல மும்பைக்கு ஓடிப் போய்ட்டாரு. அங்க போய் ஒரு கடையில எடுபிடியாய் வேலைக்கு சேர்ந்து முன்னேறியிருக்காரு. ஒரு பதினைந்து வருஷத்துக்கு அப்புறம் பெரும் பணத்தோடு சொந்த ஊருக்கு திரும்பி வந்தவரு, இங்கேயே பட்டு ஜவுளி வியாபாரம் ஆரம் பிச்சிருக்காரு. கல்யாணம் ஆகி, அவருக்கு மூணு பிள்ளைங்க. அவங்களையும் தொழில்ல நல்ல நிலை மைக்கு ஆளாக்குனாரு. சின்ன வயசுலேர்ந்து காசு காசுன்னு அலைஞ்சதால உடம்ப பார்த்துக்கல. இப் பமாதிரி சர்க்கரை நோய்க்கு ஆங்கில மருந்து வராத காலம். சர்க்கரைநோய் முத்தி நடமாட்டம் இல்லாம ஆயிட்டாரு. கண்பார்வையும் போயிடுச்சு. மனைவியும் முன்னாடியே போயிட்டாங்க.

மருமகள் யாரும் சீக்காளி மாமனாருக்கு பணிவிடை செய்ய முன்வரல. அதனால பிள்ளைங்க என்ன பண் ணிடான்னுங்க. புழக்கம் இல்லாம கிடந்த ஒரு வீட்

டுல கொண்டு போய் கிடத்திபோட்டுட்டு, பாத்துக்க ஒரு தாதிய வேலைக்கு வைச்சுட்டாங்க. அப்பாவ பாக்க போனாலே நாற்றம் அடிக்குதுன்னு யாரும் பாக்கவே போறது இல்ல. அப்படியே பாக்கபோனாலும் அப்பா சீக்கு நமக்கு ஒட்டிக்குமோன்னு பயம்.

இப்படி மரணத் தருவாயில் தனித்து விடப்பட்டு, நாளும் நரக வேதனைப்படும் பெரியவர் வாழ்க்கையில நடந்த நிகழ்வு ஒன்று இப்போது அசுரனை போல் அவ்வப்போது மனக்கண்ணில் வந்து நிழலாடுகிறது. நெஞ்சில் முள் ளாய் வந்து குத்துகிறது. மெல்லவும் முடியாமல் விழுங்க வும் முடியாமல் வேதனையில் விம்மினார்.

அந்த நிகழ்வை சொக்குத்தாத்தா குறிப்பிடும்போதே அவரின் உடம்பிலும் ஓர் ஆவேசம் எழுந்ததைப் பார்த் தேன். இளமையில் மும்பைக்கு ஓடிபோய், ஒருவழியாய் ஜவுளிக்கடை ஒன்றில் வேலைக்கு சேர்ந்தார், இல் லையா? அந்த மொதலாளியின் நம்பிக்கையைப் பெற்று கடையில் முக்கிய இடத்துக்கு முன்னேறி வந்தவருக்கு, தனியாய் தொழில் செய்யும் ஆசை துளிர்த்திருக்கு. அதுக்கு வேகமாய் 'முதல்' சேர்க்க முடிவு செய்ஞ்சாரு. மனசை கல்லாக்கிகிட்டு, மெல்ல முதலாளிக்கு நம் பிக்கை துரோகம் செஞ்சாரு. ஒருநாள் முதலாளி விழித் துக்கொண்டார்..

"உன்னையெல்லாம் எப்படி நம்பினேன். துரோகம் பண் ணிட்டியேடா பாவி. என் வயிறெறிந்து சொல்றேன், நீயெல்லாம் கடைசி காலத்துல புழு புழுத்துதான் சாவே" வயதான முதலாளியின் வார்த்தைகள் அவரை கடையில் இருந்து வெளியே தள்ளின. முதலாளியின் வேதனை வார்த்தைகளை அந்தவயதில் வீரியம் அற்ற தாக அலட்சியப்படுத்தினார்.

காசு அகக்கண்ணை அன்று மறைத்தது. இறுதிக்கா லத்தில் நிஜக் கண் ஒளி இழந்தது. சாபம் அவர் உடலை அரித்தது. உடம்பில் புழுக்கள் நெளிந்தன. என்ன செய்ய? எல்லாம் முடிந்துவிட்டது. கண்கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம் செய்து என்ன பலன்? இறுதியில் தவறை உணர்ந்து எதை மீட்க?

"பெரியவர், மறையும் போது ஏதும் சொன்னாரா?" என்று தாதியிடம் கேட்டனர் மருமகள்கள்..."என் முதலாளி சாபம் பலிச்சுட்டுன்னு மட்டும் ஐயா அடிக்கடி சொன் னாங்க.!" என்றாள்.

## 4.வட்டி கணக்கு!



சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன் 'பை பாஸ்' சர்ஜரி இல்லை. ராவுத்தருக்கு நெஞ்சு வலி என மருத்துவம னையில் சேர்த்திருந்தார்கள். அந்தக் காலத்தில் கீழத் தஞ்சை மாவட்டத்தில் ரைஸ் மில் ராவுத்தரைத் தெரியா தவர்கள் இருக்க முடியாது.

ஏராளமான சொத்துகள். பெரிய அரிசி ஆலை என வாழ்ந்தவர். இரு மனைவிகள். நிறைய பிள்ளைகள் உண்டு. ராவுத்தர் இத்தனைச் சொத்துகள் சேர்த்ததே ஏதோ மனைவி மக்களை பிரிந்து, வெளிநாடு சென்று, துன்ப துயரங்கள் பட்டு, சம்பாதித்தது அல்ல. இஸ்லாம் மார்க்கம் மிக கடுமையாக எதிர்க்கும் வட்டித் தொழில் செய்துதான் சம்பாதித்தார். இதனால் மார்க்க நெறி படி வாழும் இஸ்லாமியர்கள் அவரோடு உறவு சம்பந்தங்கள்

கொள்ளாமலும், அவர் வீட்டு விசேஷங்களில் உண்ப தையும் கூடத் தவிர்த்தார்கள். ராவுத்தர் தன் மீதான விமர்சனங்கள் குறித்து ஒருநாளும் பொருட்படுத்துவ தில்லை.

மருத்துவமனையில் உடன் உதவிக்கு கணக்கப் பிள்ளை சோமு இருந்தார். "என்ன பிள்ளை, டாக்டர் என்ன சொல்றாங்க? வூட்டுக்கு எப்ப போவலாம்?" என் றார். "உடம்புக்கு ஓய்வு இல்லாம இருந்துட்டிங்க. மில் லுக்கு போனா ராவு பகலாக வேலவேலன்னு அங்கேயே கிடப்பீங்க. நாலு நாள் இருந்து நிதானமா பார்த்துட்டு போகலாம். மில்லு தவுடு, தூசி வேற உங்களுக்கு ஒத்து கலைன்னு டாக்டர் சொல்லுறாரு." என்றார் கணக்கப் பிள்ளை.

அமைதியாக கேட்டுக்கொண்டவர், அந்த பன்னி ரெண்டு ஏக்கரை பத்திரம் பதிஞ்சிடனும், கணக்க பிள்ளை. என்றார். "எல்லாம் எழுதி ரெடியா இருக்கு. நீங்க ஊருக்கு வந்ததும், தஞ்சாவூர் போய் பதிந்தி டலாம்" என்றார் பணிவாய்... முப்பது வருஷத்துக்கு மேலாக ராவுத்தரிடம் வேலை செய்கிறார், கணக்கு பிள்ளை. ராவுத்தர் சொத்துக்கள் எங்கெல்லாம் இருக்கு என்ற விபரம், அவர் மகன்களை விட கணக்குப்பிள் ளைக்குத்தான் துல்லியமாகத் தெரியும்.

வெற்று பத்திரத்தில் கையெழுத்து வாங்கிக்கொண்டு நிலத்தை,சொத்தை அடமானமா வைத்துக்கொண்டு கடன் கொடுப்பாரு இவரிடம் அடமானம் வைத்த விவ சாயிகள் பல பேர் மீட்க முடியாமல் நிலத்தை,வீட்டை, கொல்லையை இழந்ததுதான் மிச்சம். எத்தனையோ பேர் மில் வாசலில் நின்று மண்ணை வாரி இறைத் துள்ளார்கள். எதற்கும் பதற மாட்டர் ராவுத்தர். 'வாங்கிய கடனை, கொடுக்க வக்கு இல்ல. சாபம் கொடுக்கி

றியோ" என பதிலுக்கு எகிறுவார். அவரிடம் மனிதா பிமானம், கருணையும் விலைக்குக்கூட கிடைக்காது பாதுகாப்பிற்கு அடியாட்கள் உண்டு. குதிரைப் பூட்டிய ரேக்ளா வண்டியில் பயணம் செய்வார்.

யாரும் அஞ்சக்கூடிய தோற்றம், ராவுத்தருக்கு.... எல் லாம் களையிழந்து விட்டது. சோர்வாக மருத்துவ மனையில் படுத்திருந்தார். நர்ஸ் அவ்வப்போது வந்து மாத்திரைகள் கொடுப்பதுமாக இருந்தார்.

மருத்துவமனையில் இரவு பகலாக துணைக்கு கணக் கபிள்ளைதான். நடு இரவு... கட்டிலுக்கு கிழே சற்றே கண் அசந்திருந்தார், பிள்ளை... அந்நேரம் கட்டில் வேக மாய் அசையும் அதிர்வில் தூக்கம் கலைந்தார். சட்டென பதற்றமாய் வாரி சுருட்டி எழுந்தார். ராவுத்தருக்கு கண் முழிகள் எல்லாம் பிதுங்கியபடி முகம் அகோரமாக மாறி யிருக்க...மார்பை அழுத்திய படி துடித்தார் .

"என்ன பண்ணுது பாய்" எனக் கேட்டபடியே டாக்டரை கூப்பிடக் கிளம்பினார், கணக்கபிள்ளை. அதற்குள் வித்தியாசமான ஓசை கேட்ட நர்ஸ், டாக்டர் எல்லாம் அறைக்கு வந்தார்கள். அப்போதுதான் அந்தக் காட்சி... மூச்சி திணறியபடியே உடம்பைக் குலுங்கிய நிலை யில் வாந்தியெடுப்பதுபோல் வாயைத் திறந்தார் ராவுத் தர். பம்புசெட்டிலில் இருந்து பலம் கொண்ட வேகத் தில் தண்ணீர் வெளியேறுவதைபோல ... அவர் வாயில் இருந்து இரத்தம் ஒரு வித ஓசையோடு அறை சுவற்றில் மோதி வளிந்தது. தலையணையில் பொத்தென சாய்ந் தது ராவுத்தர் உடல். டாக்டர் சொன்னார்... "ஹார்ட் உள் ளேயே வெடித்துவிட்டது. இட்ஸ் வெரி ரேர். இப்படி நேர் வது ஓர் அபூர்வம்" என்றார்.

ராவுத்தர் மறைவுக்குப் பிறகு கணக்கப்பிள்ளை பெரும் மனப் பாதிப்புக்கு உள்ளானார். காவி உடுத்தினார்.

தாடி வளர்த்தார். திருவண்ணாமலையில் யாசகம் பெற்று வாழ்ந்தார்.

ராவுத்தர் பிள்ளைகளில் சிலர் மளிகை, பேன்சி ஸ்டோர், செருப்புக் கடை என வருஷத்துக்கு ஒரு தொழில் செய் தனர். எதுவும் லாபம் தரவில்லை. இருவர் வெகு ளிகளாக வாழ்ந்தனர். எந்தத் தொழில்களும் சித்தி பெறவில்லை. ஓரிருவர் வெளிநாடு போனர். உடன் திரும்பினர். சொத்துகளை விற்று சாப்பிட்டனர். நிலங் கள் பல வேலிக்கறுவைகள் மண்டின. தங்கள் இடங்கள் எங்கு இருக்கின்றன? என்பதே சரிவர தெரியாமல் பல சொத்துகளை ராவுத்தர் சந்ததி இழந்தது. ராவுத்தர் பழி பாவத்தால் சேர்த்த சொத்துகள் அடுத்த முப்பது ஆண் டுகளில் தண்ணீரில் சேர்த்த உப்பு மூட்டைகள் போல கரைந்தன.

கணக்கபிள்ளை 'தன் கடைசி காலம் வரை வட்டித் தொழில் செய்யாதே' என பலருக்கு உபதேசம் செய்தார். அவருக்கு ஒரு மறக்க முடியாத காட்சியாக, ராவுத்தரின் மரண நிகழ்வு இருந்தது. ராவுத்தர் மரணத்திற்கு பதி னெட்டு வருடத்திற்கு முன்பாக நடந்த நிகழ்வு ஒன்றை கணக்கப்பிள்ளை பலரிடமும் அதிர்ச்சியோடு சொல் வார்.. 'எல்லாம் அந்த விதவைப்பெண்ணோட சாபம் தான்,' என்று நிறுத்திக்கொள்வார்.

அது என்ன சாபம்?

ஒரு விதவைப் பெண், தன் மகனின் மருத்துவ செல வுக்காக, ராவுத்தரிடம் விவசாயம் செய்த நிலத்தை அட மானம் வைத்திருந்தார். அந்தபெண்ணால் நிலத்தை மீட்க முடியாமல் தவித்தார்., இனி அவகாசம் தர முடி யாது. வட்டிக்குமேல் வட்டி வளர்ந்துவிட்டது. அடமானம் வச்ச நில மதிப்புக்கு மேல் நீதான் காசு தரணும் என்றார்,

ராவுத்தர். அவரது அடாவடித்தனத்தை எதிர்க்க முடி யாத அவ்விதவைப்பெண் நிலத்தை இழந்தார்.

"வயித்து கஞ்சிக்கு வச்சியிருந்த நிலம் சாமி" என அந்தப்பெண் கண்ணீர் மல்க ராவுத்தரிடம் மன்றா டிய போது... விதவைப்பெண்ணிடம் கேட்க கூடாத ஓர் வார்த்தை கேட்க... அதுவரை தணிவாய் பேசிய அப் பெண் அவேசமாய் சொன்னாள்... "இவ்வளவு அநி யாமா எங்க வயித்துல அடிச்சி சொத்து சேர்க்கிறீயே, நீ நெஞ்சி வெடிச்சிதான் சாவே.' இது சத்தியம்" என்றவள், பின்னாட்கள், தான் விவசாயம் செய்து, ராவுத்தரிடம் இழந்த அந்த நிலத்திலேயே மருந்து குடித்து மாண்டும் போனாள்.

அன்று அவள் சொன்ன வார்த்தை, பதினெட்டு ஆண் டுகள் கழித்து பலித்ததைக் கண்ட கணக்கப்பிள்ளை, பலரிடமும் இச்சம்பவத்தை சொன்னார்.. ராவுத்தரிடம் தான் பெற்றது சம்பளம் அல்ல. பாவ கூலி! என்பாராம். தான் வாங்கிய பிழைத்த அப்பாவ கூலி தன்னையும், தனது சந்ததியையும் பாதிக்க கூடும் என அஞ்சியே, ஒரு சாமியாரின் கருத்துபடி குடும்ப வாழ்வைத் துறந் தாராம். காவி கட்டி திருவண்ணாமலை கிரிவலப்பா தையில் அமர்ந்து,, நாளும் சிவனிடம் மண்டியிட்டு தான் செய்த பாவத்தை மன்னிக்கும் படி. வேண்டினார். பசிக்கு கையேந்தினார், யாசகம் பெற்றார்.

## 5.இரண்டு தாய்!



அது நடந்து ஐம்பது ஆண்டுகளுக்கு மேல் ஆகி விட்டது. இன்றைய திருவண்ணாமலை மாவட்டத்தில் உள்ளது அந்த கிராமம். வியாழக்கிழமையானால் திரு வண்ணாமலை சந்தைக்கு செல்வார் சாந்தாராம். தனது வயலில் விளைந்தவற்றை வாரச்சந்தையில் விற்க செல் வார். அப்படியான சந்தையில் மற்றொரு வியாபாரியாக வருவார் முத்து ஆசாரி. அவருக்கு உதவியாக அவரது மகள் மோகனா.

சாந்தாராமும், மோகனாவும் பருவ வயதினர்.. சந்தை யில் ஒருவர் கண்ணில் ஒருவர் பட்டுக்கொண்டார்கள். இருவரும் வியாழக்கிழமைகளுக்காக காத்திருந்தனர்.. ஏக்கம் கொண்டனர். கண்களால் பேசினர். சொற்க ளால் பேசினர். காதல் எனும் யாகத் தீயை இருவ ரும் இணைந்து வளர்த்தெடுத்தனர். மாதங்கள் ஓடின. ஒருநாள் காமம் இருவரையும் கைது செய்தது. தேம்பித் தேம்பி அழுதாள் மோகனா. சத்தியம் செய்தார் சாந்தா ராம். இருவரும் வேறு வேறு சாதியாற்றே! கல்யாணம் நடக்குமா? கவலை கொண்டாள் மோகனா. "நான் வீட் டிற்கு ஒரே மகன், என் விருப்பத்தைத் தடுக்க மாட்டார் கள்" என்றார், சாந்தாராம். விதி யாரை விட்டது?

ஆனால், அடுத்த வியாழக்கிழமையே அவர் சந்தைக்கு வரமுடியாமல் போனது. சாந்தாராமின் தந்தை திடீர் என சுகமில்லாமல் ஆனார்.. வைத்தியர் வீட்டுக்கு அலைந்தார் சாந்தாராம். போன் வசதி இல்லாத காலம். மோகனா என்ன நினைப்பாரோ? என ஏங்கினார்.

சாந்தாராமின் ஊர் பெயர் மட்டும் தான் மோகனாவுக்கு தெரியும். அவள் ஊரில் இருந்து நாற்பது கி.மீ தொலைவு சாந்தாராம் கிராமம். தனது காதலை வீட்டில் சொல்லி

சாதிக்கும் சக்தி அவளுக்கு இல்லை. 'நாம் ஏமாற்றப் பட்டு விட்டோமோ?'- கலங்கினாள். 'ச்சே அப்படி இருக் காது சாந்தாராம் நல்லவர். நிச்சயம் ஏமாற்ற மாட்டார், சீக்கிரம் வருவார்.' கடவுளிடம் பிரார்த்தனை செய்தார்.

தாய்மாமன்கள் மூவர் சாந்தாராமுக்கு உண்டு. மூவரும் அனைத்திலும் மிக வலிமையானவர்கள். ஒன்று கூடி ஒரு முடிவெடுத்தனர். மைத்துனருக்கு மரணம் நேருவ தற்கு முன் சாந்தாராமை மாப்பிள்ளை ஆக்க முடிவெ டுத்தனர். கடும் இக்கட்டுக்கு உள்ளானார், சாந்தாராம். மாமன்கள் இருவரிடம் திருமணம் வயதில் மகள் இருந் தனர். குலசாமியிடம் சீட் குலுக்கிப்போட்டு மணமகளை முடிவெடுத்தனர். பலியாடு போல் நின்றார். உள்ளூரில் எளிமையாக திருமணம் முடிந்தது.

மோகனாவுக்கு துரோகம் இழைத்துவிட்டோம் என புழுங்கினார். இதுதான் நமக்கு எழுதிய விதியோ என மெல்ல தேற்றிக்கொண்டார். நலிவுற்றிருந்த அப்பா இறந்துபோனார். சாந்தாராமுக்கு ஆண் குழந்தை பிறந் தது.

மூன்றாண்டுகள் கடந்து விட்டிருந்தது. ஒருநாள் வய லில் சாந்தாராம் உழுதுகொண்டிருந்தார். வீட்டில் சாந் தாராமின்,மனைவியும், சாந்தாராமின் தாயும் இருந்தார் கள் அது ஒரு மதிய நேரம். சாந்தாராம் வீட்டு வாசலில் எப்படியோ, யாரை விசாரித்து வந்து நின்றாள், மோகனா. சாந்தாராமுக்கு கல்யாணமும் ஆகி, குழந்தையும் உள் ளது என்பதை வந்த இடத்தில் அறிந்து வெகு சினம் கொண்டிருந்தாள்.

"சாந்தாராம்...ம் வெளியே வா" என ஆங்காரமாய் பெருங்குரலில் கத்தினாள். ஓசை கேட்டு அக்கம்பக்கத் தில் உள்ளவர்கள் கூடினர். வீட்டில் இருந்து, இடுப்பில் குழந்தையோடு எட்டிப்பர்த்த சாந்தாராமின் மனைவி

அச்சமடைந்தாள். தன் மாமியாரை எழுப்பி அழைத் தாள். சாந்தாராமின் தாய்க்கும், மோகனாவிற்கும் வாய் சண்டையானது. தகவல் அறிந்து சாந்தாராமின் தாய் மாமன்கள் ஓடிவந்தனர். "யாரிடி கள்ளி. தேவடியா..." என கடும்சொல் கூற மற்றொரு தாய்மாமன் மோகனா வின் தலை மயிரை பிடித்து தரதரவென இழுத்தார். சாந்தாராமின் தாய் விளக்கமாற்றால் மோகனா முதுகில் அடித்தாள். இரத்த காயங்களோடு வெகு தூரம் அழைத் துச்சென்று எச்சரித்து, பஸ் ஏற்றி திருப்பி அனுப்பினர்.

நடந்தவற்றை அறிந்த சாந்தாராம் மனம் வெதும்பினார். யாரிடமும் எதுவும் பேசவில்லை. மவுனம் காத்தார். குடும்பத்தில் அமைதி குலைந்தது. ஏதோ பெயருக்கு வாழ்க்கையானது. 'வெளியூர்ல வப்பாட்டி வைச்சிருந் தியே' என கட்டிய மாமன் மகளோ பொழுதுக்கும் குத் திக்காட்டி பேசினாள். அடுத்த சில ஆண்டுகளில் பாம்பு கடித்து இறந்தார், சாந்தராம்.

சாந்தாராமின் தாய்மாமன்கள் இன்னதென்று கார ணம் இல்லாமல் பத்தாண்டு காலங்களில் வரிசையாக இறந்து போனார்கள். சாந்தாரமின் மகன் வளர்ந்து பெரியவனாகி அரசியலில் நுழைந்து அதிகாரம் மிக்க வராக உருவெடுத்து, பின் ஓ#ந்திருந்தார். ஓர் விபத்து @பால் எங்களுக்குள் ஏந்திப்பு நிகழ்ந்தது..

இன்றைக்கு அவர் வாழ்க்கை செல்வ செல்வாக்குமிக் கது. ஒன்றுக்கு நான்கு கார் நிற்கிறது. சேவகம் செய்ய ஆட்கள் நிற்கிறார்கள். இந்த உலகில் அடைய முடி யாதது என்று எதுவும் இல்லை. சொடுக்கினால் எந்த தேசத்துப் பெண்ணையும் அழைத்து வர ஆட்கள் உண்டு. எந்த நாட்டு மது வேண்டும்? கேட்டால் மதி யம் மேசையில் இருக்கும். எல்லாம் இருந்து என்ன? வெளியில் சொல்ல முடியாத அழுத்தம், அவர் மனதில்

உறைந்து கிடக்கிறது. மகன், மகள் உண்டு. மனைவி படித்தவள், பண்பானவள். தம்பதிகளுக்குள் சண்டை சச்சரவு கிடையாது. ஆனாலும் தொண்டைக்குள் முள் சிக்கியவராக தவித்தார். நீண்ட தயக்கத்துக்கு பின்ன @ர என்னோடு பகிர்ந்து கொண்டார்.

மனைவியோடு தம்பத்திய உறவு கொண்டு இருபது ஆண்டுகளுக்கு மேல் ஆகிறது. என பெருமூச்சு விட் டார். "வீட்டில் தனித்தனி படுக்கை அறை! ஐயா பெட் ரூம், அம்மா பெட்ரூம் என்பார்கள் பணியாட்கள், அவர் களும் அறியாத இரகசியம் இது!" என்றார்.

நன்றாக சென்ற இல்லறம் ஒருநாள் ஒரு சொல் லில் முறிந்தது. இன்றும் வெளி உலகுக்கு மனமொத்த தம்பதி. சமூகத்தில் எல்லா நிகழ்ச்சிகளிலும் ஒன்றாக பங்கெடுப்போம், ஒன்றாக ஆலயம் செல்வோம். என் விருந்தினர்களை நன்றாக உபசரிப்பார், என் மனைவி. இரவானால் கண்களில் ஒரு நெருப்பு பிழம்பு காட்டு வார். "ம்... தொடாதே" கட்டளையிடுவார். 'சந்திரமுகி' போல் மாறிவிடுவார். அந்த கணத்தில் அவளாக, அவள் இருப்பதில்லை. பல நேரம் அவளைப் பார்த்து நான் பயந்திருக்கேன். உலகில் தலைசிறந்த மனோசிகிச்சை நிபுணர்களிடம் அழைத்துச் சென்றேன். அவர்களா லும் இப்பிரச்சைனை தீர்க முடியவில்லை. சில மருத் துவர்கள் பாலியல் உணர்வு தூண்டப்படும் மாத்திரை களை உணவில் கலந்து கொடுக்கச் சொன்னார்கள். மாத்திரை கலந்த அந்த பாலோ, உணவோ அனிச்சை செயலாக அன்றைய தினம் சாப்பிட மாட்டாள், தூக்கி எறிவாள்.. காலையில் இயல்பாக இருப்பார். அன்பாக பேசுவார்.

எங்களது, இந்த இரட்டை வாழ்க்கை என் பிள்ளை களுக்கு தெரியாது, உறவினர்களுக்கு தெரியாது. என்

வாழ்க்கையில் வேறு சில பெண்களைக்கூட கடந்து விட்டேன். தலை நிறைய மல்லிகைப்பூ வைத்து பட்டுப் புடவை கட்டி மனைவி எனும் பத்தினி அருகில் நாளும் படுத்துறங்க ஆசைப்பட்@டன். அந்த பாக்கியம் எனக்கு இல்லாமல் போனது ஏன்? இதை அறிய முடியுமா? எனக் கேட்டார்.

நீண்ட நேரம் பேசினோம். தலைமுறைகளை கடந்து பேசினோம். அப்போது அவரையும் அறியாமல் தனது தந்தை வாழ்க்கையில், சம்பந்தப்பட்ட அந்த மோகனா சம்பவத்தைச் சொன்னார். அந்நேரம் பெரும் அதிர்வு எனக்குள் ஏற்பட்டது. உடனே மோகனா பற்றி விசாரி யுங்கள் என்றேன்.

பரபரபடைந்தார். வேற ஆட்கள் மூலம் வேற காரணங் களைக் கூறி மோகனா குடும்பத்தை தேட வைத் தார். இரண்டு நாட்களில் மீண்டும் என்னை தொடர்பு கொண்டார். மோகனாவின் உடன் பிறந்த அண்ணன் மகனை மட்டுமே கண்டுபிடிக்க முடிந்ததாகவும், அவர் வழியே அறிந்த தகவல்களை என்னோடு பகிர்ந்தார். மோகனா திருமணமே செய்து கொள்ளவில்லை என் றும், சித்த பிரமை பிடித்தவர் போல் நடந்துகொண்டார் என்றும், ஏன் அப்படி ஆனார் எனும் காரணம் குடும் பத்துக்கே தெரியாது என்றும், ஒரு வேளை மட்டுமே உணவு உட்கொண்டு, உடலை வருத்தி நாற்பது வயதிற் குள்ளாகவே மரணமுற்றார் என அண்ணன் மகன் வழி அறிந்துகொண்டதைச் சொன்னார்.

'மோகனாவின் வேதனையும், விம்மலும் தான் சாபமாக உங்கள் குடும்பத்தை ஆளுகிறதோ' என அடியேன் ஐயப்படுவதாக உணர்த்தினேன். அதற்கு அவர் "என் வாழ்க்கை முடிந்து விட்டது. இந்த சாபம் என பிள்ளை

கள் வாழ்க்கையிலும் தொடரக்கூடாதே" என வேண்டி னார்.

அதற்கு பரிகாரமாக அவரை ஒரு உறுதிமொழி எடுக்க வைத்தேன். 'இன்று முதல் உங்கள் தந்தையோடு ஒரு நாள் கலந்தாலும், கற்பு நெறி தவறாமல், காலம் முழுதும் திருமணம் செய்து கொள்ளாமல் துறவி போல் வாழ்ந்த மோகனா அம்மாவும் உங்களுக்கு தாய் தான். அம வாசை தோறும் பெற்ற தாய்க்காக தாங்கள் விரதமிருப் பது போல மற்றொரு தாயாக மோகனாவையும் பாவியுங் கள். உங்கள் காலம் முடியும் வரை உங்கள் முன்னோர் வழிபாட்டில் இரண்டு தாய்மார்களுக்கும் அமவாசை வழிபாடு செய்யுங்கள்,' என்றேன். அப்படியே அவரும் பின்பற்றினார். அந்த குடும்பத்தில் சாபம் விலகியது.

## 26 வயசு!




காவல்துறையில் செல்வாக்கு பெற்ற உயரதிகாரிகள் பார்த்திருப்பீர்கள். செல்வாக்கு பெற்ற ஏட்டை கேள் விப்பட்டிருக்கிறீர்களா? ஏட்டு சாமி மாவட்டம் முழுதும் பிரபலம். சுருக்கமாக சொன்னால் காக்கி உடையில் ஒரு கிரிமினல். டிப்பார்ட்மெண்டில் மேல் அதிகாரிகள்

கூட இவரை பகைத்துக்கொள்ள மாட்டார்கள். இவரது மொட்டை கடுதாசிகளுக்கு...

சட்டையில் ஸ்டார் குத்திய பலர் அந்தஸ்து இழந்திருக் கிறார்கள். ஸ்டேசன் மாமூல் வசூலிக்கும் பொறுப்பை எப்பொழுதும் தன் வசமே வைத்திருப்பார். முறையாக பங்கு பிரிப்பார்.

எந்தக் கடையில் சாமான் வாங்கினாலும் ஓசிதான். ஒரு மளிகைக் கடைக்காரர் தெரியாமல் பில்லுக்கு பணம் கேட்டு விட்டார். அவமானமாகிப் போனது ஏட்டுக்கு... பாதி பணம் கொடுத்தார். "மீதி நாளைத் தருகிறேன்" என்றார்.

அந்த கடைக்கு, அடுத்த நாள் மஃப்டியில் இரண்டு நபர் கள் வந்தார்கள். "உங்க கடை மேல புகார் வந்திருக்கு..." என்றபடி தங்கள் அடையாள அட்டையைக் காட்டினார் கள். 'உணவு கலப்படத் தடுப்புப் பிரிவு அதிகாரிகள்' என்றது அடையாள அட்டை. கடையில் இருந்து சமை யல் எண்ணெய் சாம்பிள் எடுத்துச் சென்றார்கள். அந்த வழக்கை முடிக்க அந்த கடைக்காரார் அலைந்தது, ஆறு வருடம். அதற்கான நீதிமன்றம் மாவட்ட தலைந கரில் இருந்தது. வழக்கு செலவாக நாற்பதாயிரத்துக்கு மேல் செலவானது. அப்போது அது மாபெரும் தொகை. வியாபாரிகள் ரவுடிக்கு பயப்படுவார்கள். ஒரு போலீசே ரவுடியாக இருந்தால் கேட்கவா வேண்டும்? அவரைக் கண்டால் அலறினார்கள்.

மாதந்திர கேஸ் பற்றாக்குறை என்றால்... பொய் கேஸ் போடுவதில் கில்லாடி. ஊரில் உள்ள லாட்ஜ்கள் ஏட் டுக்கு கைகட்டி சேவகம் செய்தன. இரவானால் மது உண்டு., தொழில் முறை மாதுகள் தொடர்பு உண்டு. சிலநேரங்களில் பஸ்டேண்டில் படுத்துறங்கும் வீடற்ற

அபலைகளைக் கூட பருந்தாய் கொத்தி வரும் பாதகச் செயல் உண்டு.

ஒரு முறை இரவு... எஸ் ஐ புல்லட்டில் பஸ்டேண்டை சுற்றி வந்தார். பாசி மணி விற்கும் குறத்தி படுத்திருந் தாள். அவளை காலால் உதைத்து எழுப்பினார் "எஸ் ஐ கூப்பிடுறார்" என்றார். அழைப்பின் அர்த்தத்தைப் புரிந் துகொண்டாள். கூச்சலிட்டாள். வாக்குவாதம் ஆனது. குறத்தியை ஏட்டால் எதிர்கொள்ள முடியவில்லை. "உன்னை என்ன பண்ணுறேன் பார்" என்றவர், புல் லட்டை வேகமாக எடுத்துச்சென்றார்.

மறுநாள் கஞ்சா விற்ற வழக்கில் ஒரு போக்கிரி கைதா னான். அவன் வாக்குமூலத்தில் தனக்கு கஞ்சா சப்ளை செய்தது என 'குறத்தியின் பெயரை'ச் சொன்னான். குறத்தி கைதானாள். அவள் போராடி வெளியே வர ஒரு வருடம் ஆனது. அந்த குடும்பமே சிதைந்து போனது.

எத்தனையோ வலியவர்களை வீழ்த்துபவன்...அறநெறி பிறழாமல் வாழும் ஒரு சாதாரண மனிதனை மிதிக் கும் போதுதான்... அழிவைச் சந்திப்பான். நல் ஆத்மாக் களின் வேதனையால், பழி சொல்லால், அவர்கள் தரும் சாபத்தால் தீயவன் அழிவை சந்திப்பான்! அறநெறி மீறா மல், மனசாட்சிப்படி வாழும் ஒரு

சாமானியனின் சாபத்தால் பெரும் சாம்ராஜ்ஜியங்கள் கூட சரிந்து விடும். அறநெறி, தர்மம் சார்ந்து வாழ் வோர் மனம் புண்படும்படி ஒருநாளும் நடந்துகொள்ளக் கூடாது. அத்தகையவர்களிடம் பெறும் வாழ்த்தும் பலிக் கும்! சாபமும் பலிக்கும்!

ஏட்டு சாமிக்கு... மூணு பிள்ளைகள். மூணு மாடி வீடு கட்டி வசித்தார். சம்பிரதாயமாகத்தான் ஏட்டுக்கு மாற் றல் வரும். அதுவும் அடுத்த ஊர் ஸ்டேஷனுக்கு... இரண்டு மாதத்தில் பழைய ஊருக்கே திரும்பி விடுவார்.

பள்ளி ஆசிரியர் ஒருவருக்கு... கல்லூரி படிக்கும் வயதில் ஒரு மகள், பள்ளி பருவத்தில் ஒரு மகன். மகள் கொஞ் சம் கூச்சம் சுவாபம் உள்ளவள். அதிகம் பேசா இயல்பு கொண்டவள். செமஸ்டரில் மார்க் குறைந்துவிட்டது 'வாத்தியர் பொண்ணு மக்கு' என்று யாரோ கிண் டல் செய்தார்களாம். உப்பு பெறாத காரணம்! உடம்பில் மண்ணெண்ணெய் ஊற்றிக்கொண்டு மாண்டுவிட்டாள். பாடி போஸ்ட் மாடத்துக்கு வந்தது. ஒரு துணி மட்டுமே போர்த்தியிருந்தார்கள். வெளியே பெண்ணின் தந்தை துக்கத்தோடு நிற்கிறார். ஏட்டு வந்தார். மற்றொரு காவ லரிடம் மனம் விட்டு சொன்னார்.. "பொண்ணுக்கு என்னா... உடம்பு? வேஸ்ட் பண்ணிட்டாளே..." வக்ரமாக அவர் சொன்ன வார்த்தைகளைக் கேட்ட அருகில் நின்ற காவலர்.. "என்னா ஐயா... இப்படி பேசுறீங்க? எனக்கும் பொண்ணு இருக்கீயா!" என்று அதிர்ச்சியோடு இரண் டடி பின் நகர்ந்தார்.

"உனக்கு பொண்ணு இருக்கா...?" பலமாய் சிரித்த ஏட்டு, "பொண்ணுதான் செத்துபோயிட்டாளே... இனிமே இந்த கொலுசு வாத்தியருக்கு எதுக்கு?" என பிணத் தின் காலில் இருந்த வெள்ளி கொலுசை இரண்டை யும் கழற்றி பேண்ட் பாக்கெட்டில் போட்டுக்கொண்டார். சாபத்தில் பல வகை உண்டு. அதில் ஒன்று பிரேத சாபம்.

(எந்த ஒரு சவ உடலைச்சுற்றியும் பத்தடி வட்டத்துக்கு ஒரு ஆற்றல் ஒளி சூழ்ந்திருக்கும். அந்த ஆற்றலால் இறந்த ஆன்மா நடப்பதை உணர இயலும். இறந்தவர் குறித்து அவதூறு சொல்லோ, அநாகரிக செயலோ செய் தல் கூடாது. பிரேத சாபத்துக்கு ஆளானோர் பல தலை முறை பாதிப்படைவர்.

பல கொலைகளை, தற்கொலை வழக்குகளாக மாற்றி கதை வசனம் எழுதும், இன்ஸ்பெக்டர், ஆர்.டி ஓ குடும்

பங்கள் இத்தகைய பாதிப்பை அவர்கள் அறியாமலேயே அனுபவித்து வருகிறார்கள். தங்களுக்கு நேரும் திடீர், திடீர் துயரங்களுக்கு... இதுதான் காரணம் என்பதை அவர்கள் அறியாமல் வேண்டுமானால் இருக்கலாம். தண்டனைகள் கிடைத்துக்கொண்டுதான் இருக்கிறது.)

அடுத்த சில நாட்களில் ஊரே அதிர்ந்து நிற்கும் அள வுக்கு படுபாதகக் கொடுமை ஒன்றைச் செய்தார் ஏட்டு. அரசியல் பின்னணிக் கொண்ட பெரும்புள்ளியின் மகள். சாதாரண சாதி, வசதியற்ற ஒரு இளைஞனைக் காத லித்துவிட்டாள். சாதி மாறிய காதலித்த அந்த ஜோடி யைப் பிரிக்கும் பொறுப்பு ஏட்டுக்கு கிடைத்தது. பெரும் தொகை கைமாறியது.

இளைஞனை தூக்கி வந்து லாக்கப்பில் வைத்தார். முரட்டு அடி அடித்தார். நிர்வாணமாக்கி காலால் அவன் விதைகளை மிதித்தார். அவன் அலறலில் போலீஸ் ஸ்டேசனை சுற்றியிருந்த கட்டிடங்கள் அதிர்ந்தன. மயங்கியவன் மறுநாள் காலை எழவில்லை.மூச்சு பிரிந் திருந்தது. மாவட்ட காவல்துறை பதற்றமானது. ஏட்டு பதற்றமடையவில்லை. ஒரு கயிற்றை ஃபேனில் கட்டி உடலை தூக்கில் தொங்க வைத்தார். போட்டோ எடுத் துக்கொண்டார். வழக்கு தற்கொலை என முடிக்கப்பட் டது.

இறந்துபோன இளைஞனுக்கு வயது 26. போராட வலு இல்லாத ஏழைக்குடும்பம். மகனின் விதி அவ்வளவு தான் என காவிரியில் சாம்பலைக் கரைத்து தலைமு ழுகினர். நல்லோர் விக்கித்து நின்றனர். பத்திரிக்கை கள் காதலன் அவமானம் தாங்க முடியாமல் தற்கொலை செய்து கொண்டான் என கிளிபிள்ளை போல் எழுதின.

மாதங்கள் ஓடின...

ஏட்டு, ஓய்வு பெற ஒரு மாதம் இருந்தது. ஏட்டுவின் முதல் மகனுக்கு 26 வயது பூர்த்தியானது. சொந்தமாக வாடகைக்கு டாக்ஸிகள் ஓட்டும் நிறுவனம் வைத்திருந் தான். திருமண ஏற்பாட்டில் மும்மரமாக இருந்தார் ஏட்டு. கல்யாணத்துக்கு, மாவட்ட மந்திரி முதல் பெருந்தலை கள் அனைவரும் வருவார்கள். பெரிய மண்டபம், பெரிய விருந்து வைக்கனும் ஊரையே மிரட்டிடணும் . மீசை தடவிக்கொண்டார்.

ஸ்டேசனின் இருந்த அவருக்கு தயக்கமாய் 'சேதி' சொன்னார்கள். பதறி அடித்துக்கொண்டு வீட்டிற்கு ஓடி னார். மூணாவது மாடியில் முதல் மகன் தூக்கில் தொங் கிக் கொண்டிருந்தான். "நேற்றுக்கூட நல்லா பேசு னானே. எந்த பிரச்னையும் கிடையாதே!" அரற்றினார். ஊர் சாவுக்கெல்லாம் காரணத்தை புலனாய்வு செய்தவ ரால் சொந்த மகனின் சாவுக்கு காரணம் கண்டறிய முடி யாமல் தவித்தார். இடிந்துபோய் உட்கார்ந்தார்.

ஓய்வு பெற்றார் ஏட்டு. இத்தனைநாள் அச்சப்பட்டவர் கள்...ஏட்டைக் கண்டதும் முகத்தில் 'வணக்கம்' வைத் துவிட்டு முதுகில் சிரித்தார்கள்.

இரண்டாண்டுகள் கடந்தது...இரண்டாவது மகன் 26 வயதை அடைந்தான். சொல்லி வைத்தாற்போல் வீட் டின் இரண்டாவது மாடியில் தூக்கில் தொங்கினான்.அ தைத்தொடர்ந்து அடுத்த இரண்டாண்டுகளில் மூன்றா வது மகனும் 26 வயதைத் தொட்டான். அடி வீட்டில் அதே போல் தொங்கினான்.

மூன்று மகன்களின் போஸ்ட்மாடத்தின் போதும் மருத் துவமனையின் ஒரு ஓரத்தில் ஏட்டு பிணம் போல் நின் றார். இறந்தபோன... அந்த வீட்டை, விற்க முனைந்தார் ஏட்டு. வாங்க யாரும் இல்லை. பார்க்கும் இடமெல்லாம் சமூகம் ஏட்டைப் பழித்தது. 'ஐயோ இவன் பாவி' என

ஏசியது. காறி உமிழ்ந்தார்கள். நடுநடுங்கிப் போனார் இறந்துபோனால் தன் உடலை சுடுகாட்டுக்கு தூக்கக் கூட மனிதர்கள் முன் வருவார்களா? என அரண்டுபோ னார்.

ஒருநாள் ஊர் முழுக்க செய்தியானார் ஏட்டு. ஊரில் உள்ள பிணம் எரிக்கும் சுடுகாட்டில் தன்னைத்தானே தீவைத்துக்கொண்டு மடிந்தார். பிற இடங்களில் உயிர் பிரிந்தால், உடலை அஞ்சலி செலுத்த வீட்டிற்கு எடுத்து வருவர். சுடுகாட்டில் இறந்தால்...அந்த உடலை வீட் டிற்கு எடுத்துச்செல்லக்கூடாது. இது காலங்காலமான மரபு.

அருகில் ஒரு கடிதம் இருந்தது. 'என் உடலை இங்கேயே பிரேத பரிசோதனை செய்து, வழக்கை தற்கொலை என முடிக்கவும். என் சாவுக்கு யாரும் காரணமில்லை'. என எழுதியிருந்தார், ஏட்டு.

## 7.சாபம் குடியேறிய வீடு!



வீட்டில், ஆங்காங்கே கறையான் பிடித்த உத்திரங்கள். முறிந்துவிடாமல் இருக்க, முட்டுக் கொடுக்கப்பட்ட மூங் கில்கள். பழைய கால ஓட்டு வீடு! உள்ளே பெரிய முற்றம். இருபக்கமும் தலா மூன்று தாணிய அறை கள். இரண்டாவது நிலைப்படியைத் தாண்டினால் வரும்

அடுப்பங்கரை. அங்கும் ஒரு சிறு முற்றம் உண்டு. அந்த முற்றத்தில் தண்ணீர் நிறப்பப்பட்ட பெரிய அண்டாக்கள். சில நேரங்களில் அந்த முற்றத்திலேயே அமர்ந்து வீட்டுப் பெண்கள் அவசர குளியல் செய்வர். பின்னாடி கொல் லைப்புறம். அங்கே சிறிய நீர் குட்டை உண்டு. சாம்பசி வம் வீட்டினர் சைவம் என்பதால்... அதில் வளரும் மீன் களை, அவர்கள் பிடிப்பதில்லை.

தெரு வாசலில் இருபக்கமும் பெரிய திண்ணைகள்.. வாசலுக்கும் கொல்லைக்கும் இருமுறை நடந்தால் ஒரு கிலோ மீட்டர் நடைப்பயிற்சி போன மாதிரி. ஒரு காலத் தில் ஊரில் பெரிய மிராசுவாக வாழ்ந்த குடும்பம்.

வெள்ளையர் காலத்தில் அந்த வீட்டின் முன்னோர் கள் கிராம பட்டாமணியராக இருந்தவர்கள். ஊரில் கோயில் திருவிழா, வாய்கால் வரப்பு பிரச்னைகள்,, குடும்ப பிரச்னைகள் எல்லாம் சாம்பசிவத்தின் அப்பா காலம் வரை ...இந்த வீட்டு திண்ணையில்தான் பேசி முடிக்கப்படும்.

சாம்பசிவம் படித்துவிட்டு மெட்ராஸ் வந்து வேலை செய் தார். பண்ணை குடும்பத்தில் பிறந்த அவருக்கு, பணி செய்வது சிரமமாக இருந்தது. ஊருக்கே திரும்பி விட் டார். விவசாயம் பழகினார். சாம்பசிவம் தலையெடுத்து நூறு ஏக்கர் நிலம், இருபது ஏக்கராக சுருங்கியதுதான் மிச்சம்.

சாம்பசிவத்துக்கு மூன்று பெண்கள். மூவரையும் லெட் சுமி காலண்டர் வரைய மாடலாக வைத்துக்கொள்ள லாம். அத்தனை அழகு. முகத்தில் ஒரு தெய்வீக கலை. மூவருக்கும் வரிசையாக வயது 38,36,34. யாருக்கும் திரு மணம் ஆகவில்லை.

சாம்பசிவம் காலையில் பூஜை முடித்து, பலகாரம் சாப் பிட்டுவிட்டு காலை 10 மணி போல் திண்ணையில் வந்து அமருவார். "அம்மாடி காயத்திரி அந்த வெத்தலைப் பெட்டி எடுத்துட்டு வாம்மா..." நிலைவாசலைப் பார்த்து குரல் கொடுத்தால்..."இந்தோ வாரேன்ப்பா" மிகுந்த மரி யாதையோடு மகள் கொண்டு வந்து தருவாள். மற்றொரு மகள் செம்பில் தண்ணீர் எடுத்து வந்து வைப்பாள்.

மதியம் ஒரு மணி வரை சாம்பசிவத்துக்கு, அந்த திண் ணைத் தான் ஆபீசு. யாராவது ரெண்டு ரிடையர்டு மனி தர்கள் அன்றைய செய்தித்தாளோடு வருவார்கள். கதம் பமாய் உரையாடுவார்கள். மதிய சாப்பாட்டு நேரத்தில் கூட்டம் கலையும். உணவுக்கு பின் கொஞ்சம் தூக்கம். மாலை கொட்டிலில் உள்ள பசுவிடம் பெரிய பெண் பால் கறந்து காபி தருவாள். அதன்பிறகு கோயில், கடைத் தெரு செல்வார்.

அந்த கிராமத்தில் சாதாரண குடும்பத்து பிள்ளைகள் வெளிநாட்டில் பிழைப்பு செய்து மாடி வீடுகள் கட்டி விட் டார்கள். வசதியானவர்கள் பலர் உருவாகி விட்டார்கள். ஆனாலும் அந்த கிராமத்தின் அடையாளம், சாம்பசிவம் வீடு. அந்த கிராமத்துக்கு இரு வேளை டவுன் பஸ் வரும். பட்டாமணியார் வீடு என்பது ஒரு பஸ் நிறுத் தம். அதுதான் அந்த குடும்பத்து அன்றைய பெருமை. மற்றொரு அடையாளம்... 'மூணு பொண்ணு கல்யாணம் ஆகாம இருக்குமே, அந்த வீடா?' என்பார்கள், புதிதாக அந்த ஊருக்கு குடியேறியவர்கள்.

சாம்பசிவத்தின் வீட்டிற்கு வரும் இறப்பு செய்திகள் பெரிய துக்க உணர்வைத் தருவதில்லை. மாறாக கல் யாண பத்திரிக்கைகள் பெரிய சோகத்தை, துக்க உணர்வை தந்துவிடும். யாராவது கல்யாண பத்தி ரிக்கை கொடுத்தால் திண்ணையிலேயே வைத்து வாங்

கிக்கொள்வார். தன் வீட்டு மகள்கள் சங்கடப்பட வேண் டாம் என்பதற்காக...

அப்பத்திரிக்கையை திண்ணை தாழ்வார ஓட்டிடுக்கில் சொருகி வைத்துவிடுவார்.

மூத்த மகளுக்கு 22 வயதில் வரன் பார்க்க ஆரம்பித்தார், நல்ல குடும்பம், படித்த குணமான மாப்பிள்ளை என பல ஜாதகங்கள் வந்தன. அடுத்த இரண்டு வருடத்தில் ஒரு மாப்பிள்ளையை முடிவு செய்தார்கள். 'நல்ல ஜோடிப் பொருத்தம்' என பெரியோர் வியந்தனர். நிச்சயதார்த்த வேலைகள் ஜரூராக நடக்கும் நிலையில், மணமகனின் தந்தை மாரடைப்பால் இறந்தார்.

அபசகுனமாக எடுத்துக்கொண்டது, அக்குடும்பம். நிறுத்தப்பட்டது நிச்சயதார்த்தம்.அதன் பிறகு 4 வரு டம் கழித்து மற்றொரு வரன் அமைந்தது. நிச் சயதார்த்தம் நடைப்பெற்றது. கல்யாணப் பத்திரிக்கை அடித்தாகிவிட்டது. அந்நிலையில் இடிபோல் இறங்கி யது...'திருமணம் நிச்சியம் செய்யப்பட்ட மாப்பிள்ளை விபத்தில் அகால மரணம்.'எனும் துயரச் செய்தி. சாம் பசிவம் குடும்பம் நொருங்கிவிட்டது. அந்த அதிர்ச்சியின் விளைவுதானோ என்னவோ...அடுத்த ஓராண்டில் சாம் பசிவத்தின் மனைவியும் மறைந்து போனார்.

அதன்பிறகு சாம்பசிவத்தின் இரண்டாவது மகளைக் கேட்டே வரன்கள் வரத்தொடங்கின. எப்படியாவது மூத் தமகளுக்கு திருமணம் முடித்துவிட வேண்டும் என துடித்த சாம்பசிவம் பட்டணத்தில்... ஒரு ஜோதிடரைச் சந்தித்தார். அந்த ஜோதிடர், தீய ஆலோசனை ஒன் றைய வழங்கினார். "உங்க மகள் ஜாதகத்துக்கு நேர் வழியில் திருமணம் ஆவது கடினம். ஒரு குறுக்கு வழி சொல்றேன். என்கிட்@ட ஒரு மணமகன் ஜாதகம் இருக்கு. அதுக்கு பொருந்துற மாதிரி, உங்க மூத்த மக

ளின் ஜாதகத்தில் மாற்றி எழுதி, மணமகன் வீட்டாருக்கு அனுப்புவோம். என் வார்த்தையை தட்ட மாட்டாங்க.. ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணத்தை செய்ன்னு பழமொழி உண்டே... நாம ஒரு பொய்தான் சொல் லப்போறோம்.. நிச்சயம் சுபம்தான் என்றவர்...அதற்கு கைமாறாக பெருந்தொகை கேட்டார், ஒத்துக்கொண் டார் சாம்பசிவம். சாகும் வரை இந்த இரகசியம் இரண்டு பேருக்குள்ளேயே இருக்க வேண்டும் என சத்தியம் வாங்கிக்கொண்டார் ஜோதிடர். மூன்று நாள் கழித்து வரச்சொன்னார்.

மூன்றாம் நாள் ஜோதிடர் வீட்டுக்கு சாம்பசிவம் சென் றார். வாசலில் பந்தல் போட்டுக்கொண்டிருந்தார்கள். விசாரித்தார்...மாரடைப்பால் ஜோதிடர் மறைவு. நிலை குலைந்துபோனார் சாம்பசிவம்...ஏன் இப்படி? பக்கத்து கிராமத்தில் ஒரு பூசாரி வீட்டு அம்மா, வெள்ளிக்கிழ மைகளில் ஓலக்குடிசைக்குள் அமர்ந்து குறி சொல்லி வந்தார்கள். மன உடைந்த சாம்பசிவம், அங்கு போனார். குறிகேட்க... சாமானியர் பலர் கூடி இருந்தார்கள்... பூசாரி சாம்பசிவத்தைக் கண்டு, வெளியே வந்தார்... "மகள்கள் திருமணம் விஷயமா கேட்கலாமுன்னு" வந்தேன்...என் றார். "ஐயா, நீங்க வீட்டுக்கு போங்கய்யா. அடுத்த வெள் ளிக்கிழமை குறி சொல்லும் என் மனைவியை அழைச்சு கிட்டு உங்க வீட்டுக்கே வரேன்...வீட்டை கழுவி மஞ்சள் தெளிச்சு வையுங்க...அங்க வந்து சாம்பிராணி போட்டு , உடுக்கை அடிச்சா, அருள் வந்திடும். அங்கயே கேட்க லாம் ஐயா என்றார்.

வெள்ளிக்கிழமை வந்தது...சாம்பசிவம்..வீட்டை பூஜைக்கு தாயார் செய்தார்!பட்டாமணியார் ஸ்டாப்பிங் கில் பஸ் நின்றது. குறி

சொல்லும் அம்மா ... இறங்கினார், அப்போதே அவருக்கு அருள் வந்துவிட்டது. ..கண்களை அகல விரித்து , நாக்கை நீட்டி, உடலை முறுக்கி சொன் னாள்...."நான் உள்ள வரமாட்டேண்டா...

சாபம் குடியிருக்கும் வீடுடா!" ஆக்ரோஷமானது வார்த்தை! வீட்டுக்கு வரும் வழியில், ஓர் ஆற்றை கடக்க வேண்டும்.. "அந்த ஆத்துல பொண்ணு ஒருத்தி... தலைவிரி கோலமா அழுதுகிட்டு இருக் காடா... உன் வீட்டுக்குள்ள போகாதேன்னு என்னை தடுக்கிறாடா..." என்று சொல்லி தெய்வம் மலையேறிய து.கேட்டவர்கள் விக்கித்துப்போனார்கள். என்ன சாபம்?

சாம்பசிவம் தடுமாறினார். சாம்பசிவத்தின் தந்தை கொஞ்சம் மைனர் பலவீனம் உண்டு என்றாலும்... உள் ளூரில் நல்லவர் இமேஜைக் கடைப்பிடிப்பவர்.

சாபம் குறித்து அறிய... சாம்பசிவம் கடும் பிரயாசைப்பட் டார். குடும்ப மூத்தோர், பெரியவர்கள், நாடி ஜோதிடர் கள், என விதவிதமான மனிதர்களைச் சந்தித்து விடை கேட்டார். விழுந்த முடிச்சை யாராலும் அவிழ்க்க முடிய வில்லை.

ஒருநாள்...அதே ஆற்றங்கரை ஓரம் உள்ள ஆழமரத் தடியில்...அடு மேய்த்துக் கொண்டிருந்தாள் 90 வயது கிழவி... அவளது முன்னோர் சாம்பசிவம் வீட்டில் பண்ணை வேலை செய்தவர்கள்.

சாம்பசிவத்தைப் பார்த்ததும் "சின்னய்யா வெத்தலை பாக்கு இருந்தா கொடுங்க...." என்றார். சாம்பசிவம் வெத்தலைப்பெட்டியைக் கிழவியிடம் கொடுத்துவிட்டு அதே மரத்தடியில் அமர்ந்தார். இருவர் மட்டுமே அங்கே இருந்தார்கள்..."ஏன் பெண்களுக்கு கல்யாணம் பண் ணமா இருக்@க..?" கேட்டாள் கிழவி! "என்னால முடிய லேயே அஞ்சல" என்று பெருமூச்சு விட்டார்...

தெய்வக்குறி சொன்னதைச் சொன்னார்...அஞ்சல கிழவி சிலிர்த்துவிட்டாள். "அப்ப என் அம்மா சொன் னது உண்மைதானா?" வாய்விட்டு தனக்குத்தானே சொல்லிக்கொண்டாள்..."என் அம்மா சாவுற காலத்துல யாருக்கும் தெரியாத பெரிய இரகசியம் ஒண்ணு என் மனசுல இருக்குடின்னு என் காதுல சொன்னுச்சிது... பட்டாமணியரா உங்க அப்பா, இருந்தப்ப... ஒரு சீனி உருண்ட டாக்டர் ஒருத்தன் ஊருல இருந்தான். அப்ப நான் சின்ன பிள்ளை. அவனுக்கு கல்யாணம் கிடை யாது. பொம்பள விசயத்துல கொஞ்சம் அப்படி இப்பிடி யானவன் தான்...

ஒருதரம்...யார் பெத்த பெண்ணோ ....தஞ்சாவூர் ரயி லடியில நின்னுகிட்டு இருந்ததை, கையோட வீட் டுக்கு அழைச்சிகிட்டு வந்துட்டான்... வந்த இராத்தி ரியே, படுக்கையில செத்து போயிட்டா...அந்த அப்பாவி சின்னப் பொண்ணு! அவ யாரு? எந்த ஊரு? என்னா பேருன்னு? டாக்டருக்கு தெரியல.... நடு இராத்திரியில, உங்க அப்பா காலுல வந்து விழுந்து அழுதுருக்கான்.. வெளியில தெரிஞ்சா ஊர் மானம் போய்டுமேன்னு.. உங்க அப்பாவும்... இராத்திரியோட இராத்திரியா... கூண்டு வண்டிய ஓட்டிகிட்டு போயி, பிணத்தை இரண்டு பேருமா சேர்த்து தூக்கி வண்டியில் வச்சுகிட்டு வந்து... இந்த ஆத்து நடுவுல குழிய தோண்டி புதைச்சுட்டாங் களாம்...! ஒருவேளை தெய்வம் சொன்னது...அந்தக் கன்னிப் பொண்ணோட சாபமோ...! ஆற்றைப் பார்த்து கையெடுத்து கும்பிட்டாள், அஞ்சல!

இறுதி வரை தன் மகள்களுக்கு திருமணம் செய்ய முடியாமலேயே இறந்து போனார் சாம்பசிவம். பின்னர் மகள்கள் சென்னைக்கு இடம் பெயர்ந்தார்கள். என்ன ஆனார்கள்? யாருக்கும் தெரியாது! அத்தனை பெரிய வீட்டில் எருக்கன் செடிகளும், கரு வேல மரங்களும்

மண்டின. நாகங்களின் வசிப்பிடமாக மாறியது, சாபம் குடியேறிய வீடு!

## 8.'சாப விமோசனம் தந்த பாட்டி!' -ஓர் அமானுஷ்ய அனுபவம்!



குமாரசாமி ஐயாவின் குடும்பத்தில் கடந்த நாற்பதாண்டுகளில்... நடந்த சுப நிகழ்வுகளைவிட துயர நிகழ்வுகள் தான் அதிகம்.

அவருக்கு ஏழு மகள்கள், ஒரு மகன். கட்டிக்கொடுத்த சில ஆண்டுகளிலேயே இரு மகள்கள் அடுத்தடுத்து விதவையாயினர். மற்றொரு மகளும் கணவனை பிரிந்து, பிறந்தகம் திரும்பினாள். மூன்று மகள்கள் சிறுபிராயத்திலேயே நோய்பட்டு இறந்துவிட்டனர்.

ஐயாவின் மகனோ ஆண் பிள்ளை ஏக்கத்தால் ஆறு மகள்களைப் பெற்றெடுத்தார். அதில் கட்டிக்கொடுத்த நான்கு மகள்களுக்கும்... பெண் குழந்தைகளே பிறந்தன.

குமாரசாமி ஐயாவின் உடன் பிறந்த தங்கை ஞானவள்ளி ஆச்சிக்கு மூன்று மகள்கள். உடன் பிறந்த தம்பிக்கு,

மூன்று மகள்கள், ஒரு மகன். அவர்கள் வாழ்வும் மகிழ்ச் சியானது அல்ல...

இரண்டு தலைமுறைகளாக அந்தக் குடும்ப மரத்தின் கிளைகள் அனைத்திலும் பெண் பூக்களே மலர்ந்தன. மகள்கள், பேத்திகளால் நிரம்பி நின்றது அந்த வம்சம்.

குமாராசாமி ஐயா வழி வந்த மகனுக்குத்தான் ஆண் வாரிசு இல்லை. அவரது தம்பி மகனுக்காவது ஆண் வாரிசு வராதா? இன்னும் வயசு இருக்கிறதே? என ஏங்கி யது அந்த குடும்பம்.

கிராமத்தில் பழைய ஓட்டு வீடு ஒன்றில் வசித்தார் குமா ரசாமி ஐயா. நியாயஸ்தர். பிறர் பொருளுக்கு ஆசைப்ப டாதவர். கருப்பு சட்டை அணியாத கடவுள் மறுப்பாளர். தனக்குச் சரியென பட்டதை பேசுவார், செய்வார். அவர் வாழ்ந்த வீடு, நூறு வயதைக் கடந்த ஒன்று... பர்மா தேக் கில் பெரிய முற்றம் வைத்து, பெரிய அறைகள் கொண்ட, பிரம்மாண்டமான வீடு! முன்னோர்கள் கட்டியது.

அந்த வீட்டின் பந்த உறவு ஒன்றுடன், சென்னையில் எனக்கு பல ஆண்டு கால நட்பு. ஆண்டுதோறும் பொங் கலுக்கு தங்கள் கிராமத்துக்கு, குடும்பத்தோடு வந்து தங்குமாறு அழைப்பு தருவர். இங்கிருந்து முந்நூற்றி ஐம் பது மைல் தொலைவு என்பதாலும், பொங்கல் சமயம், சென்னையில் புத்தகக் கண்காட்சி நடக்கும் என் பதாலும் செல்ல முடியாமல் தடைப்பட்டுக்கொண்டே போனது.

உடல் நலிவுற்ற குமாரசாமி ஐயா... சில மாதம் சிகிச்சைக் காக சென்னையில் இருந்தார். இறுதியில் மருத்துவம் பலனளிக்காமல் மறைந்தார். அக்காலகட்டத்தில் அவர் குடும்பத்தார் பலர் மேலும் என்னோடு நெருங்கிப் பழகி னர். இதனால்...கிராமத்து அழைப்பின் அழுத்தம் அதிக ரித்தது.

சில மாதம் கழித்து... ஓர் விடுமுறையில் குடும்பத்தோடு அக்கிராமத்திற்கு காரில் பயணித்தேன். இரவு உணவும், தங்கலும் அங்கு திட்டமிடப்பட்டிருந்தது. தடபுடல் ஏற் பாடு செய்திருந்தார்கள்.

வழியில் எதிர்பாரா ஆலய வழிபாடுகள் சில சேர்ந்து கொள்ள... இரவு ஏழு மணிக்கு சென்று சேர வேண்டிய வன்...இரவு பன்னிரெண்டு மணிக்கு சென்றடைந்தேன். குமாராசாமி ஐயாவின் குடும்ப உறுப்பினர்கள் பலர்... என் வருகையை முன்னிட்டு அங்கு குழுமியிருந்தனர்.

உணவிற்கு பின் இரவு ஒரு மணியளவில் முற்றத்தில் அறுபதுக்கு மேலனாவர்கள் சுற்றி அமர்ந்தனர்...கல் யாண வீடு போல் 'கலை' கட்டியிருந்தது சபை. பேச்சு கச்சேரி நீண்டது. மணி இரண்டானது.

கொஞ்சம் வயதானவர்கள் உட்கார்ந்த இடத்திலேயே மெல்ல தலை சாய்த்தனர். ஆனாலும் ஏகாதேசி இரவு போல் பலர் ஆர்வமாக விழித்திருந்தனர். சுமார் மூன்று மணியளவில்...திருமணமான ஐயாவின் பேத்திகளில் மூவர், தங்கை, மருமகள் மற்றும் என் மனைவி என பத்து, பன்னிரெண்டு நபர்கள் மட்டும் உரையாடிக் கொண்டிருந்தோம்..

இயல்பாக, தனது அண்ணன் குமாரசாமி ஐயாவைப் போல் இறை பற்று இல்லாதவர் தான்...அவரது தங்கை ஞானவள்ளி ஆச்சி. சாமி மாடத்தில் விளக்கேற்றும் பழக்கம் இல்லாதவர். 'நரம்பு தளர்ச்சியால் பெண்க ளுக்கு சாமி வந்து ஆடுகிறது' என கருத்து விவாதம் செய்யக்கூடியவர். அவரும் அச்சபையில் பேசுபவற்றை கேட்டுக்கொண்டிருந்தார்.

அடியேன், எனது சித்தாந்தம்படி பாவம், புண்ணியம், முன்னோர் வழிபாடு குறிந்து பேசிக்கொண்டிருந்தேன்... அப்போது குறுகிட்ட குமாராசாமி ஐயாவின் பேத்தி,

தனது மகளுக்கு தாய்ப்பால் புகட்டியபடியே சொன் னாள்...

"இந்த வீட்டுலக்கூட எங்க கொள்ளு பாட்டி விஷம் குடித்து செத்துட்டாங்ன்னு அம்மாச்சி ஒருத்தவங்க சொல்லுவாங்க..." என்றாள். எனக்கு ஏதோ பொறி தட்டி யது... விழிப்படைந்தேன்.

எனது பேச்சுகளை நிறுத்திவிட்டு...தற்கொலை செய்து கொண்ட அந்த கொள்ளு பாட்டி குறித்து அறிய ஆவல் கொண்டேன். என் பேச்சையும் அத்திசையிலேயே செலுத்தினேன். இன்னதென்று வகைப்படுத்த முடியாத நிகழ்வு, அனுபவமே அமானுஷ்யம் எனப்படுவது... அப் படியான ஓர் நிகழ்வை, அன்று எதிர்கொண்டேன். கூடி யிருந்தவர் தங்களுக்கு தெரிந்ததை கூறத் தொடங்கி னார்கள்.

***

அந்த பாட்டி பேரு கிருஷ்ணம்மாள். குமாராசாமி ஐயா வின் அத்தை. கருத்த நிறம். உயரமான உருவம். பெரிய இடத்தில் திருமணம் நடத்தி வைத்தார்கள். என்ன செய்ய? குழந்தை பாக்கியம் இல்லை. இரு குடும்பத் துக்கும் கருத்து வேறுபாடு வளர்ந்தது. கிருஷ்ணம்மாள், பிறந்த வீடு நோக்கி திரும்ப, அதுவே முக்கிய காரணம் ஆனது.

கிருஷ்ணம்மாளுக்கும், அவரது புகுந்த வீட்டிற்கும் இனி எக்காலத்திலும் எந்த நிலையிலும் ஒட்டும் இல்லை, உறவும் இல்லை என அறிவிக்கும் சடங்கு ஒன்றை செய் தார்கள், கணவன் வீட்டார்.

வெண் பட்டுத்துணியை விரித்து, இருபக்கமும் வெட்டி யான்கள் பிடித்துக்கொள்ள... அத்துணியை யானையை வைத்து தாண்ட செய்வார்களாம். பின்னர் அத்துணியை

இரண்டாக கிழித்து எறிந்துவிட்டு ஆற்றில் தலைமுழுகி வீடு சென்று விட்டால்...பிரிந்தவர் இறந்ததற்கு சமமாம்.

கிருஷ்ணம்மாள் மருமகளாக அந்த வீட்டிற்கு அணிந்து சென்ற நூறு பவுன் நகை, வெள்ளி, பித்தளை பாத்தி ரங்கள் உள்ளிட்ட சீர் சாமான்களும் வண்டியில் கட்டி திருப்பி அனுப்பி வைக்கப்பட்டன.

பெற்றோர் இல்லா நிலையில்... உடன் பிறந்த தன் ஓரே அண்ணன், அண்ணி வசிக்கும், பிறந்த வீட்டிற்கே, வந்து சேர்ந்தார் கிருஷ்ணம்மாள். நாத்தனார், விருந்தாளியாக வந்தாள்... மகிழ்வித்து அனுப்புவாள், வீட்டு மருமகள். நிரந்தரமாக வந்துவிட்டாள்...? சதா இகழ்ந்து பேசி னாள். ஆனாலும் அண்ணன்காரர் (குமாரசாமி ஐயாவின் தந்தை) பரிவு காட்டினார். கிருஷ்ணம்மாள் பகலெல் லாம் வயலுக்கு சென்று அண்ணனுக்கு துணையாக விவசாயம் பார்த்தார். வீட்டினுள் அண்ணன், அண்ணி வசிப்பதால்...இரவில் வீட்டுத் திண்ணையில் திரைக் கட்டித் தங்கிக்கொண்டார். பிடித்ததைச் சாப்பிடாமல், இருப்பதைச் சாப்பிட்டார். 'தான் வந்ததால் அண்ணன் வீட்டு செல்வம் குறைந்துவிட்டது' என யாரும் குத்தம் பேசிவிடக்கூடாது... என சதா வயலில், மாட்டு தொழு வத்தில் பாடுபட்டார். ஆனாலும் அண்ணியின் வாய் ஓயவில்லை. வருடங்கள் தான் ஓடின. பிறந்த அண் ணன் பிள்ளைகள், பாசம் காட்டின. அதன் பொருட்டு வாழ்ந்தார். வாழாவெட்டியாக பிறந்தகம் வந்து இருபத்தி இரண்டு ஆண்டுகள் ஆகிவிட்டன.

ஒருநாள் கடும் சண்டை. காலையில் வாசல் தெளித்து கோலம் போட கதவைத் திறந்த அண்ணி... 'இராத்திரி யெல்லாம் சனியன் லொக் லொக் இருமி தூக்கமில்லாம போயிடுச்சி!" முணுகிக்கொண்டே தண்ணிர் தெளித் தார்.

கிருஷ்ணம்மாள் கையில் இருந்த டம்பளரை நழுவ விட, திண்ணையில் இருந்து உருண்டு விழுந்தது.

அண்ணி திரும்பிப் பார்த்தார்..."இனி என்னால உனக்கு எந்த தொந்தரவும் இல்ல ஆயி...நான் பூச்சி மருந்து குடுச்சிட்டேன்" என்றார் ஈனக்குரலில்... வாயில் நுரை தள்ளியது. அண்ணி, பதறி குரல் எழுப்பினார்.

***

இந்நிகழ்வை நினைவு கூறும் வகையில் பேசிக்கொண் டிருந்தார்கள் அல்லவா... நான் சட்டென அவ்விடத்தில் ஓர் குளிர்ந்த காற்று பரவுவதை உணர்ந்தேன். அப் போது மணி விடியற்காலை நான்கு மணி... இரண்டொரு பெண்கள் தீடிரென உடலை குலுக்கி சிலிர்த்தனர். "உடம்பை என்னமோ செய்து..." என்றார்கள். இறுமிக் கணைப்பதுப் போல் ஓர் ஓசை யாருமற்ற திண்ணையில் இருந்து கேட்டும், கேட்காதது போல் இருந்தது. எல் லோர் முகத்திலும் ஒருவித பதற்றம் தொற்றியது.

இதுமாதிரி விஷயங்களில் எவ்வித நம்பிக்கையும் இல் லாத ஞானவள்ளி ஆச்சி... நறநறவென பல்லைக் கடித் தார்.. கைகளை மேல் தூக்கி, உடலை முறுக்கினார். பொத்தென சாய்ந்தார்...கண்களை மூடிய நிலையில் கை கால்கள் பிரஞ்னையற்று சவம் போல் மல்லாந்து கிடந்தார்.

தண்ணீர் எடுத்து முகத்தில் அடித்தேன். அருகில் தூங் கியவர்கள் எல்லாம் பதறித் துடித்து எழுந்தார்கள்... உட லில் எந்த சலனமும் இல்லை. "என் உயிர் பிரிந்த நேரம் இது" ஞானவள்ளி ஆச்சி வாயில் இருந்து கரகரப்பான குரல் வெளிப்பட்டது.

இதுதான் 'கிருஷ்ணம்மாள் குரல்' என உணர்ந்தேன்.

"அன்னைக்கு இராத்திரி முழுக்க பூச்சிமருந்து குடித்த என் வயிறு எரிந்தது... என் சாபம் இந்த மனையில் தங் கிவிட்டது." வருத்தமாய் வெளிப்பட்டது குரல்! அப்போது இமை மூடிய கண்களின் ஓரம் கண்ணீர் கசிந்தது. கூடி யிருந்தவர்கள் கதறி அழுதார்கள். மண்டியிட்டு சாப விமோசனம் கேட்டார்கள்.

விமோசனம் பெற விதிகள் சொன்னது...'மார்கழி மாதம், முதல் ஞாயிறு அதிகாலை தன் உயிர் பிரிந்ததைக் குறிப்பிட்டு... ஞாயிறு தோறும் அசைவம் தவிர்த்து, மஞ் சள் ஆடை அணிந்து, திண்ணையில் தனக்கு விளக் கேற்ற வேண்டும்.' என்றது.

'ஆண்டுக்கு ஒருமுறை மார்கழியில் சுமங்கலிகளுக்கு ஆடை, அன்னம் தந்து, கூடியிருப்போருக்கு என் கதை யைச் சொல்லி வழிபாடு செய்ய வேண்டும். இதை ஆயுள் உள்ள வரை, இந்த வீட்டுப் பெண்கள் செய்ய வேண் டும்." என்றது.

"அப்படியே செய்றோம் பாட்டி" வாக்கு தந்தார்கள் குடும் பத்தினர்.

நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் இவ்வீட்டின் முன் னோர் பர்மாவில் பெரும் செல்வம் சம்பாதித்தவர்கள். அவர்கள் தொடர்பாக அடுத்து சொன்னது...

முன்னோர்கள் சம்பாதிக்க போன இடத்தில் முதலாளி யாக இருந்த ஓர் தூரத்து உறவினரை கொன்று அவர் செல்வத்தை களவு செய்தவர்கள் என்றும்... நேர்மை யாக சம்பாதிக்காதவர்கள் என்றும்... அப்பாவமே... தன் னையும், தன் மூத்தோர்களையும் பாதித்தது எனவும், அதுவரை குடும்பம் அறியா இரகசியம் ஒன்றைப் பகிர்ந் தது.

இறுதியில்..."மருந்து குடிச்சி வெந்த என் வயிறு குளிர மஞ்சள் பால் கொடு" எனக் கேட்டது. டம்பளரில் மஞ் சள் நீரை கலந்து வந்து...வாய் அருகில் சாய்க்க... கண் இமை மூடி இருக்க, வாய் மட்டும் திறந்து, மூன்று மடக்கு உள்ளித்துக்கொண்டது. அதன் பிறகே ஞானவள்ளி ஆச்சிக்கு நினைவு திரும்பியது.

கிருஷ்ணம்மாள் சொன்னபடி... ஞாயிறு விரதம் மேற் கொண்டார்கள். திண்ணையில் விளக்கேற்றினார்கள். ஐந்து வருடங்கள் முன்பு அக்குடும்பத்தில் ஆண் வம்சம் ஒன்று பிறந்தது. பட்ட மரம் துளிர்த்தது.

நாளும், என்னை பெற்ற தாய்க்கு விளக்கேற்றும் அடி யேன், கிருஷ்ணம்மாளுக்கும் ஓர் அகல் விளக்கு ஏற்று கிறேன். என் முன்னிலையில் சாப விமோசனம் தந்ததை நினைத்து நெக்குருகி, நன்றி தெரிவித்து, இன்றளவும் வழிபட்டு வருகிறேன்.

"ஓம் கிருஷ்ணம்மாள் சரணம்!"

## 9.'இறந்த மகன் திரும்ப வேணும்' - தாய் காட்டிய பிடிவாதம்!

என் சிறுவயது பருவத்தில், சந்தித்த மனிதர்களில் சிலர் என்றும் மறக்க முடியாதவர்கள். அப்படி ஒருவர்தான் அப்பாசாமி தாத்தா.

அடியேன், பள்ளி பருவத்தில் நாகப்பட்டிணத்தில் வசித் தேன். சிவகாமி டீச்சர் வீட்டில், குடிக்குள் குடியாக குடி யேறினோம். சிவகாமி டீச்சரின் தந்தை தான் அப்பா சாமி.

மெலிந்த தேகம், நடுத்தர உயரம். வாய் எந்நேரமும் வெத்தலைப் பாக்கை மெல்லும். இடுப்பில் ஓர் கதர் வேட்டியும், மேலே ஒரு துண்டும் அணிந்திருப்பார். மேல் சட்டை அணியமாட்டார். காலுக்கு செருப்பும் அணிய மாட்டார்.

மயிலாடுதுறை பக்கம்தான் அவரது கிராமம். மாதம் ஒரு முறை மகள் வீட்டுக்கு நாகப்பட்டிணம் வருவார்.

போன் வசதி இல்லாத காலம். அதனால் விருந்தினர் வருகையே வீடுகளில் எதிர்பாராத இன்ப நிகழ்வாக இருக்கும். பக்கத்து வீடுகளுக்கு விருந்தினர் வந்தாலும், நம் வீடுகளிலும் அது, அக்காலத்தில் மகிழ்வை பரிமாற வைக்கும்.

தீடிரெனதான் அப்பாசாமி தாத்தா வருவார். வரும் போது தோட்ட விளைச்சலில் இருந்து ஏதேனும் எடுத்து வரு வார். மகள் வீட்டில் சில நாட்கள் தங்குவார். கையில் எப் போதும் ஒரு பையும், கூடவே சில்வர் வெத்தலைப் பெட் டியும், நீண்ட டார்ச்சு லைட்டும் வைத்திருப்பார். மகள் வீட்டின் திண்ணையில் தான் தங்குவார். படுப்பார்.

தெருவில் விளையாடும் என்னைப்போன்ற சிறுபிள் ளைகளிடம் அவரும் ஒரு நண்பர் போல நடந்துகொள் வார்... அவரோடு கலந்துரையாடல் செய்வதில் மகிழ் வோம்.

தன் வாழ்வில் தைரியமாக எதிர்கொண்ட பிரச்னை களை, நிகழ்வுகளைக் கதைப்போல் பகிர்வார். சிறிய வர்களின் திறமைகளை ஊக்கப்படுத்துவார். வைராக்

கியமான மனிதர். தாத்தா தன் பிள்ளைகள் யாவரையும் திருமணம் செய்து கொடுத்தும், தனது கிராமத்தில் தன் வீட்டில் தனியொருவராக வாழ்ந்தார். 85 வரை தானே சமைத்து சாப்பிட்டார்.

அவரை நான் பார்த்த காலம் முதல் அவர் மேல் சட்டை யும், செருப்பும் அணியவில்லை. மழையானாலும், குளி ரானாலும் உடம்பில் மேல் துண்டு மட்டும் தான்.

"ஏன் தாத்தா சட்டை போடாமே வெளியூர் போறிங்க வறிங்க?" கேட்பேன்.

"என் சட்டை தொலைஞ்சுட்டுடா, வேற சட்டை வாங்க தாத்தாகிட்ட காசுயில்லடா" கண்ணத்தைப் பிடித்து செல்லமாய் திருகியபடியே பதிலளிப்பார். அப்படியே அடுத்த பேச்சுக்கு மாறிவிடுவார்.

காலம், தந்தையின் பணி காரணமாக என்னை பல ஊர் களுக்கு இடமாற்றியது...எப்போதாவது அத்தாத்தாவின் நினைவு வரும். என் திருமணத்திற்கு பிறகுதான் தாத் தாவின் தொலைந்த சட்டைக்கு விடை கிடைத்தது. அறிந்து விக்கித்து போனேன்.

மரணமே துயரம் தான். ஈடுசெய்ய முடியாத இழப்புதான். அதிலும் குடும்ப மரத்தில் விழுவதற்கு பழுத்த மட்டை காத்திருக்க, பிஞ்சு மட்டை சரிந்துவிட்டால்....மரத்தின் வேர் வரை வலி எடுக்கும். தாத்தா இருக்க அப்பா மறைவது, அப்பா இருக்க மகன் மறைவது.... அத்தகைய இழப்பைச் சந்தித்தோருக்கு பிறரின் எத்தகைய ஆறுத லும் செல்லாக் காசுதான்!

பலர், காலம் எனும் மருந்தால் காயத்தை ஆற்றிக் கொள்வர். சிலர் தாங்களுக்கு தாங்களே ஏற்படுத்திக் கொள்ளும் விரதங்கள் மூலம் ஆறுதலை உருவாக்கு வர்..

தாத்தாவின் வாழ்க்கையில்...தான் அதிகம் நேசித்த மகனை, புத்தியில், பண்பில் மற்ற பிள்ளைகளைவிட ஒருபடி ஒஸ்தி என கர்வப்பட்ட மகனை, தன் குலத்தின் விளக்கு இவனே... என கருதிய மகனை, ஒருநாள் சட் டென பறிகொடுத்தார்.

ஈமச்சடங்குகள் செய்வதற்காக அணிந்த மேல் சட்டை யைக் கழற்றினார்... தன் மகனின் பிரேதத்திற்கு முன்பாக தீச்சட்டி தூக்கி வெறுங்கால்களோடு நடந்தார்... அதன் பிறகு அவர் மேல் சட்டை அணியவில்லை. காலில் செருப்பு அணியவில்லை.

சுடுகாட்டில் இருந்து திரும்பி நடக்கும் போது தன்மீது மாறாஅன்பு கொண்ட தன் மகனின் நினைவுகள் என் றும் தன்னோடு இருக்க நினைத்த அவ்வாறு செய்தாரா? அல்லது எனக்கு ஏன் இந்த தண்டனை? என்ன பாவம் செய்தேன்? என இறையிடம் கோபமாக நீதி கேட்ட தன் கோலமாக தன்னை அப்படி மாற்றிக்கொண்டாரா? அவரே அறிவார்.

90 வயது வரை வாழ்ந்தவர் கடந்த 2000 ஆம் ஆண்டு மறைந்தார். இறுதிவரை அவர் அப்படியே இருந்தார். என அறிந்தேன்.

சில ஆண்டுகளுக்கு முன் எனக்கு நேர்ந்த அமானுஸ்ய அனுபவம் இது...! அவரை ரயிலில் சந்தித்தேன்... ஓய்வு பெற்ற அதிகாரி. அப்போதுதான் அவர் மகனை இழந்து சில மாதங்கள் ஆகியிருந்தது...

எவ்வித அறிமுகமும் அதற்கு முன் இல்லாத நிலையில்... என் தோற்றம் கண்டு மனம் திறந்தார். சில மாதங்க ளுக்கு முன் தனது ஒரே மகனை இழந்துவிட்ட துக்க நிலை. பேசும் போதே அவரது கண்கள் சிவந்தன.

அவருக்கு இருந்தது ஒரே மகன், இருபத்தியெட்டு வயது. நல்ல படிப்பு, நல்ல வேலை. தீய பழக்கங்கள் இல்லாதவன். திருமணத்திற்கு வரன் பார்ந்துக்கொண் டிருந்த நிலையில்...மரணம் கொண்டுபோய்விட்டது.

தொண்டையில் வலி என மருத்துவமனையில் சேர்த் தார்களாம். பதினைந்தாவது நாள் முடிந்துவிட்டது. புற்று நோய்யில் மிகமிக அரிதான ஒன்று என டாக்டர்கள் கூறி னார்களாம்.

“அதண்டு பேசமாட்டான் ஸார். என் புள்ள... மகனை இழந்ததுலேர்ந்து என் மனைவி மனநலம் சரியில்லாத வள் மாதிரி ஆகிட்டா ஸார்.”

இருவரும் ஒரே ஸ்டேஷனில் இறங்கினோம். அது ஆல யங்கள் நிறைந்த ஊர்.

“ஸார் நீ தப்பா நினைக்கலேன்னா...செத்த என் வீட் டுக்கு வர முடியுமா ? என மனைவிக்கு ரெண்டு வார்த்தை ஆறுதல் சொல்ல முடியுமா ப்ளீஸ்” என் றார். அவரது பரிதவிப்பைக் கண்ட என் மனைவி ”போவோங்க” என்றாள்.

எங்களை அழைக்க நண்பர் கார் அனுப்பியிருந்தார். டிரைவரை இறங்கச்சொல்லிவிட்டு நானே கார் ஓட்டி னேன். உடன் அப்பெரியவர் வழிகாட்டினார்.

அவர் வீட்டிற்கு போனோம். கலையிழந்த முகமாய் அத் தாய் அமர்ந்திருந்தாள். வெறிக்க பார்த்தாள். உதடு விம் மினாள். கண்களில் நீர் முட்டியது.

என் பிள்ள செத்ததுக்கு என்ன ஐயா... காரணம்? அவ்வ ளவு நல்லவன் ஐயா. என் பிள்ளைக்கு... கோபமே வராது. அதிகபட்ச கோபம் வந்தா ‘பரிமளம் சும்மா இரு’ என் பெயரை சொல்வான். அதான் ஐயா என் பிள்ளையோட தடித்த வார்த்தை.

நான் இருக்காத விரதம் இல்ல. கோயிலுக்கு செய்யாத பூஜை இல்ல. என் பிள்ள போனதும் எல்லா சாமி படத் தையும் கடல்ல தூக்கி போட்டுட்டேன்! எனக்கு நம் பிக்கை போயிட்டு..." வெறுமையாகப் பார்த்தாள். நான் எழுந்து வாசல் பக்கம் வந்தேன். அந்த பெரியவரை அழைத்தேன்.

"மகன் போட்டோ எதுவும் இருக்க...."கேட்டேன். சட் டென 'சத்தமா கேட்காதே' என்பதுபோல் வாயில் விரல் வைத்து செய்கை காட்டினவர்... காதோடு சொன் னார்... "நிறைய போட்டோ இருந்துங்க. அதை பாக்கும் போதெல்லாம், அழுகிறா என் மனைவின்னு எல்லாத் தையும் கழற்றிட்டேன்." என்றார்.

"கொஞ்சம் இருங்க" என உள்ளே போனவர் பீரோவில் இருந்து போஸ்ட் கார்டு சைசு படம் ஒன்றை எடுத்து வந் தார். வாங்கிப் பார்த்தேன். பிரம்மித்து போனேன்.

முகத்தில் அப்படி ஒரு அரச கலை. தலையில் கீரீடம் வைத்து கையில் செங்கோல் கொடுத்தால் போதும்...ஓ வியர் ரவிவர்மா வரைந்த இளவரசன் உயிர் பெற்று விடு வான். இத்தனை லெட்சணமாக ஒரு ஆண் மகனா? வியந்தேன்.

"என் பிள்ளைய கட்டிக்க ஆசை பட்ட பொண்ணுங்க எத்தனை தெரியுமா?" இரு கைகளையும் விரித்து பரித வித்தாள், அத்தாய்.

வழக்கமான சம்பிரதாய வார்த்தைகளைக் கொண்டு ஆறுதல் சொல்ல முற்பட்டேன். அலட்சியமாய், அதே சமயம் நிதானமாய் என் வார்த்தைகளை மறுத்தாள். "எனக்கு என் பிள்ளை வேணும். அவன் வரணும். அதுக்கு என்னா வழியிருக்கு சொல்லுங்க. மத்ததை பேசாதிங்க. என் பிள்ளையை பார்க்காம, பேசமா நான் சாக மாட்டேன். ஜாதகக்காரங்கங்யெல்லாம் அவனுக்கு

ஆயூசு இருக்குன்னு சொல்றாங்க. அவன் ஏன் செத் தான் தெரியணும்." என்றார்.. திடமாய். நான், அவர் பேச்சு கேட்டு அதிர்ந்தேன்.

அருகில் பெரியவர் கை கட்டி நின்றார். "மகன் இறந் ததிலேர்ந்து, இதைத்தான் பேசுறாங்க. என்ன செய்யுற துன்னு தெரியல்ல..." என்றார்.

எனக்கு அப்படியே அந்த வீட்டில் இருந்து எழுந்து வர மனம் இல்லை. ஒரு அகல் விளக்கு வேண்டும் என் றேன். அப்படியே கொஞ்சம் பூஜைப் பொருட்களும் சொன்னேன். பெரியவர் வெளியே சென்று வந்தார்.

விளக்கேற்றினேன். சாம்பிராணி போட்டேன். தியானம் செய்தேன். அத்தாயை அமர வைத்து அருள் வாக்கு போல் சொன்னேன். "நாளும் இந்த விளக்கேற்றி தியா னம் செய்யுங்கள்.

ஓராண்டுக்குள் உங்கள் மகன் கனவிலோ, நேரிலோ, தொடு உணர்விலோ, குரல் ஒலியினாலோ உங்களோடு பேசுவான்" அழுத்ததிருத்தமாய் சொன்னேன்.

அத்தாய் அதை அப்படியே ஏற்றாள். பின்பற்றுவதாக சொன்னாள். 'என் மகன் என்னோட பேசுவான்' என்று வைராக்கியத்தோடு அவளும் சொல்லிக்கொண்டாள். நான் ஏன் அப்படி ஒரு வழிபாடு செய்து, அப்படி ஒரு உறுதி மொழி கொடுத்தேன். எனக்கே தெரியவில்லை. போன் நம்பர் வாங்கிக்கொண்டார்கள்.

விடைப்பெற்றோம். மனம் கணத்தது. 'இந்தக் காலத்தில் இப்படி ஒரு தாயா?' என நானும் என் மனைவியும் வியந் தோம். காரை மெதுவாக ஓட்டினேன்.

ஒரு நாய் மூச்சு இரைக்க எனது காரைத் தாண்டி ஓடி. நடு ரோட்டில் மறித்து நின்றது. இது ஏதோ பைரவ விளையாட்டா தெரிகிறதே என இஞ்சினை ஒரு நிமி

டம் ஆப் செய்து பின்னர் பயணம் தொடர்ந்தேன். பேசிக் கொண்டே வேறு பாதையில் சென்று விட்டோம்.

அந்நேரம் மதிய மூன்று மணி இருக்கும். கண்ணுக்கு எட்டிய தூரம் வரை இருபக்கமும் வயல்கள். வெறிச்சோ டிய சாலைகள். ஒரு வயதான பெரியவர் மட்டும் ஓரா மாய் சைக்கிளில் சென்று கொண்டிருந்தார். வழி கேட்க யோசித்து, காரை அவர் அருகே நிறுத்தினேன். அவரும் சைக்கிளை விட்டு இறங்கி நின்றார்.

காரின் இடது பக்கம் கண்ணாடியை இறக்கி மனைவி வழி கேட்டாள். நானும் அப்பெரியவர் கூறுவதில் கவனம் கொண்டேன். அப்போதுதான் அந்த அமானுஷ்ய அனு பவம்...

காரின் வலது பக்க ஜென்னல் அருகில் யாரோ நிழ லாடுவது போல் தெரிய, திரும்பினேன். டூவீலரில் வந்து நிற்பது போல் தெரிந்தது. கண்ணாடியை இறக்கினேன். நான் கேட்க நினைத்த ஊருக்கு தானாகவே, அவர் வழி சொன்னார். நன்றி சொன்னேன்.

உடனே இடது பக்கம் நின்ற பெரியவரைப் பார்த்தும் நன்றி சொல்லி விட்டு திரும்பினேன். வலது பக்கம் நின் றவரை காணவில்லை. கண்ணாடி வழியாக முன்னும் பின்னும் பார்த்தேன். கண்ணுக்கு எட்டிய தூரம் வரை எந்த சுவடும் இல்லை. 300 கிமீ வேகத்தில் சென்றால் தான் ஒருவர் அவ்வளவு வேகமாக மறைந்திருக்க முடி யும்.

ஆச்சரியத்தில் உறைந்து போனோம். "அவரை எங் கேயோ பார்த்த மாதிரி இருக்கே" என்றேன்.

"ஏங்க கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி அவுங்க வீட்டுல போட்டோவுல பார்த்தமே! அதே முகம் தாங்க" என்றாள்.

எனக்கும் உள்மனம் ‘ஆமாம்.’ என்றது. சிலிர்ந்து போனேன். உருவம் அருவமாகும்! அருவம் உருவமா கும்! இதை உணர்ந்தவர்கள் மட்டுமே ஏற்றுக்கொள்வர்.

தற்போது அந்தம்மாவிடம் அவர் மகன் பேசுகிறார். அந் தம்மா சொல்லும் வாக்குகள் பலிக்கின்றன. மக்கள் அந்தம்மாவின் நல்வாக்குக்காக காத்திருக்கிறார்கள். காலில் விழுந்து ஆசீர்வாதம் வாங்குகிறார்கள்.

10.காவு வாங்கியது
சாராயம்!
காரணமானவனை
பழிவாங்கியது
இயற்கை!

முரட்டு மீசைகளுக்கு பஞ்சம் இல்லாத, மண் வாசனை மிகுந்த குக்கிராமம். வானம் பார்த்த பூமி என்றாலும்... அங்கே ஒரு வளம் உண்டு. தழுவிச் செல்லும் பருவக் காற்று உண்டு. ஏறக்குறைய அக்கிராமத்தின் எல்லா வீடுகளும் ஒரே சமூகம் தான்.

பேசும் போது... “ என்ன மாப்பிள? என்ன மாமா?” என வாஞ்சையோடு வார்த்தைகள் இருந்தாலும்... பின்னா டியே “விஷமக்காரன்ப்பா... அவன்கிட்ட சூதனமா நடக் கனும்டா..” சூடான பற்ற வைப்புகளும் இருக்கும். அத னால் சமூகத்துக்குள் அடிக்கடி விரோதங்கள், மோதல் கள் எழும். அதற்கு போலீஸ் ஸ்டேசன் போகமாட்டார் கள்.

ஆலமரத்தடியில் பஞ்சாயத்து பேசி, அபராதம் விதித்து முடிக்கப்படும். பஞ்சாயத்தில் தலைவராக உட்காரக்கூடியவர் மூக்கையன். தெற்குத் தெருவில் பெரிய வீடு.

கிராமத்தின் ஊராட்சி மன்றத் தலைவரும் கூட. பல வருடமாக அவர், அவர் தம்பி, அவரது அண்ணன் மகன் தான் அவ்வூரின் அரசியல் அந்தஸ்துகளை அனுபவத்து வருகிறார்கள்.

அதே கிராமத்தின் கீழத்தெருவில், இன்னொரு பெரிய கட்டு வீடு ரெங்கையனுடையது. அவர் பிள்ளைகள் சவுதி போய் சம்பாதித்ததால்... இந்த தலைமுறையில் நிமிர்ந்த குடும்பம்.

"புதுசா காசப் பார்த்தவன்னப்பா" என ரெங்கையனை நையாண்டி கலந்து வர்ணிப்பார்கள்..

என்னதான் மூக்கையன் குடும்பத்துக்கு இணையாக தோட்டம், தோப்பு என வசதிகளில் இருந்தாலும்... உள்ளூரார் மதிப்பதில், மூக்கையன் குடும்பத்தைவிட ஒரு படி குறைவாக நடத்தப்படுவதை உணர்ந்தார்கள் ரெங்கையன் பிள்ளைகள்.

கிராமத்துக்கு எம்.எல்.ஏ வந்தால்...தாசில்தார் வந்தால், பி.டி.ஓ வந்தால், நேராக மூக்கையன் வீட்டிற்குத்தான் முதலில் போவார்கள். குரும்பாடோ, கோழிக்கறியோ, குறைந்தபட்சம் காபித்தண்ணியாவது மூக்கையன் உபசரிப்பில் மகிழ்ந்துவிட்டுத்தான் வந்த பணிகளைச் செய்வார்கள், அதிகாரிகள்.

தன் வீட்டிற்கும், அப்படி அதிகாரிகள் வர வேண்டும்.

பஞ்சாயத்தில், கோயில் திருவிழாவில் தங்களுக்கும் தனி மரியாதைகள் கிடைக்க வேண்டும் என ஏக்கம் கொண்டார்கள், ரெங்கையன் குடும்பத்தார்.

அந்த நேரம் பார்த்து..., கிராம பஞ்சாயத்து தேர்தல் அறி விப்பு வந்தது. பொதுவாக கிராமத்தார் கூடி போட்டி யில்லாமல் மூக்கையன் குடும்பத்தாரை தேர்ந்தெடுத்து விடுவார்கள்.

வழக்கத்துக்கு மாறாக, அந்த முறை அவரை எதிர்த்து போட்டியிடுவது என முடிவெடுத்தது, ரெங்கையன் குடும்பம்.

மூக்கையனின் பஞ்சாயத்து தீர்ப்புகளால், பதிக்கப்பட்டு மனப்புழுக்கத்தோடு இருந்த சிலர் ரெங்கையனை வீடு தேடி வந்து ஆதரித்தார்கள். இதனால் தேர்தல் களம், கடும் சூடு பிடித்தது.

அப்போது அரசே முன்னின்று மது விற்காத காலம். அங்கொன்றும், இங்கொன்றுமாக கிராமங்களில் சாரா யம் காய்ச்சும் பழக்கம் இருந்தது. கண்டும் காணாமல் இருக்க, காவல் துறைக்கு மாமூல் போனது.

தேர்தலை முன்னிட்டு, இரண்டு குடும்பத்தாரும் தங்கள் தோப்புகளில் சாராய ஊறல் போட்டனர். நாள்தோறும், பிரச்சாரத்துக்கு இலவச சாராயம் வினியோகிக்கப்பட் டன. நாள் நெருங்க நெருங்க... இறுதியில் "மூக்கைய னுக்கே வெற்றி" என பேச்சு எழுந்தது. கிராமத்தில் எத் தனை ஓட்டு ரெங்கையனுக்கு வரும்? எத்தனை ஓட்டு மூக்கையனுக்கு வரும்? என கணக்குப் பார்க்கப்பட்டது.

ரெங்கையனை விட, மூக்கையனுக்கு பண்ணிரெண்டு ஓட்டு கூடுதலாக விழும் என தெரிந்தது. ரெங்கையன் குடும்பத்தார் கடும் மனநெருக்கடிக்கு உள்ளனார்கள். "சும்மா இருந்த மூக்கையனை சீண்டிட்டம்டா மவனே. அவன் மோசமானவன். நாம...தோத்துட்டோம்ன்னு வை...நானும் உங்க ஆத்தாளும் ஊருல தலை நிமிர்ந்து நடக்க முடியாதுடா. நாண்டுகிட்டுதான் சாகணும்" பதற் றத்தை மேலும் அதிகரித்தார் ரெங்கையன்.

தலை கிறுகிறுத்தனர் ரெங்கையன் மகன்கள். ‘கெட்ட நேரத்துல கெட்ட புத்தி வரும்'ன்னு ஒரு பழமொழி உண்டு. அப்படிப்பட்ட ஒரு யோசனை வந்தது ரெங்கை யனின் மூத்த மகன் பாண்டிக்கு.....

யாரிடமும் எதுவும் ஆலோசிக்கவில்லை. தலையில் கம் பிளியைக் கட்டிக்கொண்டு... நடு இரவில்...புறப்பட்டான். ஒரு கையில் சின்ன டார்சும், மறுகையில் கோம்ப நாயு மாக, தோளில் சின்ன மண்வெட்டியோடு நடையைப் போட்டான், பாண்டி. அப்பகுதியில் நாயோடு காட்டுப் பகுதியில் முயல் வேட்டைக்கு செல்வது, கொல்லை காவலுக்கு செல்வது வழக்கம். அதுமாதிரி புறப்பட்டா லும், தெரு வழியாக போகாமல், பின்பக்க கொல்லை வழியாக பயணப்பட்டான்.

நரியைப்போல் நின்று, நிதானமாய், யார் கண்ணிலும் படாமல் மூக்கையன் தோப்பில் நுழைந்தான். மோப்ப நாய் உதவியோடு மூன்று இடத்தை தோண்டிப் பார்த் தான். இறுதியில் அவன் தேடியது கிடைத்தது.

மறுநாள் தேர்தல்... ஓட்டு பதிவன்று சப்ளை செய்ய பெரும், பெரும் பானைகளில் சாராயம் ஊற வைத்தி ருந்தார் மூக்கையன்.. கையில் கொண்டு சென்றிருந்த மருந்தை அவசர அவசரமாய் ஒரு பானையில் கலந் தான். மண் போட்டு மூடினான். தூரத்தே நாய் குலைக் கும் சத்தம் கேட்டது.... விரைந்து தோப்பை விட்டு நகர்ந் தான்.

பொழுது புலர்ந்தது...வாக்கு பதிவு தொடங்கியது. மூக் கையன் வீட்டு கொல்லையில் பந்தல போட்டு சாராயம் பிளஸ் கறிச்சாப்பாடு விருந்து உபசரிப்பு. அதே மாதிரி ரெங்கையன் தரப்பிலும் சாராயத்தோடு, கறி சாப்பாடு.

“வாழ்நாள்லேயே.. இப்படி ஒரு தேர்தல்? நம்ம ஊருல நடந்தது இல்லடா மாப்புள. மாத்தி மாத்தி என்

னமா உபசரிக்கிறான்னுங்க" புளங்காயிதம் அடையிந்த னர் மக்கள். "என்ன மாப்ள... நாம ஜெயிச்சிடுவோம்ல..." மீசையை சுருட்டினார், மூக்கையன். விருந்து சாப்பிட் டவர்கள் கையெடுத்து கும்பிட்டார்கள். "சூரியன் மாத்தி உதிக்குமா தலைவரே? வெற்றி உங்களுக்குத்தான்" என்று பவ்வியம் காட்டினார்கள்.

மதியம் மூன்று மணிக்கு மேல்...மற்ற பானைகள் சாரா யம் தீர்ந்து போக...கடைசி பானை சரக்கை கேனில் ஊற்றி, மூக்கையன் வீட்டு விருந்துக்கு கொண்டு வந்த னர். அதுதான் பாண்டி மருந்து கலந்த பானை.

"சரக்கு சரியா ஊறலப்பா..."என்றான் ஒருவன். ஓசில குடிக்கீறியில... குத்தம் தாண்டா சொல்லுவீங்க" ஊற்றி யவன் கடுகடுத்தான்.

"ஓட்டு உங்களுக்குத்தான் அப்பு போடனும். மரியாதைய பேசுல" என்றவனுக்கு இன்னொரு கிளாஸ் மரியாதை யோடு கிடைத்தது.

"இன்னும் ஒரு கிளாஸ் ஊத்து. இன்னும் ஒரு கிளாஸ் ஊத்து," கேட்டு வாங்கிக் குடித்தார்கள். "எப்பையும் தலைவர் வீடு சரக்கு, ஓஸ்தி சரக்குதான்" பேசி சிரித்த படி கறிசோற்றில் கை வைத்தார்கள்.

முதல் ரவுண்டு குடித்த... எட்டு பேரில் மூணு பேர் இலையிலேயே வாந்தி எடுத்தார்கள். ஐந்து பேர் சாப் பிட்டு முடித்துவிட்டு வாந்தியெடுத்தார்கள். அவர்களால் எழுந்து நிற்க முடியவில்லை. அப்படியே தலையை பிடித்தபடி மண்ணில் உட்கார்ந்தார்கள். பொத்தென சாய்ந்தார்கள்.

"அளவுக்கு மீறி குடிச்சிட்டானுங்கடா... ஏண்டா அவன்க ஓட்டு போட்டுட்டானுங்களா?" பதற்றமாய் கேட்டார் மூக் கையனின் மகன் ஒருத்தன். விரலில் மை இல்லாததை

பார்த்துவிட்டு, இன்னும் போடலைங்க என்றான், மற் றொருவன். “தலையில தண்ணிய ஊத்தி எழுப்புங்கடா” என்று அதட்டல் போடும் போதுதான் கவனித்தான். இருவர் வாயில் நுறை தள்ளுவதை.... பதற்றமடைந்தது. மூக்கையன் வகையறா.

அக்காலங்களில் விஷச்சாராயம் அருந்தி ஒரே நேரத் தில் இருபது பேர் மரணம். நூறு பேர் வாந்தி மயக்கம் என பேப்பரில் அவ்வப்போது படிக்க முடியும். தாங்கள் வழங் கிய சாராயம் கெட்டு போயிவிட்டது என படபடப்பானார் கள்... இருந்ததை அவசர அவசரமாய் சாக்கடையில் ஊற்றினார்கள். மயங்கிய பத்து பேரையும் மூக்கையன் வீட்டு டிராக்டரில் தூக்கி கிடத்தினர். ஊர் பரபரபடைவ தற்குள் ஐந்து கிலோ மீட்டர் அருகில் இருக்கும் மருத் துவமனைக்கு டிரைக்டர் உலுக்கிக்கொண்டு போனது. அவர்கள் கைவிரித்தார்கள். பெரிய ஆஸ்பத்திரிக்கு அனுப்பினார்கள்.

இதற்குள் வாக்குப்பதிவு நேரம் முடிந்து. வாக்குச்சீட்டு கள் பாதுகாப்பாய் எடுத்துச்செல்லப்பட்டன. சீரியஸ் எனும் தகவலால்...ஊரில் பதற்றம் பரவியது.

ஓட்டு பதிவின் போது... விஷச் சாராயம் அருந்தி...பத்து பேர் வாந்தி மயக்கம். ஆறு பேர் கவலைக்கிடம். மாநில செய்தி ஆனது. மூக்கையன் இரவே தலைமறைவா னார். கிராமம் முழுதும் போலீஸார் நிரம்பினர்

அடுத்த நாள் மூன்று உடல்கள் வரிசையாக கிராமத் துக்குள் வந்தன. மாவட்டமே துக்கமயமானது. வாழ்நா ளெல்லாம் கம்பீரமாக வலம் வந்த மூக்கையனை கைது செய்தது போலீஸ்.

தேர்தல் முடிவு அறிவித்தார்கள். ஆறு ஓட்டு வித்தி யாசத்தில் ரெங்கையன் வெற்றி பெற்றிருந்தார். சர்வ அதிகாரங்களும் கைக்கு கிடைத்து விட்டதைப்போல்

ஆனந்தப்பட்டார்கள், ரெங்கையன் வகையறா. ஒரு மாதம் கடந்தது...கம்மாக்கரையில் முழு போதையில் அமர்ந்திருந்த பாண்டி சில அல்லக்கைகளிடம் சொன்னான்... "அன்னைக்கு பதினைஞ்சி பாடியாவது ஊருக்கு வரும்ன்னு எதிர்பார்த்தேன்" என ஒரு வார்த்தைத்தான் விட்டான்.

அந்த வார்த்தை...பல காது கடந்து, போனது. அடுத்த நாள் பாண்டியை போலீஸார், கைது செய்தனர். வழக்கு மூன்று வருடம் இழுத்தது. இறுதியில் தீர்ப்பு வாசித்தார்கள். 'போஸ்ட்மாடம் ரிப்போர்ட் படி விஷம் கலந்திருப்பது உண்மை. ஆனால் சாராயம் அருந்தியவர்கள் கூடவே கறிவிருந்தும்

சாப்பிட்டதால்... அந்த விஷம் சாராயத்தில் கலந்ததா? கறிச்சோற்றில் கலந்ததா? என்பதை சரிவர உறுதி செய்யப்படாததாலும்,...பாண்டி தான் சாராயத்தில் விஷம் கலந்தார் என்பதற்கு போதுமான ஆதாரம், சாட்சி இல்லாததாலும்...அவர் நிரபராதி என வழக்கில் இருந்து விடுவிக்கப்படுகிறார்' என தீர்ப்பு வாசிக்கப்பட்டது..

சட்டத்தின் சந்துகளில் புகுந்து தப்பித்தான், பாண்டி. ஊர் நல்லவர்கள் விக்கித்து போனார்கள். பெருமூச்சு விட்டார்கள். கணவனை பறிகொடுத்த பெண்கள் சிறு தெய்வங்களைத் திட்டித்தீர்த்தார்கள். கோயிலில் மண்ணை வாரி இறைத்தார்கள்.

அத்தீர்ப்பு வந்து ஓராண்டு முடிவதற்குள் பிரபஞ்ச சக்தி நிஜ தீர்ப்பு வாசித்தது. நடு இரவில் சிறுநீர் கழிக்க வாசலுக்கு வந்தவனை கரு நாகம் தீண்டியது.

உயிருக்கு போராடியவனை, அதே பெரிய ஆஸ்பத்திரிக்கு டிராக்டரில் கிடத்துக்கொண்டு போனார்கள். வாயில் நுறை தள்ளியது. வரும் போது சடலமாக வெள்ளைத் துணியில் சுருட்டி தூக்கி வந்தார்கள்.

அடுத்த ஐந்தாண்டுகளில் மூன்று துர்மரணங்கள் அந்த வீட்டில் நடந்தன. கிணற்று பம்பு செட்டில் மின்சாரம் தாக்கி பலியானார் ரெங்கையன்.

## 11.''ஆசுபத்திரியில சேர்த்த காசு, ஆசுபத்திரியில போயிட்டு''

வெளியூர் கலயாணத்துக்கு சென்றுவிட்டு வந்து பஸ் ஸாண்டில் டவுன் பஸ்சுக்காக காத்திருந்தார், நிர்மலா!

அந்நேரம் ஒரு சவ ஊர்வலம் சென்றது.

“யார் சாவு?” விசரிக்கிறார்... அருகே இருந்தவர் கள் “அவதான்.”.என அலட்சியமாக பதலளிக்கிறார்கள். அதைக் கேட்டதும்...நிர்மலாவிற்கு சில ஆண்டுகளுக்கு முன் தன் சொந்த வாழ்க்கையில் நிகழ்ந்த அந்தச் துக் கம்... நினைவுகளைப் பின்னோக்கி இழுக்கிறது.

அது நடந்து ஏழு எட்டு வருடங்கள் இருக்கும்....நிர்மலா தனது மகளை அழைத்துக்கொண்டு தாலுக்கா மருத்து வமனைக்கு அதிகாலையே வந்து விட்டார். அவரது மக ளுக்கு இது தலைப் பிரசவம்.

நிர்மலாவுக்கு சொந்தமாக இரண்டு பசு மாடும், ஒரு கூரை வீடு மட்டுமே. அவ்வப்போது கூலி வேலைக்கும் செல்வார். சிக்கனமாக வாழ்ந்துதான், மூத்த மகளை திருமணம் செய்து கொடுத்தார்.

மாப்பிள்ளைக்கு லாரி கீளினர் வேலை. ஐந்து பவுன் போட்டு கட்டிக் கொடுத்தார். அவள் வசதிக்கு தனியார் மருத்துவமனை எல்லாம் எட்டா கனவு!

மகள், கர்ப்பம் தரித்ததில் இருந்து, இந்த அரசு மகப் பேறு மருத்துவமனையிலேயேதான் காட்டி வந்தார். அப் படி வரும் போதெல்லாம்... பெரிய நர்ஸம்மா முத்துமீ னாவை எதிர்கொண்டே, சீட் வாங்க வேண்டும். வரும் நோயாளிகள் அவரிடம் மிகுந்த பணிவு காட்ட வேண் டும். அப்படி நடந்துகொள்ளாத நோயாளிகளை வேண் டுமென்றே அழைக்களிப்பாள். அந்த மருத்துவமனை யின் சர்வ அதிகாரமும் அவர் கையில் இருப்பதுபோல் அதட்டல் உருட்டலாக நடந்து கொள்வாள்.

சதா யாரையாவது திட்டிக்கொண்டே இருப்பாள். டாக் டர்களைத் தவிர கம்பவுண்டர்கள், தூய்மைப் பணியா ளர்கள் சக நர்ஸ்கள் முத்துமீனாவுக்கு அடிபணிந்தே நடப்பார்கள்.

முத்துமீனாவுக்கு ஐம்பது கடந்திருக்கும். அலங்கார விரும்பி. இரண்டு மகள், ஒரு மகன். கணவர் வீட்டை விட்டு வெளியேறி இருபது வருடங்களுக்கு மேல் ஆகிற தாம். அவர் என்ன ஆனார்? யாருக்கும் தெரியாது.

முத்துமீனாவை பெரும்பாலும் உள்ளூரில் உள்ள எக்ஸ் எம்.எல்.ஏ வீட்டில் தான் பார்க்க முடியும். அந்த வீட் டில் ஒரு வயதான பாட்டி இருந்த காலத்தில் ஊசி போட போனவர். பின்னர் அந்த குடும்பத்தில் ஒருவராக மாறிப்போனார். அந்த பின்னணிதான் அதிகாரத் தோர ணையை முத்துமீனாவிற்கு கொடுத்துவிட்டது.

மகளை செக்கிங்கிற்கு மருத்துவமனை அழைத்து வரும் போதெல்லாம் நிர்மலாவிடம் “நெய் கொண்டு வா, வெண்ணைக் கொண்டு வா” எனக் கேட்பாள், நர்ஸ் முத்துமீனா.

நிர்மலாவும் கொண்டு வந்து கொடுத்து விடுவார். பிரச வம் முடியும் வரை, அவர் தயவு வேண்டுமே!

காலை வந்தவுடனே மகளை, அட்மிட் செய்துவிட்டார் கள்., இனிமாவும் கொடுத்துவிட்டார்கள்.. மதியம் பிரச வம் ஆகும் என்றார்கள். வலிக்கு, போடுவதற்கான ஊசி மற்றும் சில பொதுவான மருந்துகளை மெடிக்கலில் வாங்கித் தர சொல்கிறாள், நர்ஸ் முத்துமீனா. வாங்கித் தருகிறார் நிர்மலா.

சிறிது நேரம் கழித்து பிளாஸ்கில் "டாக்டருக்கு காபி வாங்கிட்டு வா" என்கிறாள். அப்புறம் 'கை கழுவ சோப் வேணும், அது வேணும், அது வேணும்' என சின்ன சின்ன செலவுகள் வைத்தப்படியே இருக்கிறார்.

"பிரசவம் எப்ப ஆகும்?" என கேட்கிறார், நிர்மலா. மதி யானம் ஆயிடும். "ஏன் எல்லாருக்கும் பிரியாணி வாங் கிக் கொடுக்க போறியா?" என நக்கலாக கேட்டுவிட் டு.."மணிக்கு ஒருதரம், இதே கேள்வியை கேட்க கூடாது தெரியுதா? ஆகும் போது சொல்லுவோம்". என அதட்டு கிறார்.

பெரும்பாலும் அந்த மருத்துவமனை முழுதும் ஏழை பாழைகள் தான் நிரம்பி இருப்பார்கள். அவர்களால் பணி செய்யும் ஊழியர்களுக்கு பெரிதாக மேல் வரும் படி கிடைக்காததால்.. யாரிடமும் எரிந்து, கடிந்தும் தான் ஊழியர்கள் பேசுவது வழக்கம். அதை சகித்துக்கொண் டால்தான்...அரசு மருத்துவமனையை பயன்படுத்திக் கொள்ள முடியும்.

வாராண்டாவில் 'எல்லாம் நல்ல விதமாய் நடக்க வேண் டுமே!' என தவிப்போடு உட்கார்ந்திருந்தார், நிர்மலா., வார்டுபாய் வந்து "நர்ஸ்ம்மா கூப்பிடுவதாக" அழைக்கி றார்.

“நம்ம ஆசுபத்திரி வழக்கம் தெரியுமில்ல...? எனக் கேட்டு விட்டு, முத்துமீனாவே பதிலும் சொல்கிறார்...” ஆம்புள புள்ள பொறந்தா ஐநூறும், பொம்பள புறந்தா முந்நூறும். வார்டு செலவுக்கு தனியா தரணும், புரியுதா?” என்கி றாள்.

நிர்மலா தயங்கியபடியே, பணிவாய் விண்ணப்பிக்கி றாள்... “கையில இருநூறு ரூவாத்தான் வைச்சியிருக் கேன். கைச்செலவுக்குதான் ஆகும். பிள்ள பொறந்த தும், பிள்ளைய பார்க்க வரவங்கிட்ட வாங்கி தரேன். இல் லேன்னா நாளைக்கு எப்படியும் மாப்பிள்ளை வந்துடு வாரு. அவருகிட்ட வாங்கித் தரேன்” என்கிறாள்.

எரிச்சல் அடைகிறார், முத்துமீனா. “இங்க என்ன தொழிலா பன்றோம். மாப்பிள்ளை வரட்டும்கிறே!”சட் டென நாற்காலியை விட்டு எழுந்து சென்றுவிட, பழை யபடி கவலையோடு வரண்டாவிற்கு வந்தமர்ந்தாள், நிர் மலா.மதியம் பிரசவம். நடக்கவில்லை. மாலை ஆகிவிட் டது.

ஆறுமணிக்கு மேல் நிர்மலாவை அழைத்த டூட்டி டாக்டர்... “உங்க மகளுக்கு ஆப்ரேசன் செய்யணும். அதுக்கு, இரத்தம் நிறைய வேணும். இங்க போதுமான வசதி இல்ல. உடனே பெரிய ஆஸ்பத்திரிக்கு கூட்டிட்டு போங்க” என்கிறார்.

நிர்மலாவிற்கு தலை கிறுகிறுக்கிறது. “என்னாச்சு டாக் டர்? பயப்புடுற மாதிரி ஏதாவது?” டாக்டரிடம் திரும் பத் திரும்ப கேட்கிறாள். ”காலையிலேயே தெரிஞ்சி யிருந்தா கிராமத்துலேர்ந்து யாரையாவது கூட்டியாந்தி ருப்பேனே” என புலம்புகிறாள்.

“லேட் பண்ணாதீங்கம்மா, பெரிய ஆசுபத்திரிக்கு லெட் டர் கொடுத்திருக்கேன். நர்ஸ்ம்மாகிட்ட வாங்கிங்க.” என்றபடி அவர் நகர்ந்துவிட....பெரிய ஆசுபத்திரி போக

ஆம்புலன்ஸ் பார்க்கிறாள்...அது ரிப்பேர் என்கிறார்கள். கையில் பெரிய பணமும் இல்லை. இந்த நிலையில் பஸ்சிலும் போக முடியாது. குலதெய்வம் அய்யனாரை வேண்டிக்கொண்டு, டாக்ஸி ஸ்டேண்டுக்கு ஓடுகிறார். அங்கே நிலைமைச் சொல்லி கண்ணீரோடு அழைக்கி றார். நிலமையை புரிந்துகொண்டு, பரிதாபப்பட்ட ஒரு இளம் டாக்ஸி ஓட்டுனர் அழைத்துபோக முன் வருகி றார்.

ஒரு மணி நேர பயணம். பிரசவ வலியோடு, பிள்ளைத் தாச்சி மகளை அழைத்துக்கொண்டு தாய் பயணிக்கி றாள். வழியில் டிரைவரும், நிர்மலாவும் பேசிக்கொண்டே செல்கிறார்கள்..., "ஒன்னும் கவலைப்படாதீங்கம்மா. எனக்கு தங்கச்சி இல்ல. இருந்தா... அதுக்கு செய்ய மாட்டேன்னா? ஆப்ரேஷன் முடியிற வரைக்கும் கூடவே இருந்து உங்களுக்கு உதவுறேன். அந்த ஊருல எனக்கு தெரிந்த டிரைவருங்க இருக்காங்க." என்கிறான்.

"அந்த அய்யனார் தான் உங்கள அனுப்பிசியிருக்காரு" என கையெடுத்து கும்பிடுகிறாள். ஒருவழியாக மாவட்ட மருத்துவமனைக்கு வந்துவிட்டார்கள். நிர்மலாவிடம் நிறைய கையெழுத்து வாங்கிக்கொள்கிறார்கள்.

ஸ்டெச்சரில் வைத்து தியேட்டருக்கு தள்ளிக்கொண்டு போகும் போது... வலி தாங்க முடியாமல் கத்துகிறாள், அங்கேயும் ஒரு நர்ஸ் கோபப்படுகிறார்..."எங்க எங்கயோ சுத்திட்டு கடைசியில, எங்க உயிர எடுக்க, எல்லாரும் இங்க வந்துடுங்க" என எரிச்சலடைகிறார்.

ஆப்ரேஷனுக்கு எட்டு பாட்டில் இரத்தம் கேட்கிறார்கள். உடனே, அந்த ஊரில் இருக்கும் டாக்ஸி தோழர்களி டம் பேசி ஏற்பாடு செய்கிறான். கொஞ்சம் பண செலவும் ஆகிறது. அதையும் அவனே தருகிறான்.

ஆப்ரேஷன் தியேட்டரில் அறுவை சிகிச்சை முடித்து குழந்தையை எடுக்கிறார்கள். ஆண் குழந்தை! ஆனால் உயிறற்று இருக்கிறது. "குழந்தை ஏற்கனவே இறந்து விட்டது" உதட்டைப் பிதுக்கிறார், டாக்டர்.தகவல் அறிந்து நிர்மலா பெருங்குரலெடுத்து அழுகிறாள்.

"அங்கேயே அறுவைசிகிச்சை செய்திருந்தா. குழந் தையை காப்பாத்தியிருக்கலாம். அதுக்கு உங்ககிட்ட பணம் எதிர்பாத்திருக்காங்க. உங்ககிட்ட பணம் இல் லேன்னு தெரிஞ்சிருக்கும். அதான் இங்க அனுப்பிட் டாங்க. அதுவும் ஆம்புளபிள்ள. அநியாயமா கடைசி நேரத்துல, அங்க இங்க அலைய உட்டு புள்ளைய கொண்ணுபுட்டாளுங்க." என்றாள் மருத்துவமனையை கூட்டிப் பெருக்கும் பச்சை புடவைக்கார அம்மா ஒருவர்.

அந்த சிசுவை மருத்துவமனையின் பின்பக்கமே குழி யைத் தோண்டி, தன் கையால் புதைத்து மண் மூடினால் நிர்மலா... "இந்த கதிக்கு காரணமானவங்கள ... கணக்கு தீர்க்கனும்டா அய்யனாரே!" ஆவேசம் பொங்க சொல்லி, அருகே இருந்த குளத்தில் தலை முழுகினார், நிர் மலா. அவர் அப்படி உரக்க சொல்லும் போது...நிர்மலா வின் கண்ணில் முத்துமீனா நிழலாடினாள். பல்லை நற நறவென கடித்துக்கொண்டார். அந்த டாக்டரும் மீதும் கோபம் வந்தது.

அதன் பிறகு இரு வருடம் கழித்து அடுத்த பிரசவத்தில் நிர்மலாவின் மகள் இரட்டை ஆண் குழந்தைகளைப் பெற்றெடுத்தாள். "அய்யனார் இழந்ததை சேர்த்தே கொடுத்துவிட்டார்!" என எண்ணி மகிழ்ந்தார், நிர்மலா.

காலம் உருண்டோடியது மனதில் இருந்த ரணங்கள் வடுக்களாக மாறி மறந்தே போன நிலையில்... நிர்மலா வின் நெஞ்சில் மீண்டும் நினைவுபடுத்தியது இந்த சவ ஊர்வலம். "ஐயோன்னு கட்டையில போவ...

உன் வாயில புத்து வைக்க... இப்படி எத்தன பேர்? பழி யையும், பாவத்தையும் வாங்கியிருப்பா..." பேசிக்கொண் டார்கள்.

"முத்துமீனாவின் ஒரு மகள் கட்டிகொடுத்த இடத்தில் தற்கொலையாம்! ஒரு மகள் திரும்பி வந்துவிட்டாளாம்! மகன் ஒன்னுக்கும் லாயக்கு இல்லாத குடிகாரனாம்." கிராமத்து ஜனங்கள் தங்களுக்கு தெரிந்ததைப் பகிர்ந் தார்கள்.

முத்துமீனாவிற்கு இரு கிட்னியும் பழுதானதோடு, புற்று நோயியும் தழுவியே மாண்டுள்ளாள்.. "சென்னையில வச்சி பெரும் செலவு செஞ்சும் சேர்த்த பாவம், கரை சேர உடல!"

" முழுக்க தண்ணி கலந்து, பால் வித்தானாம். அவன் பிள்ள கடல விழுந்து செத்தானாம்! அதுமாதிரி, ஆசுபத் திரியில சேர்த்த காசு, ஆசுபத்திரியில போயிட்டு" கல வையாய் பேசிக்கொண்டார்கள், ஜெனங்கள்.

'அந்த டாக்டர் மெட்ராசுக்கு மாறி போயிட்டர். அவருக் கும் அய்யனார் ஏதாவது தண்டனை கொடுத்திருப்பார்.' என மனதுக்குள் நினைத்துக்கொண்டாள், நிர்மலா. இந்த நம்பிக்கைகள்தான் அதிகாரம் ஏதுமற்ற சாமானி யர்களின் ஆயுதம்.

12.''பணத்தை எரித்த சித்தர்!

அமானுஷ்ய மனிதர்களை எல்லோரும் சந்தித்துவிட முடியுமா? அது ஒரு அபூர்வ நிகழ்வாகவே அமைகிறது. பெரும் செல்வந்தர்கள், அதிகார மிக்கவர்களை விட சாமானியர்களின் வாழ்க்கையில் தான், அவர்கள் தானாக வந்து குறுக்கிடுகிறார்கள்.

திருவண்ணாமலையில் ஒரு சித்த புருஷர் வாழ்ந்தார். அவரது கண் பார்வைக்காக பலர் நாளும் தவம் கிடந்தார்கள். சில நேரங்களில் அமைதியாக இருப்பார். சில நேரங்களில் பக்தர்களை அடித்து விரட்டுவார். எங்கும் உட்காருவார், எங்கும் படுப்பார். மெலிந்த தேகம். காடு போல் தாடி. இடுப்பில் அழுக்கு வேட்டி அல்லது சாக்கு சுற்றியிறுப்பார். பெரும்பாலும் அவரது தலை குனிந்தே இருக்கும். இமைகள் மூடியே இருக்கும். எப்போதாவது வார்த்தைகள் உதிரும். அதில் பல அருகில் இருப்போருக்கு நேரடியாக புரியாதவை. “மொட்டையன் கணக்கு” என கரித்துண்டால் சுவற்றில் எழுதி வைப்பார். ‘சித்தம் போக்கு சிவம் போக்கு’ எனும் வாக்கியத்தின் நிஜ அடையாளம்.

அவரைச் சுற்றி அமர்ந்தவர்கள் எப்போது பார்வைப்படும்? என ஏங்குவார்கள். அவர் செய்த சித்துகள் எண்ணில் அடங்காதவை. எந்த நேரத்தில் எப்படி செயல்படுவார் எனபது கணிக்க முடியாதவை.

எளிய நிகழ்வுகள் இரண்டை இங்கே எழுதுகிறேன்... முப்பது ஆண்டுகளுக்கு முன்பு...

திருவண்ணாமலையில் கடை ஒன்றில் சாதாரண தொழிலாளி வேலை செய்து வந்தார் சந்திரன். அன்று அவர் மனைவி ஊரில் இல்லை. வீட்டில் கை சமையல் செய்து வைத்துவிட்டு, வேலைக்கு சைக்கிளில் சென்று கொண்டிருக்கிறார்.

அந்நேரம் சாலையில் எதிரே வந்து கையைக் நீட்டி சந் திரனின் சைக்கிளை நிறுத்துகிறார் சித்தர்...

"பசிக்குது சைக்கிளை வீட்டுக்கு திருப்பு" என்கிறார்.

பொதுவாக சித்தர் அப்படி தானாக முன்வந்து கேட்பது அரிதோ அரிது.. தன்னிடம் சாப்பாடு கேட்டது சந்திர னுக்கு பேரானந்தம் தந்தாலும்...தன் வீடோ எளிய குடித் தனம். வீட்டில் இருப்பதோ அவர் செய்த எளிய சாப்பாடு. சற்றே தயங்கி..'ஹோட்டலில் இட்லி வாங்கலாமா?' என யோசித்து நிதானிக்கிறார்....

"வீட்டுக்கு சைக்கிள ஓட்டுடா..." என அதட்டுகிறார். வேறு வழியின்றி சித்தரை டபுள்ஸ் அழைத்துக்கொண்டு பயணிக்கிறார். இரண்டு சந்து வழியாக தனது ஒண்டு குடித்தன வீட்டுக்குள் அழைத்துச் செல்கிறார்.

அங்கே தரையில் சம்மணமிட்டு உட்கார்ந்த சித்தர்... "ம்...

பசிக்குது, சீக்கிரம் வை" அதிகாரமாய் கேட்கிறார். சமைத்தைத் தட்டில் பரிமாறுகிறார் சந்திரன்... வயிறு புடைக்க சாப்பிடுகிறார், சித்தர். "இன்னும் வை. இன் னும் வை..." இருந்த உணவை அனைத்தையும் சாப்பிடு கிறார்.

கைகழுவிவிட்டு எழும் போது சுவற்றில் ஒரு பழைய லெட்சுமி காலண்டர் தொங்குகிறது. பக்கத்தே ஆணி யில் சாவி கொத்து ஒன்று தொங்குகிறது.

சட்டென ஆவேசம் வந்தவர் போல் அந்த சாவி கொத்தை எடுத்து லெட்சுமி காலண்டரைப் பார்த்து ...என்னாடி பன்ற... மூட்டைய அவுறுடி..." என கண்டபடி கடும் சொற்களால் காலண்டரில் உள்ள லெட்சுமி படத்தைத் பார்த்து திட்டுகிறார். திட்டும் அதே ஆவேசத்தோடு... வேகமாய், கையில் இருக்கும் சாவி

கொத்தால் படத்தின் மீது வீசி அடித்துவிட்டு, வெளியே றுகிறார்.

அதன் பிறகு மறுபடியும் சந்திரன் வீட்டிக்குள் சித்தர் நுழையவில்லை. ஆனால் லெட்சுமி நுழைந்துவிட்டாள். அதன்பிறகான ஆண்டுகளில் சந்திரனை சில கோடிக ளுக்கு உரிமையுள்ளவராக மாற்றிவிட்டாள் லெட்சுமி.

அன்று உணவாக சித்தர் சாப்பிட்டது, அந்த வீட்டின் வறுமையையோ! தர்த்திரியத்தை தன் வயிற்றில் செரி மானம் செய்தாரோ!. இன்றுளவும் சந்திரன் வாழ்க்கை யில் அது ஒரு அமானுஷ்ய அனுபவம்.

***

மற்றொரு சம்பவம்... இப்படியும் சித்தர்கள் நடந்து கொள்வார்களா? என வியப்பேற்படுத்தும் நிகழ்வு! சில ஆண்டுகளுக்கு முன் அதே சித்தர் தனது மற்றொரு அதிதீவிர பக்தரான ஹோட்டல் உரிமையாளர் கிருஷ் ணனை போய் திடீரென சந்திக்கிறார்.

அந்நேரம் ஊழியரிடம் வங்கியில் கட்டுவதற் காக பணத்தை எடுத்து எண்ணிக்கொண்டிருக்கிறார், கிருஷ்ணன். சித்தரைக் கண்டதும் எழுந்து பணிவு காட்டுகிறார். "ஒரு லெட்ச ருவா கொடுங்க" என கிருஷ ணனிடம் கேட்கிறார்.

கிருஷ்ணனுக்கு அதிர்ச்சி!. 'சாமிக்கு எதுக்கு பணம்?' என குழப்பமாய், 'ஒரு ரூபாய்த்தான் ஒரு லெட்சமுன்னு சொல்லிட்டாங்க போல' என அவராக கருதிக்கொண்டு மெதுவாக தனது சட்டை பையில் இருந்து நூறு ரூபாயை எடுத்து சித்தரிடம் நீட்டுகிறார்.

அதை வாங்க மறுக்கும் சித்தர் "ஒன் லாக் கொடுங்க" என ஆங்கிலத்தில் உச்சரித்து திரும்ப அழுத்தமா கேட் கிறார்.

பெரும் தயக்கத்தோடும், சற்றே குழப்பத்தோடும் வங்கிக்கு கட்ட வேண்டி பணத்தை எடுத்து ஒரு மஞ்சள் பையில் சுருட்டி கொடுக்கிறார். அதை வாங்கி இடுப்பில் சொருகிக்கொண்டு வேக நடைப் போட்டு வெளியேறுகிறார், சித்தர்.

'எதுக்கு ஒரு லெட்ச ரூபா வாங்குனாரு? எங்காவது தூக்கி போட்டு விட்டால்? அல்லது அவர் சாலை ஓரங்களில் கண் அயர்ந்த நேரங்களில் இதை அறிந்து அவரிடமிருந்து யாராவது பையை பறித்துவிட்டால்...?' எச்சரிக்கை நடவடிக்கையாக...கிருஷ்ணன் தனது ஊழியர் ஒருவரை பின்னாடியே போகும்படி அனுப்புகிறார் ...சித்தரை 'எவ்விதத்திலும் தொந்தரவு செய்யக் கூடாது. பணத்தைக் கேட்க கூடாது' என கண்டிஷன் போட்டு மிக ஜாக்கிரதையாக சற்று தள்ளியே பின் தொடர சொல்கிறார்.

தொடர்ந்து இரு நாட்கள்... சித்தரில் இடுப்பில் பணமிருக்கும் அந்த மஞ்சள் பை தொங்குகிறது. மூன்றாம் நாள், நடு இரவில் சித்தர், திருவண்ணாமலையை விட்டு நடக்கத் தொடங்குகிறார். சுமார் பனிரெண்டு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள ஒரு கிராமத்துக்கு விடியற் பொழுதில்

சென்று சேருகிறார். அங்கே ஒரு கூரை வீட்டுக்கு முன் பாக போய் வேலிப் படலை திறந்து கொண்டு உள்ளே செல்கிறார் ... வீட்டில் உள்ளவரின் பெயரைச் சொல்லி கூப்பிடுகிறார்.

தூக்கக் கலக்கத்தோடு கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தவரிடம் "...இந்தா கவலப்படாதே ...வைச்சுக்க" என்று சுருட்டிய மஞ்சள் பையை நீட்டுகிறார்.

அவரோ பையை வாங்க லேசாக தயங்க... "இத உள்ள கொண்டு போயி வைச்சுகடா" என அதட்ட... தாடி மீசை

வைத்த ஒரு சாமியின் சொல்லுக்கு கட்டுபட்டவராக... பெற்றுக்கொள்கிறார்.

அந்த கணமே சித்தர், திரும்பி திருவண்ணாமலையை நோக்கி நடக்கிறார். இத்தகவலை ஒற்றர் வேலைப் பார்த்த ஊழியர் கிருஷ்ணனுக்கு தெரிவிக்கிறார். சித்த ரின் இந்த செயல் அவருக்கு மேலும் வியப்பை அதிகப்ப டுத்துகிறது.

இரு நாட்கள் கழித்து, ஆர்வம் தாங்க முடியாமல்... பணம் வழங்கப்பட்ட அந்த வீட்டுக்கு தனது மேனே ஜரை அனுப்பி... சித்தருக்கும், அவருக்குமான பின்புலம் குறித்து அறிய ஆவல் கொள்கிறார்.

"பணத்தை நாம திரும்ப கேட்க போறதில்ல. சாமியே கொண்டு போய் கொடுத்திருக்காங்கன்னா அதுல ஏதோ அர்த்தம் இருக்கும். நாம் தெரிஞ்சுக்க விரும்பு றது... அவருக்கும், சித்தருக்குமான பழக்கம் எப்படி வந் தது? ஏதும் உறவான்னு? தெரிஞ்சுகிறதுதான்." என்று தனது நோக்கத்தை தெளிவாக மேனேஜரிடம் எடுத் துக்கூறி அனுப்புகிறார்.

மேனேஜரைக் கண்டதும், பணம் பெற்ற அந்த நபர் பதற் றமடைகிறார். இதுல 'ஏதோ வில்லங்கம் இருக்குமோ?' என அஞ்சுகிறார். "திரும்ப பணத்தை கேட்பாங்களோ?" எனும் பயத்தில், "வெறும் பைதான் கொடுத்தாரு" என முதலில் தடுமாறுகிறார்.

தான் 'பணம் வாங்க வரவில்லை' என்பதை மிக அழுத்த மாக மேனேஜர் தெரிவித்த பிறகே...அவர் உண்மையை ஒத்துக்கொண்டாராம்.

"எனக்கு திருவண்ணாமலையில இருக்குற எந்த சாமி யையும் தெரியாதுங்க. நான் கோயிலுகுள்ளேயே சில வருஷத்துல ஒரு வாட்டித்தான் போவேன்.

எனக்கு மூணு பொண்ணுங்க! மொத பொண்ணு கல் யாணத்துலேயே நிறைய கடன் பட்டு அதை அடைக்க ஏகப்பட்ட கஷ்டப்பட்டுட்டோம். இப்ப இரண்டாவது பொண்ணு கல்யாணம். மொத கடன் வாங்குனத சரியா, சொன்ன தேதியில கொடுக்க முடியல...அதனால இந்த கலயாணத்துக்கு தரேன்னு சொன்னவங்க... இரண்டு மாசம் ஆகும்ன்னு தட்டி

கழிச்சிட்டாங்க. பணத்துக்கு என்னா பன்றதுங்கிற கவ லையில தான் நானும், என் சம்சாரமும் சரியா சாப்பாடு, தண்ணியில்லாம, ஒரு வாரமா இருந்தோம். அப்பதான் அந்த அதியசம் நடந்துங்க." என கையெடுத்து கும்பிட்ட வர், "அந்த சித்தர் பேரு என்னங்க" என மேனேஜரிடமே கேட்டு தெரிந்து கொண்டாராம்.

பல மாதங்கள் கழித்து கிருஷ்ணன் சித்தரை தர்சிக்க சென்றிருந்த போது.. யாரிடமோ பேசுவதுபோல் சூட்ச மாக மொழியில் ... "நீ வாங்குன கடனைத் தான்... நான் கொடுத்தேன்" என விளக்கம் தந்துள்ளார்.

அந்த கடன் இந்த பிறப்பில் இல்லை எனும் போது.. அது முன் ஜென்மக் கடனோ? அறிய முடியாத இரகசியங்க ளில் அதுவும் ஒன்றே!

***

ஒரு வீட்டில் லெட்சுமியை அதட்டி அனுப்பியவர். மற் றொரு இடத்தில்...அடுத்தவர் பணத்தை வாங்கி துன் பத்தைத் துடைத்துள்ளார்.

பணம் இந்த பூமியின் மாயை அல்லவா? அதை சித் தர்கள் பெறாலாமா? தொடலாமா? போன்ற எண்ணற்ற மாறுபட்ட கேள்விகள் எழுமே! ஆமாம்!

அவர்கள் நாடாமலேயே பணம் அவர்கள் காலடியில் விழுகிறது. அவற்றைத் தாண்டி செல்பவர்களே பரிசுத் தம்.

சித்தரை சந்திக்க செல்லும் பக்தர்கள், சித்தருடைய அன்றைய நடமாட்டம் குறித்து, கிரிவலப்பதையில் அமர்ந்து யாசகம் பெறும் சன்னியாசிகளிடம் "பொடிச் சித்தர் எங்கு இருக்கிறார்?" என விசாரிப்பார்கள்...

"ஒருநாள் ஆஞ்நேய மடம், ஒருநாள் ரமண ஆஸ்ரமம், ஒரு நாள் பள்ளிக்கூடம்" என அவர்களே அன்றைய நாள் அட்ரஸைச் சொல்வார்கள்.

வெளியூர்களில் இருந்து வரும் பக்தர்கள்..பலரும் கையில் மூக்குபொடி பாக்கெட், பழங்கள், புது வேட்டி கள் என வாங்கி வந்து அவர் அருகே வைப்பார்கள். தாங்கள் மனம் விரும்பி தருவதை

சித்தர் ஏற்க மாட்டாரா? தங்களின் கர்ம வினைகள் குறையாதா? எனும் ஏக்கத்தில் அவர்கள் அப்படி நடந் துகொள்கிறார்கள். சிலர் ஆயிரம், ஐநூறு ரூபாய் தாள்க ளையும், அவர் அருகே பின்னர் வைக்கத் தொடங்கி னர்.

அப்படியாக வைக்கப்பட்ட யாவற்றையும் அவர் தொடு வதில்லை. அவற்றை திரும்பியும் பார்ப்பதில்லை. இது தான் அவர் இயல்பு. அப்பொருட்கள் அங்கு கேட்பார் அற்ற கிடக்கும். அப்பொருட்களை அங்கிருக்கும் வறிய வர் சிலர் எடுத்து செல்வதுண்டு. இந்நிலையில் தீடிரென சித்தரிடம் ஓர் மாற்றம். பக்தர்கள் வைக்கும் பணத்தை மட்டும் எடுத்து பெரிய பை ஒன்றில் சேகரிக்க ஆரம்பித் தார்.

"பணத்தோடு அருமை, சித்தருக்கும் தெரியுது பார்."

"ஆயிரம், ஐநூறு மொதல்ல.. எடுத்து பையில வைக்கி றாரு பாரு.." விடலைகள சிலர் கமெண்ட் செய்து வந் தனர்.. நாளாக நாளாக இடுப்பில் தொங்கிய பை பெரிய வடிவம் காட்டியது. "அந்த பை புல்லா பணம்" என ஆச்ச ரியப்பட்டனர்.

ஒருநாள் மாலை கிரிவலப்பாதையில்...பையை பிரித்து பணத்தைக்கொட்டினார்...அருகே எரிந்த அகல்விளக் கில் இருந்து தீயை எடுத்து வந்து... அந்த பணக்குவிய லுக்கு தீ வைத்தார்.

தீ திகுதிகு என எரிந்தது. கூட்டம் வாயடைத்தது. ஆர் வத்தில் ஒரு இளைஞன் எரியும் பணத்தில் கையை வைத்தான். தனது கையில் வைத்திருந்த நீண்ட மூங் கில் கம்பால் மடார் என அவனை அடித்தார். தெறிச்சி போய் விழுந்தான். அடி விழுந்த கையில் எழும்பு தெறித் துவிட்டது.



"அத்தனையும் கரும காசுடா... தொடாதேடா.." அங்கி ருக்கும் எல்லாருக்குமான உத்தராவாக சொல்லிவிட்டு கிரிவலம் நடந்தார், சித்தர்.

(09--12--18 சித்தர் சமாதி நிலை அடைந்தார்)

## 13.வாழ்க்கையை மாற்றிய மாய வேர்!

மாடசாமி காலையில் எழுந்ததும் ஆலமரத்தடியில் இருக்கும் ராமையா டீ கடைக்கு வந்து விடுவார்.

அவரிடம் ஒன்றிரண்டு வெள்ளை சட்டைகள் உண்டு. அதுவும் காலர் பக்கம் தையல் பிரிந்திருக்கும். அதை மறைக்கும் வகையிலும், அழுக்குப்படாமல் இருக்கவும், ஒரு கர்சீப்பை மடக்கி வைத்துக்கொள்வார். வேட்டியும் நைந்த நிலையிலேயே இருக்கும். மெலிந்த தேகம். நெற்றில் வீபூதி, குங்குமம் இல்லாமல் வெளியே வர மாட்டார்

அதிகாலையிலிருந்து ராமையா டீ கடையில் கூட்டம் இருக்கும். வயல் வேலைக்கு செல்பவர்கள், வெளியூர் வேலைக்கு

செல்பவர்கள், ஆலமரத்தடியில் பஸ்சுக்காக வந்து நிற் பவர்கள், உள்ளூர் பெரியவர்கள் என அந்த கடையில் கும்பல் இருந்து கொண்டே இருக்கும்.. சிலர் அங்கேயே அமர்ந்து பொதுவிஷயங்கள் பேசுவார்கள்.

அந்த கடைக்கு வரும் மாடசாமி கையில் பெரும்பாலும் பணம் இருக்காது. அப்படியே இருந்தாலும் அதிகபட் சம் ஒரு ரூபாய் நோட்டோ, இரண்டு ரூபாய் நோட்டோ வைத்திருப்பார். அதையும் ஜாக்கிரதையாக சட்டையின் உள்பையில் வைத்துக்கொள்வார்.

அப்போது...ஐந்து பைசா, பத்து பைசாவுக்கு மதிப்பு இருந்தது.. அதற்கும் ஒரு பொருள் வாங்க முடியும். சொந்தமாக ரலே சைக்கிள் வைத்திருந்தால் பெரும் பணக்காரர் எனும் அடையாளம் கொண்ட காலம், அது.

மாடசாமி கடையில் உட்கார மாட்டார். வருகிறவர்களி டம் புன்முறுவல் பூப்பார், வணக்கம் வைப்பார். எல் லார் பேச்சிலும் கலந்து கொள்வார். ஆனால் ஒருநாளும் பேசுகிறவர்களுக்கு எதிர் கருத்து சொல்ல மாட்டார்.



எல்லோருக்கும் நல்ல பிள்ளை. சிரித்த முகம். ஒருவ கையில் சொன்னால் அவருக்கு எதிரி என யாரும் உரு வாகவே முடியாது. அப்படி ஒரு ராஜ தந்திரம் அவரிடமி ருந்தது!

" மாடசாமி அந்த டீயை வாங்கு" என உட்கார்ந்திருப்ப வர் யாராவது சொன்னால் கூட ஈகோ பார்க்க மாட்டார். சட்டென பணிவாய் ராமையா ஊற்றும் டீயை எடுத்து அமர்ந்திருப்பவரிடம் கொடுப்பார்.

அப்படி கொடுக்கும் போது... "நீ டீ சாப்பிட்டியா?" என

கேட்டால்... 'இல்லை என்றோ, ஆமாம் என்றோ, வேண் டாம் என்றோ' நேரடியாக பதிலளிக்காமல் "இருக்கட் டுங்க" என்பார்.

"நம்ம கணக்குல மாடசாமிக்கு ஒரு டீ கொடு" வந்தவர் களில் யாரோ ஒருவரை சொல்ல வைத்து விடுவார். இப் படித்தான் டீ பட்சண செலவுகள் மாடசாமிக்கு நடந்து வந்தன. மாடசாமியின் வாழ்க்கையில் இதை யாசகம் என்று எடுத்துக்கொள்ள முடியாது. இந்த உபசரிப்புகள், ஒரு வகையான அன்பின் அடையாளம் தான்.

மாடசாமிக்கு தெரிந்த தொழில் மாட்டுத் தரகு! அதில் பெரும் பாண்டித்தியம் பெற்றவர். மாட்டை பார்த்த மாத்

திரத்திலேயே... அத்தக்கருப்பன், கட்டைவால் கூளை, கண்ணன்மயிலை, காராம்பசு, ஏரிச்சுழியன், நாரை கழுத்தான், செம்பூத்துக்காரி, செவலமாடு, வள்ளிக் கொம்பன் என நூற்றுக்கு மேற்பட்ட வகையை இனம் காணும் ஆற்றல் பெற்றவர். அதன் பண்பு பற்றி சொல் வார். பால் எவ்வளவு கறக்கும் என துல்லியமாக சொல் லுவார்.

கன்று ஈன்ற நாளில் நட்சத்திரம் பார்பார். மாட்டுக்கு ராசி கணக்குப் போடுவார். வால், நெற்றி, கொம்பு என பல வற்றில் அதன் அம்சம், குணம் குறித்து சோதிடம் சொல் வார். மாடுகளின் சாமூத்திரிகா லெட்சணம் அறிந்தவர்.

இத்தனை திறமை இருந்தும் 'உள்ளூர் மாடு அதிக விலை போகாது' எனும் பழமொழி போல மாடசாமியின் வித்தை, அக்கிராம மக்களால் பெரிதாக கொண்டாடப டாமலேயே இருந்தது. அதுமட்டுமல்ல மாடசாமி போல ஊருக்கு இரண்டு பேர் அக்காலத்தில் இருந்ததும் மற் றொரு காரணம். இரு தரப்பினரும் கைகளில் துண் டைப்போட்டு மூடிக்கொண்டு வியாபாரம் பேச வேண் டும். பேசி முடித்தால் மாடசாமி கையில் ஐந்து ரூபாயோ, எட்டு ரூபாயோ கொடுப்பார்கள். இப்படி மூன்று யாவாரம் மாதத்தில் நடக்கும். அதுதான் அவர் வாழ்வாதாரம்.

அப்போது... பெரும் பண்ணைகளில் ஏராளமான மாடு கள் உண்டு. குறு விவசாயிகளும் வீட்டுக்கு வீடு மாடு வைத்திருந்தனர். கிராமங்களில் செல்வம் நிலைத்தி ருந்தது.

"தங்கத் தட்டுல சாப்பிட்ட தியாகராஜ பாகவதர் அம் சம் குறைஞ்ச குதிரை ஒன்னு தெரியாம வாங்கிட்டாரு. பாக்க வெள்ளைய செழிப்ப இருக்குன்னு வாங்கிட்டா ரு...ஆனா அந்த குதிரைக்கு முகசூழி இறங்கு அம்சம் கொண்டது. யாரோ விஷயம் தெரியாதவன் வாங்கிகொ

டுத்துட்டான். அது மேல அவரு, முதல் வாட்டி உட்கா ரும்போதே  அவரை கீழ தள்ளிடுச்சி! அத வாங்குன நாளுலேர்ந்து அவருக்கு இறங்கு முகம்தான்.

கொலைப்பழி விழுந்தது, சிறைவாசம் அனுபவிச்சாரு. அந்த குதிரைய திரும்ப வித்தபிறகுதான் விடுதலையா னரு. கடைசியில எல்லாம் போயி ரோட்டுக்கு வந்துட் டாரு.

மாடு வாங்கும் போது தரகு கொடுக்க மனசில்லாம தனிய போய் வாங்காதீங்க "வாடிக்கையாளர்களை தன் வார்த்தை ஜாலத்தால் வலைப்பார்.

"எங்களை வச்சித்தான் வாங்கணும். இந்த நுணுக்க மெல்லாம். எங்களுக்கு பரம்பரையா வருறது . யாரும் கத்துக்க முடியாது." என்பார். மாடசாமியின் இந்த பேச் சைக் கேட்பவர்கள், வீட்டிற்கு...பசுமாடு, உழவுக்கு...கா ளைமாடு வாங்க தனியாக போக மாட்டார்கள்.

இப்படியாக உருண்டோடிய அவர் வாழ்க்கையில்... ஓர் அமானுஷ்ய திருப்பம் ஏற்பட்டது. வழக்கம் போல் ராமையா டீக் கடையில் நின்றிருந்தார். அந்நேரம் வழி போக்கர்களாக இருவர் அக்கடை அருகே வந்தனர். அதற்கு முன் அவர்களை மாடசாமி எங்கும் பார்த்த தில்லை.

நெடுநெடுவென உயரம். தாடி மீசை. நெற்றியில் குங்கு மப்பொட்டு. இடுப்பில் பஞ்சகஜ வேட்டி, மேலே சிகப்பு துண்டு. தோளில் பருமனான ஜோல்னா பை. காதில் தங்க கடுக்கன். கழுத்தில் மணிகள். மேனியில் இருந்து ஜவ்வாது வாசம். வந்தவர்களுக்கு தமிழ் தெரியாது. விர லால் ஜாடைக் காட்டியபடியே "ரெண்டு டீ வேசியிண்டா" என தெலுங்கில் கேட்டனர்.

இரும்பைக் கண்ட காந்தபோல் அவர்களைக் கண்ட மாடசாமி மனதில் இனம் புரியாத ஈர்ப்பு. "இரண்டு டீ கேக்குறாங்க..." மொழிபெயர்ந்து சொல்வது போல்...க டைக்காரரிடம் படபடத்தார். வந்தவர்களிடம் காலியாக இருந்த மர பெஞ்சைக் காட்டி உட்கார வலியுறுத்தினார். அவர்கள் அமைதியாக நின்றார்கள்.

"எந்த ஊர்?" என ஜாடையில் கேட்டார். அதற்கும் அவர் கள் பதில் சொல்லவில்லை. அதற்குள் ராமையா கிளா சில் ஊற்றிய டீ எடுத்து இருவருக்கும் மிக பணிவாய் தந் தார், மாடசாமி. டீ அருந்தினார்கள். பணம் கொடுத்தார் கள். நடக்கத் தொடங்கினார்கள்.

அவர்கள் பால் ஏதோ ஓர் ஈர்ப்பில் ஆட்பட்டவர்போல் நின்ற மாடசாமி... நடந்து செல்லும் அவர்கள் முதுகைப் பார்த்தபடி நின்றார். அப்போது அந்த ஆச்சரியம் நிகழ்ந் தது. தெருமுனை திரும்புற இடத்தில், சட்டென திரும் பிப் பார்த்த அவர்கள்.... "இங்க வா" என மாடசாமியை கையை அசைத்து கூப்பிட்டார்கள்.

அழைப்புக்கு காத்திருந்தவரைப் போல் மாடசாமி ஓட் டமும் நடையுமாக நிமிட நேரத்தில் போய் நின்றார். கையெடுத்து கும்பிட்டார்.

மாடசாமியை கண்ணோடு கண் பார்த்தார்கள். ஒருவர் தனது ஜோல்னா பையில் இருந்து...ஒரு மர வேரை எடுத்துக்கொடுத்தார். பணிவாய் வாங்கிக்கொண்டார். மற்றொருவர், மாடசாமியின் தலையில் கை வைத்து ஆசீர்வத்தித்தார்.

இந்த வேரை நேரா வீட்டுக்கு எடுத்துட்டு போ...மஞ்சள் தடவி ஓலப்பெட்டியில் வை. நாளும் சாம்பிராணி போடு. இனி இந்த டீக் கடையில நிக்காதே! " என தமிழும் தெலுங்கும் கலந்து சொல்ல.. மாடசாமி அவர்களை பர வசத்தோடு வணங்கியபடியே நின்றார்.

அவர்கள் விடைப்பெற்றார்கள். தனது கூரை வீட்டிற் குள் நுழைந்தார். அவரது உடம்பில் ஏற்பட்ட பரவசம் அப்படியே தங்கியிருந்தது. மனைவி கேட்டாள். நடந்த தைச் சொன்னார். இருவருமாக வேருக்கு மஞ்சள் பூசி ஓலைப்பெட்டில் வைத்து சாமி விளக்கு அருகில் வைத் தார்கள். மனதில் இருள் அகன்றது போன்ற தெம்பு. மறு நாள் டீக்கடை பக்கம் செல்லவில்லை.

மூன்றாம் நாள் பக்கத்து ஊர் பெரிய பண்ணையில் இருந்து மாடசாமி வீட்டிற்கு ஆள் வந்தது..."பெரியய்யா கையோடு கூட்டிட்டு வரசொன்னாங்க!"

தப்பு செய்தால் தோப்பில் கட்டி வைத்து அடிக்கும் பழக் கம் உள்ளவர், பெரியய்யா. அதனால் பதற்றம் தொற்றி யது. "என்ன விசயமா?" என்றார். அழைக்க வந்தவருக்கு தெரியவில்லை.

இரண்டு வயல் குறுக்கே ஓட்டமும் நடையுமாக அரை மணி நேரத்தில் போய் நின்றார். வாசலில் பெரியய்யா, கம்பீர சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருந்தார்.

பயத்துடனே போய் நின்றார். "வா.... மாடசாமி" வாய் நிறைய புன்னகையோடு அழைத்தார், பெரியய்யா.

"உட்கார்" என்றார்.

'இத்தனை மரியாதை ஏன்?' இனம் புரியாமல் தவித்தார்.

"உட்காரு" பிரியமும், அதட்டலுமாக திரும்பவும் சொல்லி மாடசாமியை நாற்காலியில் உட்கார வைத்தார். அதற் குள் உள்ளேர்ந்து அவரது மனைவி "வாங்கய்யா" என வாயாரா அழைத்தப்படி வந்து நின்றார்.

"எல்லாம் நல்ல செய்தி சொல்லத்தான் உன்னை வரச் சொன்னேன். முறைப்படி நானே நேரே வந்துதான்

சொல்லியிருக்கனும். மேலையூர் பண்ணையில கட்டிக் கொடுத்த என் பொண்ணுக்கு.. மூணு மாசத்துக்கு முன்னாடி, உன் கையால வாங்கிக்கொடுத்தியே சிந்து மாடு. எல்லாம் அதைப் பத்தித்தான். என்று நிறுத்தியவர்... தொடர்ந்து சொன்னார்...

"அப்ப நீ என்ன சொன்ன? இந்த மாடு இருக்கிற இடத்துல குறை இருக்காது. குழந்தை பாக்கியம் கிடைக்குமின்னு

சொன்னில்ல...அது நடந்துட்டுப்பா! பதினாறு வருஷம் கழிச்சி என் மகள் முழுகாம இருக்காப்பா..! அதுமட்டுமல்ல. அநத வூட்டுப் பொண்ணு ஒண்ணு வாழாம வீட்டோட இருந்தது. நேத்து சம்பந்திங்க ராசியாயிட்டாங்க., அந்த பொண்ணும் வாழபோயிட்டாப்பா...! எல்லாம் நீ வாங்கிக் கொடுத்த அந்த மாடுதான்னு... சம்மந்திகாரும் உன்னை பாக்கனுமின்னு சொன்னாரு....எத்தனையோ கோயில் குளம் சுத்திட்டோம். கடைசியில நீ பிடிச்சி கொடுத்த மாடும், நீ சொன்ன வாக்கும் தான் பலிச்சிது" கையெடுத்து கும்பிட்டார். நெக்குருகிப்போனார் மாடாசாமி. ஒரு கணம் கண்ணை மூடி தியானித்து விட்டு சொன்னார். "வயிற்றில இருக்கிறது ஆண் வாரிசுங்க ஐயா"அங்கே மாடசாமிக்கு தனி கம்பீரம் கிடைத்தது.

வீட்டிற்கு திரும்பி வரும் போது பண்ணையாரின் கூண்டு வண்டியில் வந்து இறங்கினார், இரண்டு மூட்டை அரிசி, புடவை வேட்டி, கொஞ்சம் பணம் என வீட்டில் செல்வம் நிறைந்தது. வட்டாரம் முழுதும் செய்தியானார், மாடசாமி.

ஐந்தாண்டுகளில் அசுர வளர்ச்சி. வாக்கு சொல்ல ஆரம்பித்தார். அவர் வாக்கு கேட்க வெளியூர் ஆட்கள் நிறைந்தனர். மாடசாமியை பார்க்க, அழைக்க வரும் அம்பாஸ்டர் கார்கள் ராமையாவின் டீ கடையில் காத்து நின்றன. "ஒருகாலத்துல நம்ம கடை வாசல்லதான் நிப்

பாரு," என வருவரோரிடம் பெருமைப்பட்டுக்கொள் வார், டீக் கடை ராமையன்.

## 14.'பிச்சையெடுப்ப...'
-சொல் பலித்தது!

சிலம்பம், குத்து போன்ற தற்காப்பு கலைகள் பல அறிந் தவர், சொக்கலிங்கம். திடமான தேகம். பயம் அற்ற கண் கள். அடியாள் தொழிலுக்கு அவசியமான தகுதிகள் அவரிடமிருந்தன.எதையும் சொன்ன தேதியில் செய்து முடிப்பார். பேரைச் சொன்னால் அதிர்ந்தது, பேட்டை. மனதில் ஆணவம் கூடியது. நாளும் பல தர்ம மீறல் கள், சட்ட மீறல்களோடு வாழ்ந்தார். வயதும், வாலிபமும் அதற்கு துணை செய்தன.

சிலபல கத்திக்குத்துகள் இவர் தலைமையில் நடந்தன. கைது, வழக்குகள் சகஜமாயின. பாதிக்கப்பட்டவர்கள் மனம் வெதும்பினர்.

சொக்கலிங்கத்தை நேரடியாக எதுவும் செய்ய முடியாத தொழில் ரவுடி ஒருத்தன்... கேரள மாந்தீரிக முயற்சி ஒன்றை சில லெட்சம் செலவில் செய்தான். ஆச்சரிய மாய் அது பலித்துவிட்டது.

பெரிய விபத்தில் எதிர்பாராமல் சிக்கினார். உடம்பில் ஏகப்பட்ட எலும்பு முறிவுகள். தெம்பும், தைரியமும் தான் சொக்கலிங்கத்தின் தொழிலுக்கு முதலீடு. அது இரண் டையும் ஒரே நேரத்தில் இழந்தார். நொண்டி குதிரைக்கு எந்த முதலாளி தீனி போடுவார்?



பழகியவர்கள் பாராமுகம் காட்டினர். எதிரிக் கழுகுகள் விடாமல் வட்டம் அடித்தன. 'இனி உயிருக்கு பாதுகாப்பு குறைவு' என உணர்ந்தார். யாருக்கும் தெரிவிக்கா மல் மெட்ராஸை விட்டு ஒரு இரவில் வெளியேறினார். தான் எப்போதோ செல்லக்கூடிய, தன் மூதாதையர்கள் வாழ்ந்த அந்த குக்கிராமத்தில் போய் தஞ்சமடைந்தார். அந்த கிராமத்துக்கு தார்ச் சாலை கிடையாது. ஆற்று தண்ணீரில் இறங்கி போக வேண்டும். மறைவிடத்துக்கு சரியான ஊர் என மகிழ்ந்தார். அந்த ஊரில் பங்காளி உறவுகள் சிலர் இருந்தார்கள். அவர்கள் கட்டுப்பாட்டில் இருந்த புறம்போக்கு கொல்லையில் தங்க அனுமதித் தார்கள். பனை மட்டையை வைத்து ஒரு ஆள் தங்கும் அளவுக்கு ஒரு குடிசை போட்டுக்கொண்டார்.

அப்படி இப்படி இருந்ததால் சொக்கலிங்கம் திருமணம் செய்து கொள்ளவில்லை. வயதும் நாற்பதைக் கடந்து விட்டது. இருக்கபோகும் ஆயுளின் நீளம் அறிய முடியாத போது... 'இனி திருமணம் வேண்டாம்' என தீர்க்கமாய் முடிவு செய்தார்.

சிறிது சிறிதாக திடம் பெற்றார். கை கொஞ்சம் வளைந் தும், கால் கொஞ்சம் தாங்கியும் நடக்கும்படி ஆனது. வேலை எதுவும் செய்ய முடியாது.

பொழுது போக ஆடுகள் மேய்த்தார். தனிக்கட்டைக்கு அந்த வருமானமே போதுமானதாக இருந்தது. எதற் காகவும் கிராமத்தை விட்டு வெளியே செல்வதில்லை.

தொலைந்தவர் கணக்கில் முடிவு செய்து கொண்டனர், எதிரிகள்.

வருடங்கள் ஓடின. 'இவ்வளவுதான் வாழ்க்கை' என அந்த கிராமத்து மனிதர்களில் ஒருவரானார். மனசில் இருந்த பழைய அச்சங்கள் மறைந்து இயல்பான வாழ்க் கைக்கு மாறியிருந்தார்.

அந்த நிலையில்தான்... ஓர் அமானுஷ்ய சம்பவம் அவர் வாழ்க்கையை புரட்டிப்போட்டது.

வயல்வெளியில் ஆடுகள் மேய்ந்து கொண்டிருந்தன. மரநிழலில் உட்கார்ந்திருந்தார், சொக்கலிங்கம். உச்சி வெயில் நேரம்...

கட்டையாய், கறுத்த உருவமாய் தூரத்தே ஒருவர் நடந்து போய் கொண்டிருந்தார். இடுப்பில் ஒரு துண்டு. தோளில் ஒரு சாக்கு பை. கையில் ஒரு கட்டைக் கோலும் தெரிந்தது. வெட்டப்படாத வெள்ளை தாடியும், கொண்டையிட்ட தலையுமாக இருந்தார்.

ஆள் நடமாட்டம் இல்லாத இந்த வயல்வெளியில்... 'யார் இவர்?' என யோசித்தார்... அந்நியர்களைக் கண்டால் கிராமத்தில் விசாரிப்பது இயல்பு. பல மாதங்களாக இந்த வயக்காட்டில் ஆடு மேய்க்கும் சொக்கலிங்கம், இதற்கு முன் இவரை பார்த்ததில்லை.

'யாரு? என்னா?'ன்னு அறிய மனம் தூண்டியது. குரல் எழுப்பினார், கைத் தட்டினார். அவர் திரும்பவில்லை. சட்டென எழுந்து ஒரு வரப்பில் குறுக்கே நடந்து போய் அவரை எதிர்கொண்டார்.

கண்ணோடு கண் பார்த்தார். "யாரு நீங்க? எந்த ஊரு?" என கேட்க... வாயெடுத்தார். பேச்சு வரவில்லை. சட் டென நாக்கு ஒட்டிக்கொண்டது. ஊமை போல் "பே பே..." என்று தவித்துவிட்டார். பயத்தில் உடம்பு வேர்த்

துவிட்டது.. அந்த ஜடாமுடி சாமி... நிதானமாக கையில் இருந்த கோலால் சொக்கலிங்கத்தின் தலையைத் தொட்டார். டக்கென பேச்சு வந்தது. மூச்சி வாங்கியது.

"ஓளிஞ்சி வாழுற நீ, என்னை யாருன்னு கேட்க வந் துட்டியோ?" சொக்கலிங்கம் கேட்க நினைத்தை, அவர் கேட்டார். சர்வ நாடியும் ஒரு நொடி அப்படியே அடங்கி துடித்தது.

திகைத்தார் சொக்கலிங்கம். பார்த்தா போலீஸாக தெரி யல. ரவுடியாகவும் தெரியல. 'இவரு யாரு?' கடவுள் பக்தி எதுவும் இல்லாதவர்தான் சொக்கலிங்கம். ஆனாலும் இனம் புரியாத பயம் பரவியது. "என்னைக் காட்டிக்கொ டுத்திறதீங்க!' என்பதுபோல் பேட்டை பழக்கத்தில் ஒரு சலாம் வைத்தார். சுமார் இருபது வருஷத்துக்கு முன்பு தாசிகள் பழக்கம்

சொக்கலிங்கத்துக்கு மிகுந்திருந்தது. தினவு மிகுந்த உடம்பு. மது பழக்கம் வேறு. அப்படி ஒரு சமயம் மூன்று நாள் ஓய்வில் இருந்த ஒரு தாசிக் குடிசையில் நுழைந் துவிட்டார். அவள் நாசூக்காக மறுத்தாள். மூர்க்கமாய் அவளை அடித்தார் சொக்கலிங்கம்.

அடி தாங்காத அவள், போதை தெளிந்த வெளியேறிய சொக்கலிங்கத்தைப் பார்த்து கண்ணீர் மல்க சொன் னாள்.... "வாழ்க்கையில உனக்கு கல்யாணமே ஆகா துடா.. தே....யா குடித்தனம் தான். கடைசியில பிச்சை தான் எடுக்க போறே! " கையை உதறி சபித்தாள்.

சொக்கலிங்கம் அவளை திரும்பவும் சந்திக்கவே யில்லை. அவள் இடம் பெயர்ந்துவிட்டாள். அவள் சொன்ன வார்த்தைகளும் மனசில் தங்கவில்லை. அவள் திட்டியதும் கூட யாருக்கும் தெரியாது. எதிரே நின்ற சொக்கலிங்கத்தைப் பார்த்து... அந்த சாமி சொன் னார்...

“அந்த தாசியின் சாபப்படியே ஆயிட்டதடா உன் வாழ்க்கை!” கண்முழி விரிய அவர் சொல்லும் போது... சொக்கலிங்கத்துக்கு தலை கிறுகிறுத்தது. ‘என் னைக்கோ, எங்கோ நடந்ததை, நாம் மறந்துவிட்ட ஒன்றை இவர் சொல்கிறாரே!’

“பாவிகளா மாறியவன்... பிறர் பாவம் செரித்தே தன் பாவம் தீர்க்க முடியும். போ... அவ சாபப்படி பழனி முரு கன் காலடியில போய் நாளும் பிச்சை எடுடா! இந்த பிறப்பிலேயே அந்த கடனைத் தீர்த்துவிடு! தவறினால் அதுக்கு ஒரு தனி பிறப்பு எடுக்கணும். பழனியில வந்து உன்னை பார்ப்பேன். உடனே போ” உத்தரவாய் சொன் னபடி நகர்ந்தார். வச்ச கண் வாங்காமல் அவரையே பார்த்தார், சொக்கலிங்கம். ஒரு பனை மரம் தாண்டி போனவர், அதன் பிறகு மறைந்துபோனார்.

அன்று இரவு சொக்கலிங்கத்து குளிர் ஜூரம் வந்தது. மருத்துவர் வந்து கஷாயம் கொடுத்தார். ஜூரம் நிற் கவில்லை. வயல்வெளியில்... தான் கண்ணால் கண்ட காட்சியை சொன்னார். பூசாரி வந்து பார்த்தார். உச்சி வெயில் நேரம் பனைமரத்து முனி நடமாட்டம் இருக்கும். அவந்தான் வந்திருக்கான். வீபூதி போட்டார். ஆனாலும் ஜூரம் முழுமையா சரியாக ஒருவாரம் ஆனது. மனசெல் லாம் அந்த தாசியில் வார்த்தைகளே எதிரொலித்தன இதுகாலம் ரவுடியாக, அதர்மமாக வாழ்ந்த சொக்கலிங் கத்துக்கு தீடிரென தோன்றி மறைந்த சாமியும், அவர் சொன்ன வார்த்தைகளும் இன்னொரு உலகத்தில் பய ணித்த அனுபவம் கொடுத்தது. ‘தாசியிடம் மட்டுமா சாபம் வாங்கினேன்... எத்தனை குடியை வெளியேற்ற ஓட்டைப்பிரித்து , கூரை கொளுத்தி...’ ஒவ்வொன்றாக ஞாபகம் வந்தது.

பழனியில போய் பிச்சை எடு! கையில் கோலோடு அவர் உத்திரவிடும் காட்சி கண்ணில் பட்டு பட்டு தெறித்தது. 'அவளோட சாப உத்தரவு நிறைவேறாம சாக முடியாது' ஆழ்மனம் அலாரம் அடித்தது.

ஒரு விடியற்காலை யாரிடமும் எதுவும் சொல்லாமல் பழனிக்கு வந்து சேர்ந்தார்.. நல்ல பசி யெடுத்தது. அந்நேரம் ஒருதாய் தன் வேண்டுதல் நிறைவேற அண்ணதானம் கொடுத்துக் கொண்டிருந்தார். அவர் சொக்கலிங்கத்தில் கையில் ஒரு சாப்பாடு பொட்டலத்தைக் கொடுத்தார். கையேந்தி பவ்வியமாய் வாங்கினார். 'மனசு பிச்சையெடுடா; எடு!' என்றது மூன்று நாள் பழனி முழுதும் அங்கும் இங்கும் அலைந்தார். அந்த சாமி கண்ணில் படுவாரா? என தேடினார். யாசகம் பெறுவோரை எல்லாம் உற்று உற்று பார்த்தார்....

திருவோடு வைத்து யாசகம் பெறும் ஒரு காவி உடுத்திய பெரியவர் ...சொக்கலிங்கத்தை கையசைத்து அருகே அழைத்தார். "இப்படி உட்காருப்பா..ஏன் அங்@கயும், இங்@கயும் அலையுறே! இதான் உன் இடம். இங்க உட்கார்ந்து இருந்தவர் அண்மையில காலம் ஆயிட்டாரு. ஒரு ஆள் குறைஞ்சா, மறு ஆள ஆண்டவன் அனுப்பி வைப்பான். அதான் இங்@க கணக்கு. இந்த இடத்துல உட்காரத்தான் நீ வந்திருக்க..." கையைப் பிடித்து அருகே உட்கார வைத்தார். எல்லாம் சூட்சம பாஷையாக இருந்தது

சொக்கலிங்கத்துக்கு....

"மில்களுக்கு நூல் சப்ளை செய்யுற பெரிய வியாபாரி நான்... பல லட்சங்களை எண்ணின கை இது. மனைவி, மகள் உண்டு. ஒரு சங்கடம் வந்து என்னை குடும்பத்துலேர்ந்து முப்பது வருஷத்துக்கு முன்னாடி பிரித்தது. இப்ப வயசு என்பத்தி ஐந்து. பட்டினத்தார் மாதிரி கட்டின

வேட்டியோட புறப்பட்டேன். பரதேசியா இந்தியா முழு தும் சுத்தினேன். கடைசியில பழனி ஆண்டவன் இங் கயே உட்காரவச் சுட்டான்."

தன் கதை சொன்னார்... இந்த பூமியில இஞ்சினியர், டாக்டர், வியாபாரி, கலைஞர்கள் அரசியல்வாதின்னு விதவிதமா எத்தனையோ பேர் பிறக்கிறான். அதுல யார் வேணாலும் இறுதியில பிச்சைகாரனா இயற்கை மாத் தும். பிறர் பாவம் தீர்த்து, நம் பாவம் கழிக்கிறோம். யாசகம் வாங்கி எல்லாரும் சாப்பிட முடியுமா? ஆயுள் குறையும். அடுத்தவன் கர்மபாரம் அது. அதைச் சாப்பிடுற நமக்கு ஒன்னும் செய்யாது. நம்ம வயிறுதான் அவன் பாவத்தை எரிக்கிற சுடுகாடு. இதுதான் ஆண்டவன் நமக்கு கொடுத்த அருள். நாம தெய்வத்தோடு நெருங்கின பிள் ளைகள். ஜனங்களுக்கு பரிகார மூர்த்திகள்! யாரிடமும் எதுவும் கையேந்தி கேட்காதே! கிடைச்சா சாப்பிடு! இல் லேனா சும்மா இரு! எல்லாம் உனக்கு போக போகப் புரி யும்!" என்றார் அந்த பெரியவர்.

சொக்கலிங்கம் வயலில் தனக்கு நேர்ந்த அமா னுஷ்யத்தை சொன்னார்... "அவந்தானப்பா உன்னை நேரு@ல வந்து அழைச்சியிருக்கான். அருணகிரிநாத ரைவிட பெண் மோகம் கொண்டவன் உண்டா? உனக்கு ஞானம் பிறக்கும்!" ஆசீர்வதித்தார். நாட்கள் நகர்ந்தன... தாடி வளர்ந்தது. ஆளே மாறிப்போனார்.

பழனியில் மொட்டைப்போட்டு தரிசனம் முடித்துவிட்டு ஒரு குடும்பம் வந்தது... மூன்று வயது சிறுகுழந்தை ஜட்டி மட்டும் போட்டிருந்தான். அந்த பிள்ளை கையில் சில்ல ரைகள் கொடுத்து யாசகம் போடச் சொன்னார்கள் பெற் றோர். அந்தக்குழந்தையும் ஒவ்வொருவருக்காக போட் டுக்கொண்டே வந்தது.

சொக்கலிங்கம் சற்றே கண் அயர்ந்திருந்தார். அந்தக் குழந்தை சில்லரையை நீட்டியபடியே..."தாத்தா தாத்தா" தனது தேனினும் இனிய மழலையால்...கூப்பிட்டது. கண் விழித்தார். அவருக்கு என்ன தெரிந்ததோ தெரி யவில்லை. "முருகா... முருகா பழனி ஆண்டாவா" பரவ சத்தோடு குழந்தையின் பிஞ்சுக்கால்களைத் தொட்டு வணங்கினார். பெற்றோர் உடனே பதற்றமாய் குழந் தையை இடுப்பில் தூக்கிக்கொண்டு நகர்ந்தனர். மண் டிப்போட்டபடியே குழந்தையை கையெடுத்து கும்பிட் டார். இடுப்பில் இருந்த குழந்தை சொக்கலிங்கத்தை பார்த்து மந்தகாச புன்னகை புரிந்தது.

## 15.பறக்கும் சாமியும், கிணத்து தண்ணியும்!

மாடசாமி தன் குருநாதரைக் குறித்து வெளிப்படையாக பேச மாட்டர். மூடு மந்திரம் போல் சொல்லியும் சொல் லாமலும் நிறுத்திக்கொள்வார்.

"எனக்கே எனக்கு மட்டும் கிடைத்த சொத்து," என் பார். சொல்லும் போதே...உடம்பை சிலித்துக்கொள் வார். கண்களை மூடி கையெடுத்து கும்பிட்டுக்கொள் வார்.

குருவின் பெயரைக் கேட்டால் "ம்...சொல்லக்கூடாது." முகத்தில் அச்சம் காட்டுவார். ரொம்ப முக்கியமானவர் கள் நாலு முறை வலியுறுத்திக் கேட்டால்தான் காதருகே குனிந்து ரகசியமாய் "ஓலப்பாய் சாமி" என்பார்.

"இப்படி ஒரு சித்தரா? சாமியா? கேள்விப்பட்டதே இல் லையே..."வியப்பாய் கேட்போரிடம் "ஆமாம். அவரை யாருக்கும் தெரியாது. தெரியவும் கூடாது " என்பார்.

மாடசாமி மண்பாண்ட தொழில் செய்யும் வேளாளர். மாலையில் அவருக்கு மற்றொரு அடையாளம் உண்டு. அவர் வீட்டுக்கு மக்கள் வைத்தியத்துக்காகவும், அருள் வாக்கு கேட்கவும் வருவார்கள்.

பெரிய நோய்களுக்கு அவர் வீட்டு கிணற்றுத் தண்ணீ யும், மனசில் தோனுகிற பச்சிலை பேரையும் சொல்லி வைத்தியம் சொல்வார். ஆச்சரியமாய் குணம் பெறும்.மா டசாமியை வந்து பார்த்து வீபூதி வாங்கினால் தடைப் பட்ட கல்யாணம் நடந்தது. குழந்தை பாக்கியம் கிடைத் தது. இந்த அருள் தீடீரென அவருக்கு எப்படி கிடைத் தது என ஆச்சரியப்பட்டார்கள் ,மக்கள்.

ஒருமுறை பாணைமண் எடுக்க பாரவண்டியை ஓட் டிக்கொண்டு போனார், மாடசாமி. உச்சிவெயில் நேரம். ஆள்நடமாட்டமில்லாத வயல்வெளியில் யாரோ ஒரு அந்நியர் அடுப்பெரிப்பது போன்ற காட்சியைத் தூரத்தே கண்டார்!

கிராமத்து மனிதர்களுக்கே உரிய "அங்க என்னா நடக் குது?" என அறியும் ஆவல் ஏற்பட, வண்டியை ஓரமாக நிறுத்தினார்.வரப்பில் நடந்து சென்றார். அருகே நெருங் கும் போதுதான்... தலையில் நீண்ட ஜடா முடியும், முகத் தில் நீண்ட தாடியுமாக ஒரு சாமியின் தோற்றம். ஈச்சம் பாயில் கண்களை மூடி அமர்ந்திருந்தார், அவர் எதிரே தீ மூட்டப்பட்டு சிறு மண் கலயத்தில் உலை கொதித்துக் கொண்டிருந்தது.

காய்ந்த சருகுகள் மீது மாடசாமியின் காலடிபட்ட ஓசை யில்... சட்டென கண்விழித்தார் அந்த சாமி. பவ்வியமாக வணங்கினார், மாடசாமி. ஆசனத்தில் இருந்து படுவே கமாக எழுந்த சாமி, அடுப்பில் பொங்கிக்கொண்டிருந்த மண்பானையை எடுத்து அப்படியே போட்டு உடைத் தார்.

பொங்கிய சோறும் அதனுள் கலவையாக இருந்த கீரை யும் உடைந்த பானை ஓடுகளுமாக மண்ணில் சித றின. உட்கார்ந்திருந்த ஓலபாயை வேகவேகமாக சுருட் டினார். மரத்தடியில் வைத்திருந்த தோள்ப்பையை எடுத்து மாட்டினார், ஆவேசமாக நடக்கத் தொடங்கி னார்.

மாடசாமிக்கு தான் ஏதோ பெறும் தவறு செய்து விட் டதை உணர்ந்தார். பின்னாடியே நடந்தார்...சாமி மன் னிச்சுடுங்க.." திரும்பத் திரும்ப சொன்னார்.

மாடசாமியை அடக்கும் வகையில்...சாமியிடமிருந்து ஓர் கம்பீரக்குரல் ஒலித்தது. "நீ எடுக்க வந்த மண் மேற்கால இருக்கு. போய் எடு. உன்னை மறுபடி சந்திக்கும் போது மண் கலையம் செஞ்சி வை. இன்னைக்கு என் சாப் பாடு எச்சி பட்டுடுச்சி." பத்தடி இடைவெளியில் .மாடசா மிக்கு முதுகை காட்டியபடியே சொன்னவர்.. சற்று அதட் டலாய்... "அப்படியே திரும்பி போ... என்னை பின் தொட ராதே" என்றபடியே, தனது தோள் பையில் இருந்து ஏதோ ஒரு பொருளை எடுத்து வாயில் போட்டார்.

அடுத்த கணம் சாமியின் பாதங்கள் பூமியை விட்டு அந் தரத்தில் எழுந்தன.. அந்தக் காட்சியைப் பார்த்த மாடசா மியின் கண்கள் மயங்கின. வயலில் சரிந்தார். மயக்கம் தெளிய...சில மணி நேரங்கள் ஆனது. எழுந்து, வீட் டுக்கு சென்றார். கண்ட காட்சியை யாரிடமும் சொல்ல வில்லை. மனம் பரமானந்த அனுபவத்தில் மிதந்தது.

மேற்கு திசையில் உயர் ரகமான மண் எடுத்தார். முதல் கலையம் செய்து... சாமிக்கு என பூசையில் வைத்தார். நாட்கள், வாரங்கள், மாதங்கள் ஓடின...'மறுபடி எப்போ எங்கே பார்ப்பது?' என தெரியாது தவித்தார். ஏங்கி னார். முதலில் தரிசனம் செய்த அதே வயல்வெளி பக் கம் அடிக்கடி போயி பார்ப்பார்., அங்கே நடமாட்டங்கள்

ஏதும் அற்ற வெறுமை காத்திருக்கும். வீட்டுக்கு திரும்பி விடுவார்.

கிராமத்தில் ஒதுக்குபுறமாக ஓர் இடிந்த கோயில் இருக் கிறது. மாலை நேரம். அந்த பக்கமாக நடந்து சென்று கொண்டிருந்தார். அந்த கோயிலுக்குள் இருந்து “மாட சாமி”.... ‘அதே குரல்’ அழைத்தது. விரைந்து உள்ளே போனார். என்ன ஆச்சரியம்? ஓலப்பாயில் சாமி உட் கார்ந்திருந்தார்.

நெடுஞ்சான்கிடையாக விழுந்து வணங்கினார். “பசிக் குது. சீக்கிரம் சோறு பொங்கி எடுத்துட்டு வா...” உடன் வீட்டுக்கு ஓடினார். மாடசாமியின் மனைவி பெரும் சீக் காளி. பெரும்பாலும் வீட்டில் மாடசாமிதான் அடுப்படி வேலையும் சேர்த்து செய்வார். ஓரே மகள், திருமணம் செய்து கொடுத்துவிட்டார்.

‘சாமிக்கு சாப்பாடு’ என்பதால்.. கிணற்றில் நான்கு வாளி தண்ணீர் எடுத்து தலையில் ஊற்றினார். கொல்லை யில் புது அடுப்பு வைத்து கொஞ்சமாக பொங்கல் செய் தார். கலையத்தில் வைத்தார்... ஓட்டமும் நடையுமாக விரைந்தார்...

ஊர்காரர் ஒருவர் அந்நேரம் எதிரே வந்துவிட்டார். அவரோ பெரிய மனிதர். அவரை அலட்சியம் செய்து விட்டு போக முடியாது. “என்னா மாடசாமி அவசரமா போற? என்னா கையில?”

“சாப்பாடுங்க”

“அதான் நெய் வாசனை அடிக்குதே” என்று சொல்லிய படி அவர் கடந்து போனார். மாடசாமி இடிந்த கோயிலுக் குள் நுழைந்தார்.

சாமி முன்பாக சாப்பாட்டுக் கலையத்தை வைத்தார். சாமி தொடவில்லை. “வரும்போதே எச்சில் பட்டுட்

டுப்பா..." என்று எழுந்தார். வழியில் ஊர்க்காரர் ஒருவர் நெய் மணம் நுகர்ந்துவிட்டதை சாமி 'எச்சில்' என குறிப் பிடுகிறார் என்பது புரிந்தது. மனம் வருந்தினார். அமை தியாக நின்றார்.

சாமி எழுந்தார். ஓலப்பாயை சுருட்டி கக்கத்தில் வைத் தார். "பழனியின் பால் அபிஷேகம் ஆரம்பிக்க போவுது. முருகன் கூப்பிடுறான் நான் புறப்படுகிறேன்." என்றார்.

"எனக்கு கலையம் செஞ்சி வை. திரும்ப வருவேன்" என்றார். முதல் முறை சாமியை பகலில் பார்த்தபோது கண்டறிய முடியாத ஒன்றை அந்த இருளில் கண்டு ணர்ந்தார். அருகே தெருவிளக்குகள் இல்லை. ஆனால் அவர்கள் இருக்கும் இடம் வெளிச்சமாக இருந்தது. அப் போதுதான். சாமி உடம்பில் இருந்தே மெல்லிய வெளிச் சம் அங்கே பரவியிருப்பதை.... மாடசாமி உணர்ந்தார் அவரது தோள் பையில் இருந்து கல் போன்ற ஒன்றை எடுத்து வாயில் அடக்கினார். அடுத்த சில நொடிகளில் அவரது உடல் விண்ணில் மேலெழும்பியது. இருட்டில் மறைந்தது.

பிரமித்து போனார். மனம் ஆனந்த மயம் ஆனது. வீட்டிற் குள் நுழைந்தார். மனைவி கேட்டாள்... "எங்க போறீங் கன்னு? கேட்டேன். வந்து சொல்றேன்னுட்டு போனீங் கே...இப்ப உங்க முகமும், உடம்பும் பொன்னாட்டம் மின் னுதுங்க. பாக்கவே வித்தியாசமா இருக்கீங்க. என்னாச் சுங்க?" கேட்டாள்.

யாருகிட்டேயும் சொல்லக்கூடாது என சத்தியம் வாங்கி னார். மெல்ல தனக்கு ஏற்பட்ட அனுபவத்தை சொன் னார். அவர் மனைவி வாயடைத்து போனாள். "ஏங்க இதெல்லாம் நிசம்தானா?"

"நான் ஏன் பொய் சொல்லனும்?"

“அடுத்தமுறை சாமி பாக்கும்போது... என்னையும்

அழைச்சிட்டு போங்க” என்றாள்.அது எப்ப நடக்குமோ? தனக்குள் கேட்டுக்கொண்டார்.

நாளும் சாமியை நினைத்தார். மனதால் வழிபட்டார்... அவர் யார்? அவருக்கு என்ன வயது? எங்கிருந்து வரு கிறார்? பெயர் ஏதும் உண்டா? எதுவுமே தெரியாது. கையில் ஓலைப்பாய் வைத்திருப்பதால் ’ஓலப்பாய் சாமி’ என மனதுக்குள் அழைத்துக்கொண்டார். அப்பெய ரைச் சொல்லியே அவரை தியானித்து வந்தார். புது கலையம் செய்து சாமிக்கு என எடுத்து வைத்தார்...

மாதங்கள் ஓடின... ஒருநாள் நடு இரவு ஆழ்ந்து தூங் கியவரை எழுப்பியது அதே காந்த குரல்...”மாடசாமி” வாசற்கதவை திறந்துகொண்டு வெளியே வந்தார். சாமி நின்றார். வீட்டு நாய், தெரு நாய்கள் எதுவும் குரைக்க வில்லை. மவுனம் காத்தன.

மாடசாமி விழுந்து வணங்கினார். எனக்கான கலையத் தையும், ஒரு மண்வெட்டியையும் எடுத்துகிட்டு... “என் னை தொடர்ந்து வா” என்றார்.

வீட்டினுள் கலையத்தை எடுக்கப் போனவர், அவர் மனைவியை எழுப்பிப்பார்த்தார். அவர் ஆழ்ந்து தூங் கிக்கொண்டிருந்தார்.

சட்டென சாமி சொன்னவற்றை எடுத்துக்கொண்டு பின் தொடர்ந்தார். ஊருக்கு வெளியே இருக்கும் ஆற்றை நோக்கி நடந்தார், சாமி. கோடை காலம். தண்ணீரற்று காய்ந்து கிடந்தது ஆறு.

நடு ஆற்றில்...நின்றுகொண்டு ஒரு குழி வெட்டு என்றார். உள்ளே ஒரு ஆள் உட்காரும் அளவுக்கு ஆழக்குழி வெட்ட வைத்தார். தண்ணீர் ஊறியது. அத்தண்ணீரை கலையத்தில் மொண்டு தரச்

சொன்னார். சாமி அதில் ஒரு வாய் அருந்தினார். "பசி தீர்ந்தது" என்றார் மீதத் தண்ணீரோடு கலயத்தை மண லில் வைத்தார்.

சட்டென அந்த இடம் இருள் சூழ்ந்தது. இப்போது சாமி யின் உடலில் இருந்த வெளிச்சம் விலகியிருப்பதை மாடசாமியால் உணர முடிந்தது... சாமி அந்த குழிக்குள் இறங்கி பாயை விரித்து அமர்ந்தார். "பயணம் நிறைவு பெற்றது. மண்ணை நிரப்பு" என்றார்.

மாடசாமி கண்கலங்கினார். ஆனாலும் குருவின் உத் தரவாயிற்றே! குழியை மூடினார். அடையாளத்துக்கு அருகே இருந்த ஒரு கல்லை எடுத்து வைத்தார். மண லில் இருந்த தண்ணீர் கலையத்தை கையில் எடுத்துக் கொண்டார். வீடு நோக்கி நகர்ந்தார்.

வாசலில் மனைவி உற்சாகமாக காத்திருந்தாள். "ஏங்க நீங்க சொல்வீங்களே அந்த சாமி கனவுல வந்தாங்க. நீங்க தண்ணி கொண்டுட்டு வருவீங்க. அதை ஒரு வாய் அருந்துன்னு சொன்னாங்க". என்றாள்.

பிரசாதமாக பருகினாள். மீதம் உள்ள தண்ணீரோடு கலையத்தை சாமி அலமாரியில் வைத்தார். வெளியே குளிர்ந்த காற்று. கடும் இடி மின்னல்... 'ச்சோவென' மழைப்பிடித்தது. மறுநாள் ஆற்றில் தண்ணீர் ஓடும் அள வுக்கு விடாமல் இருநாள் பெய்தது..

'மண்ணால் சாமிக்கு ஓர் சிலை வடிக்க வேண்டும். ஆற் றங்கரையில் ஓர் அடையாள விளக்கு மடம் எழுப்ப வேண்டும்' என மனதில் நினைத்தார்.

அன்றைய இரவே கனவில் வந்தார் சாமி...'என் தொடர் பான வழிபாடோ, நினைவோ எதுவும் இந்த பூமியில் ஏற் படுத்தக்கூடாது.' என கட்டளையிட்டார்.

'வைத்தியனை கடவுளாக பார்ப்பான், மனிதன். இனி உன்னை எல்லோரும் இனி கையெடுத்து கும்பிடுவார் கள். எந்த நோய்க்கு என்ன பச்சிலை? என்பது இனி உனக்கு தானாக உள்மனதில் தோன்றும். உன் வாக்கு கள் பலிக்கும்.' என ஆசீர்வதித்துவிட்டு மறைந்தார்.

காலை அடுப்படியில் மனைவி பணி செய்து கொண் டிருந்தாள். "அந்த தண்ணீ குடிச்சதுமே ஏன் உடம்புல எல்லா நோய்யும் தீந்துடிச்சிங்க" என்றாள். உடனே மாடசாமி கலையத்தில் மீதம் இருந்த தண்ணீரை தன் வீட்டு கிணற்றில் ஊற்றினார்.

அவர் கொடுக்கிற கிணத்து தண்ணியைத் குடிச்சாலே பாதி நோய் குணமாகுங்க" என்றனர், மக்கள்.

## 16. நல்லவர்களுக்கு தெய்வம் துணை இருக்கும் !

கண்ணபுர சுவாமிகளுக்கு வயது என்பதை தாண்டியி ருக்கும். முகத்தில் அடர்ந்த வெண் தாடி எங்கும் சென் றாலும் நடந்துதான் செல்வார். பத்து நாள், இருபது நாள் ஒரு ஊரில் இருப்பார். பிறகு மற்றொரு ஊருக்கு செல் வார். அந்தந்த ஊரில் உள்ள பெருமாள் கோயில், அல் லது ஆஞ்சேனேய மடம், ராமர் மட வளாகத்தில் தான் தங்குவார். அவர் ஒரு பெருமாள் அம்சம்.

ஒவ்வொரு ஊரிலும் அவருக்கென பக்தர்கள் சிலர் இருந்தார்கள். மாதத்தில் முதல் தேதி சம்பளம் வாங் கியதும்... கண்ணபுர சுவாமிகள் பெயருக்கு மணியாடர் அனுப்பிவிடுவார்கள். அவர் முகாமிட்டிருக்கும் ஊரின்

பெருமாள் கோயில் முகவரிக்கு அந்த மணியாடர்கள் வந்து சேரும்.

சுவாமி ஊரில் இருந்தாலும், இல்லாவிட்டாலும் அந் தந்த ஊர் போஸ்ட்மேனே அந்த மணியாடர்களை பெற்று வைத்துக்கொள்வார். சுவாமி எப்ப வருகிறா ரோ...அப்போது அவரிடம் கொடுப்பர்.

“சுவாமி ...தஞ்சாவூர் முத்துகிருஷ்ணன் பத்து ரூபா அனுப்பியிருக்கார். மதுரை நாராயணன் ஆறு ரூபாய் அனுப்பியிருக்கார்.” என வரிசையாக போஸ்ட்மேன் சுவாமிக்கு முன்பாக நின்று வாசிப்பார்.

சுவாமி கையில் நீளமான மூங்கில் தடி ஊன்றுகோல் வைத்திருப்பார். அதைத் தரையில் தட்டியபடி...“ம்” கொட்டுவார்.

கடைசியில் ... மொத்தமாக வந்த ரூபாயை கூட்டிச் சொல்வார். “பாதியை நீ வச்சுக்கோ..மீதியை இப்படி வை... ராமன் ஆட்சியில யாரோ அனுப்புறான், யாரோ சாப்புடுறான்... ஹா ஹா” சிரிப்பார். “எல்லாம் கடன் வாங்குன பயலுவோ... திரும்ப கொடுக்குறானுங்க” என் பார். அவருக்கு எந்த செலவும் கிடையாது. போஸ்ட் மேன் கீழே வைக்கும் மீதப் பணத்தை ஒரு பேப்ப ரில் ஒரு பொட்டணமாக மடித்து பை#க்குள் போட்டுக் கொள்வார். ஏற்கனவே அப்படியான பணப் பொட்டலங் கள் சில அப் பையில் இருக்கும்.

சுவாமியை காண வரும் பக்தர்கள், தூரத்தே நின்றுதான் விழுந்து வணங்க வேண்டும். அருகே செல்லக்கூடாது. அவர் காலைத் தொட்டு வணங்கக்கூடாது. அருகில் வந்தால் “ஐந்து அடி தள்ளி போ. அங்கேயே உட்கார்” என அதட்டுவார்.

“ஃபைவ் பீட், ஃபைவ் பீட்... தள்ளிக் உட்கார்” என ஆங் கிலத்திலும் சொல்வார். சிலரை “டென் பீட் தள்ளி உட் கார்” என்பார். சொல்லியும் கேட்காதவர்களை “நாத்த நாய்... தள்ளி உட்காருடா” என்பார். யாரும் தன் மீது பட்டுவிடக்கூடாது என்பதாலேயோ என்னவோ...அவர் பஸ், டிரெயின் எதிலும் ஏறுவதில்லை. ஜெயின் துறவி களைப் போல எங்கு சென்றாலும் கோலை ஊன்றிக் கொண்டு பொடி நடையாகவே போவார்.

கோரிக்கைகள் எதுவும் நாமாக சொல்லக்கூடாது. கேட் கவும் கூடாது. சுள்ளென்று கோபம் வந்துவிடும். “எல் லாம் தெரியும் போடா” திட்டுவார். பக்தருக்கு நல்ல நேரம் வந்துவிட்டால் அவராகவே சொல்வார்...“மக ளுக்கு மாப்பிளை வருதுடா...கல்யாணத்தை முடி” என் பார். அவர் சொன்னது போல அடுத்த மூன்று மாதத்துக் குள் அந்த வீட்டில் எல்லாம் தானாக நிறைவேறும்.

அப்படியான் ஒரு சொல்லுக்காக அவர் பார்வை நம் மீது படாதா? நமக்கு ஏதாவது சொல்ல மாட்டாரா? என பக் தர்கள் அவர் தங்கியிருக்கும் இடத்தில் வந்து கூடி நிற்பர். கண்களை மூடிய நிலையிலேயே இருப்பார்.

எப்போதாவது... சக்கராயுதம் யேந்திய விஷ்ணு போல் கையை உயரே தூக்கி மேலே காட்டுவார். ஆவேசமாய் உடம்பைக் குலுக்குவார். தண்ணீர் குடிப்பார்...“துஷ்டன் ஒருத்தன் சரிந்தான்” என்பார். வெட்டவெளியில் யாரி டமோ பேசுவது போல் பேசுவார்...

"நாலு நாளைக்கு அரிசி பருப்பு வாங்கி வச்சுக்கோ, வெளியில வர முடியாது” சூட்சம மொழியாய் ஏதோ சொல்வார். அவர் வார்த்தைகள் அடுத்த ஓரிரு நாட் களில் புயலாக, கடும் மழையாக வந்து புரிய வைக்கும். அவர் கேட்காமல் அவருக்கு எதுவும் வாங்கிக்கொடுக்க முடியாது. தொட மாட்டார். விரும்பி சாப்பிடுவது இட்லி

மட்டும்தான். வெற்றிலை பாக்கு போடுவார். ஏதேனும் ஒரு குறிப்பிட்ட பக்தர் வீட்டு சாப்பாடு மட்டும்தான் ஏற் பார்.

ஆலய வளாகத்தில் தங்கியிருந்தாலும்...பெருமாள் சன் னதி, தாயார் சன்னதி எங்கும் போய் வழிபட மாட்டார். என்றாவது...ஆச்சரியமாய் கூட்டமில்லாத போது சன்ன திக்குள் செல்வார். கர்பகிரகத்தை நோக்கி சுவாமி, நடந்து வருவதைக் கண்டாலே இளம் பட்டாச்சாரியார் கள் சட்டென கர்பகிரகத்தை விட்டு வெளியே வந் துவிடுவர். சுவாமி மூன்று நொடிக்கு மேல் அங்கே நிற்க மாட்டார். கையெடுத்து கும்பிட மாட்டார். பெரு மாள் பாதத்தை மட்டுமே பார்ப்பார். அண்ணாந்து முகம் பார்க்க மாட்டார். திரும்பி விடுவார்.

ஒரு பட்டச்சாரியார்.. பூஜையின் போது பக்தர்களிடம் சிடுசிடுன்னு எரிந்துவிழும் இயல்புகொண்டவர். அவ ரால் மனம் புண்பட்ட பக்தர் ஒருவர் வெளிபிரகாரத்தில்.. உட்கார்ந்திருந்த சுவாமியிடம்... வந்து கூறி வேதனைப் பட்டார்....

"அப்படியா நடத்துகிறான்." கண்களை இறுக்க மூடி ஒரு பெருமூச்சுவிட்டுட்டு சொன்னார்... தாயார் சன்னதியில் காணாமல் போச்சே...அந்தப் பொருள் அது அவன் வீட் டில, தான் இருக்கு. பெருமாள் சொல்லுறரே!" என்றார்.

அவ்வளவுதான்...உடனே நிர்வாகம் அவரை அழைத் துக்கொண்டு போய் சுவாமி சொன்ன இடத்தில் பார்த் தால்... அந்தப் பொருள் இருந்தது. பின்னர் அவரை மன் னிக்கும்படியும் கேட்டுக்கொண்டார்.

இப்படி நடந்தது, நடக்க இருப்பது, ஒருவனின் துன்பத் திற்கு காரணம்? அவனது முன்னோர் செய்த பழி பாவம் என்ன? கடகடவென சொல்லுவார். "உன் தாத்தா இன் னது பண்ணினான், உன் பாட்டன் இன்னது பண்ணி

னான்." என்பார். மூன்று தலைமுறை செய்தியை பேசு வார். அதைக் கேட்பவர்கள் சுவாமிக்கு முந்நூறு வயசா வது இருக்கும் என்பார்கள்.

மனசாட்சிக்கு விரோதமாக வாழ்பவர்கள் சுவாமி இருப் பதைக் கண்டால்.. நழுவி விடுவார்கள்...சில நேரங்க ளில், அவர்கள் இரகசியமாக செய்த தீயவைகளையும் கூட, எல்லாருக்கும் முன்பாக சட்டென சொல்லி விடு வாரே! அந்த அச்சம் தான். அவரது தோள் பையுனுள்.... பழைய கால வலம்புரி

சங்கு, கடல் சார்ந்த மூலிகை வேர்கள் இருக்கும். சுவா மியின் முன்னோர்கள் இலங்கையில் இருந்தவர்களாம். மற்றபடி அவர் யார்? பிறந்த ஊர் எது? எதுவும் யாருக் கும் தெரியாது. அவரது நெடுநாளை பக்தர் சிவராமன். ரெயில்வேயில் பணி செய்தார். வேலைக்கு போனால் மூன்று நாள் கழித்துதான் வீட்டுக்கு வருவார். மனைவி, குழந்தைகள் தனியாக இருப்பார்கள். பக்கத்து வீட் டில் ஒரு முரடன் குடியிருந்தான். குடிகாரன். அவனால் சொல்ல முடியாத துயரத்தை நாளும் அனுபவித்து வந் தார், சிவராமன்.

இரவில் குடித்துவிட்டு வந்து சிவராமன் வீட்டுக் கத வைத் தட்டுவான். மேயுற கோழி அவன் வீட்டு கொல் லைக்கு போனால் திரும்ப வராது. அவனுடைய அநி யாயங்களைத் தட்டிக்கேட்க அந்தப் பகுதியில் முன்வரு வார் யாரும் இல்லை.

இவனுக்கு பயந்து வீட்டையே விற்றுவிடலாம் என சிவ ராமன் முடிவு செய்தார். ஆனால் வாங்க யாரும் முன் வரவில்லை. இந்நிலையில்... இருவீட்டுக்கும் நடுவில் இருந்த முள் வேலியை மாற்றிக் கட்டுபோதும் ஒரு அடி தள்ளி சிவராமன் வீட்டு மனையில் கட்டிவிட்டான்.

டியூட்டி முடித்து வந்த சிவராமன் வேகப்பட்டு காவல் நிலையத்தில் புகார் கொடுத்தார். விசாரணைக்கு வந் தார்கள். பணம் செலவானது. "கடைசியில சர்@வயரை வச்சி அளந்து முடிவு செஞ்சிக்குங்க" என சால்ஜாப் சொல்லி நகர்ந்து கொண்டார்கள். அதன்பிறகு முரட னுடைய ஆவேசம் அதிகமானது. வீட்டினுள் இருந்து கொண்டு ஆபாச வார்த்தைகளால் திட்டுவது, முறைத்து பார்ப்பது என நடந்தவன்..."போலீஸ் ஸ்டேசனுக்கா போறே... உன்னை வெட்டாம் விடமாட்டேண்டா..."என அரிவாளோடு வசலுக்கு வந்துவிட்டான். தெருக்காரர் கள் இருவர் வந்து தடுத்ததால் தப்பித்தார்.

மனம் நொந்து போனார்.. ஒரு முடிவுக்கு வந்தார். 'கண் ணபுர சுவாமிகளின் பக்தரா இருந்து நமக்கு என்ன புண்ணியம்?'

சில முறை சுவாமியை தரிசனம் செய்ய போனபோது பக் கத்துவீட்டு பிரச்னையை சொல்ல முனைந்திருக்கிறார்...

சுவாமி..அதற்கு இடம் கொடுக்காமல் "புறப்படு" என உத்தரவு இட்டுவிடுவார். சொல்ல முடியாமலே திரும்பி விடுவார், சிவராமன்.

இந்த முறை அவருக்குள் ஓர் ஆவேசம் எழுந்தது. லீவு போட்டார். சுவாமி எந்த ஊரில் இருக்கிறார் என விசா ரித்தார். புறப்பட்டு போனார்.

கோயின் உள்ளே ஒதுக்குபுறமாய் மண்டபம் உண்டு. திருவிழாவின் போது பயன்படும் சில மர சாமான்கள் அங்கே இருக்கும். அங்கே லைட் எரியாது. இருட்டாக இருக்கும். வவ்வால்கள் தொங்கும். அங்கே சுவாமி படுத்திருந்தார். அருகில் யாரும் இல்லை. பக்தர்கள் தொந்தரவு கூடாது என்பதற்காகத்தான் அங்கே வந்து அடங்கியிருந்தார்.

சுவாமியை நெருங்கியதும்...சிவராமனுக்கு அழுகை ஆத்திரம் முட்டியது. 'ஓவென' வாய் விட்டு அழுதார். சுவாமி கண் திறந்தார்..."இந்நேரம் செத்து போயிருப் பேன்... சந்தோஷமா. பக்கத்துவீட்டுக்காரன் வெட்ட வந் துட்டான்." ஆக்ரோஷத்தோடு பேசினார்.

சுவாமி எழுந்து உட்கார்ந்தார். சில நொடிகள் கண் களை மூடி தாடியை வருடினார்... "ஒரு எலும்பிச்சை பழம். வெத்திலைப் பாக்கு, தாழம்பூ பத்தி வாங்கிட்டு வா" என்றார்.உடன் வெளியே ஓடினார் சிவராமன்....

சொன்னதைக் கொண்டு வந்து சுவாமிக்கு முன்பாக வைத்தார். "பத்தியை கொளுத்தி வை. கண்ணை மூடு. தியானம் செய்" என்றார்.

சுவாமி தன் இயல்புக்கு மாறாக ஏதோ செய்கிறார் என உணர்ந்து கொண்டார் சிவராமன். நிசப்தம் நிலவியது. பத்து நிமிடம் ஆகியிருக்கும். சுவாமி தனது கோலால் சிவராமனைத் தொட்டார்... "கண்ணைத் திற" என்றார்.

மெல்ல கண்களைத் திறந்த சிவராமனுக்கு பகீர் என் றது. தொண்டையில் எச்சில் விழுங்கினார். உடலில் பயம் பரவியது.

பிருமாண்ட தெய்வீக காட்சி... தரைக்கும் மண்டப உச் சிக்குமான விஷ்வரூப தரிசனம். ஆவேசமாய் நின் றாள், கருத்த காளி. அவள் விடும் மூச்சில் அங்கி ருக்கும் புழுதிகள் மேலெலும்பின. நெருப்பு பிழம்பாய் கண்கள், சிவந்த நாக்கு தொங்க... பின்னால் கரங்கள் அசையும் போது... மூங்கில்கள் ஒன்றொடு ஒன்று உரசு வது போன்ற ஓசை... -நடுநடுங்கினார், சிவராமன். கூப் பிய அவரது கைகள் உதறின. "வனகாளி வந்திருக்கா! உனக்கு துணையாக அனுப்பி வைக்கிறேன்!. எது குறித் தும் கவலை கொள்ளாதே" என்றார் சுவாமி. அடுத்த கணமே, காளி மறைந்தாள்.

சிவராமனுக்கு உடம்பில் ஏற்பட்ட அதிர்வுகள் அடங்க வில்லை. காளி நின்ற இடத்தில் விழுந்து வணங்கி னார். பக்கத்துவீட்டு சண்டையினால் தனக்கு கிடைத்த பெறும் பாக்கியம் இந்த தெய்வ தரிசனம் என அகம கிழ்ந்தார்.

சுவாமிக்கு எப்படி நன்றி சொல்வது என தெரியா மல்... படபடத்தார். சிவராமனைப் பார்த்து "கிளம்பு" என கையசைத்தார் சுவாமி.

வீட்டுக்கு வந்து சேர்ந்தார். பக்கத்து வீட்டில் ஓரே பர பரப்பு தெரிந்தது. ஆம்புலன்ஸ் வந்தது. முரடனுக்கு மூன்று மகன்கள், ஒரு மகள்.

சிவராமனின் மனைவி சொன்னார்... "நீங்க போன கொஞ்ச நேரத்துக்கு எல்லாம் ஒரே அழுகை சத்தம். அவன் பிள்ளைங்க மதியானம் என்னா சப்பிட்டுதுங் களோ தெரியல...ஒண்ணு பின்னாடி ஒண்ணா...எல்லா ருக்கும் வயத்தால போகுதாம். நிக்கவே இல்லையாம். மயங்கிட்டாங்க. டாக்டர் வந்து பார்த்துட்டு, எல்லாரை யும் பெரிய ஆசுபத்திரி கொண்டு போறாங்க" என்றாள்.

காதில் வாங்கிக்கொண்ட சிவராமனனின் கண்களில் தாயின் ஆவேச தரிசனம் தெரிந்தது.

முரடனின் வீடு ஒருவாரம் பூட்டிக் கிடந்தது. தாமதமாகத் தான் சிவராமன் தெரிந்துகொண்டார். அடுத்த இரண் டாவது நாளே முரடனின் பகைக்காரன் ஒருத்தன்... வெட்டியதில் முரடன், தன் வலது கையை இழந்துவிட் டான் எனக் கேள்விப்பட்டார்.

ஒரு கை இல்லாத அவன், கால ஓட்டத்தில் சம்பாத்தி யம் இழந்து வறுமை சூழ்ந்து...சிவராமனிடமே அவனது வீட்டை விற்று விட்டு அந்த ஊரை விட்டே வெளியேறி போனான்.

## 17.நீ உசுரு உள்ள தெய்வமா? செத்த கல்லா?!

சாதியால், பணத்தால் ஆதிக்கம் செலுத்துபவர்களில் பலர் ஆணவக்குணம் கொண்டவர்களாக ஆகின்றனர். பாவத்தை உற்பத்தி செய்பவர்களாக மாறுகின்றனர். சாபத்தை கூலியாக பெறுகின்றனர்.

பள்ளிப்படிப்பை தாண்டாதவர், மனோகரன். சாதாரண உப்பள தொழிலாளியின் மகன். நாற்பது வயதுக்குள்ளாகவே பணத்திலும், அதிகாரத்திலும் அசுர வளர்ச்சி கண்டார்.

சிறு வயதிலேயே அடிதடி கும்பலில் சேர்ந்தார். தாடி மீசை வளர்ந்ததும் அரசியலில் சேர்ந்தார். வட்டி, கட்டபஞ்சாயத்து என மற்றவர்களை வாட்டும் வழியில் பொருள் சேர்த்தார்.

கடன் கொடுக்கும்போது அடமானமாக சொத்து பத்திரத்தை எழுதி வாங்குவது வழக்கமான ஒன்றுதான். ஆனால் மனோகரன் கடன் கொடுக்கும் போதே சொத்தை தன்னிடம் விற்றுவிட்டதாகவே பத்திரம் எழுதி வாங்கிக் கொள்வார்.

வெகு சிலரே மீண்டும் அவரிடமிருந்து பத்திரத்தை மீட்டுள்ளனர். மனோகரனுக்கு சொந்தமாக உப்பளங்கள், பனை, தென்னை தோப்புகள் என பழையகால பண்ணையார் வாழ்க்கையை மீட்டு எடுத்தார். அவரிடம் கூலியாக நாளொன்றுக்கு ஏராளமான நபர்கள் பணி செய்தனர். சாதிய வலிமையால் அந்த ஊரின் பஞ்சாயத்து தலைவராகவும் வெற்றி பெற்றார். ....

அதன் பிறகு அவரது நடவடிக்கைகள் மிக கொடுங்கோலனாக மாறியது. அவர் வீட்டில் குட்டு கிழவி என்று ஒரு கிழவி வேலை செய்தாள். மனோகரன் வீட்டில்

மூன்று வேலையும் சாப்பிட்டுக்கொள்வாள். அவளுக்கு மது பழக்கம் உண்டு. மாலையானால் ஐம்பது ரூபாய் பணமும், மதுவும் அவளுக்கு கொடுத்துவிடவேண்டும்.. இதைத்தவிர மனோகரனின் தனிப்பட்ட அன்பளிப்புகளும் அக்கிழவிக்கு கிடைக்கும்.

அடிதடி, வெட்டு, குத்து என கம்பீரம் காட்டும் மனோகரனுக்கு மது, புகை பழக்கம் கிடையாது. ஆனால் மற்றொரு பலவீனம் இருந்தது. அப்பலவீனம் அவரை நாளும் ஆட்டிப்படைத்தது. அதை நுணுக்கமாய் அறிந்த கிழவி...மாட்டுக்கு மூக்கணாங்கயிறு குத்தி அதிகாரம் செய்வது போல்...மனோகரனின் மூக்கணாங்கயிற்றை கிழவி பிடித்திருந்தாள்.

உப்பளத்தில், தோப்பில் வேலை செய்யும் பெண்கள், பெரும்பாலும் ஏழைகள். அவர்கள் வீட்டில் கல்யாணம் காட்சி, சீக்கு, மரணம் அத்தனைக்கும் பேப்பரில் கையெழுத்து வாங்கிக்கொண்டு பணம் கொடுப்பார் மனோகர். அப்பெண்களைப் பிழிந்து வேலை வாங்குவதும், கண்காணிப்பதும், குற்றம் குறை கண்டறிந்து வந்து மனோகரிடம் சொல்லவதும், இந்த கிழவிக்கு பொதுவான வேலை.

அதைவிட மற்றொரு அந்தரங்கமான வேலையை மனோகரனுக்கு செய்து வந்தாள். எழுத கூசத்தக்க செயல் அது. அடித்தட்டில் நாளும் வாழ்க்கைப்போராட்டத்தோடு வாழும் இளம் பெண்களுகளிடம் வெத்தலையை மென்றபடி  வசிய வலை விரிப்பாள். அதில் ஏமாறும் அபலைகளை மனோகரனின் அறைக்கு அழைத்து வரும் பாவ பணியை செய்து வந்தாள். முதலாளியின் அந்தரங்கம் அறிந்தவள் அல்லவா... தனி அதிகாரம் அவளிடமிருந்தது. "பார்த்து பேசுங்கடா

கிழவி உட்கார்ந்திருக்கு..." என வேலையாட்கள் அஞ்சு வர்.

மனோகரனின் பொதுவாழ்வில் சாதிக் கலப்பு, சாதி மறுப்பு எல்லாம் இந்த வகையில் மட்டும் தான். அவருட டைய பொழுதுபோக்காக அது இருந்தது.

இந்நிலையில்தான் மனோகரன் பார்வையில் எதிர்பாரா மல் பட்டாள், செல்வி. மற்றொருவர் உப்பளத்தில் கூலி யாக வேலை செய்து வந்தாள். அவளுக்கு இருபத்தி ஆறு வயசு இருக்கும். வேற கிராமத்தில் பிறந்தவள். இந்த ஊருக்கு இரண்டாம் தாரமாக வாழ்க்கைப்பட்டு வந்திருக்கிறாள். அவள் கணவனும் உப்பள கூலிதான். கணவனுக்கும், அவளுக்கு பதினைந்து வயது வித்தி யாசம். கணவருக்கு முதல் தாராத்தில் பிறந்த இரண்டு பிள்ளைகள் உண்டு. அந்தளவில் அவர்கள் பிழைப்பை நடத்த நாளும் பாடுபட்டு வாழ்ந்தனர்.

செல்வியை கண்டது முதல் மனோகரன் மனதில் தீய எண்ணம் ஏற்பட்டது. அந்த முள் செடி நாளுக்கு நாள் வேகமாக வளர்ந்தது. தன் விருப்பத்தைக் குட்டு கிழவி யிடம் நாசூக்காக சொன்னார். "அவ, நம்ம தயவு கேட்டு எதுக்கும் வந்ததில்லையே." என்றாள். 'விருப்பம் நிறை வேற எத்தனை செலவானாலும் பரவாயில்லை.' - என கிழவிக்கு அழுத்தம் கொடுத்தான்

கிழவி தன் மை வித்தை முறைகளை எல்லாம் கையாண்டு பார்த்தாள். செல்வியிடம் சாதகமான பதில் இல்லை. நாட்கள், மாதங்கள் ஆனது. கிழவியால் வளைக்க முடியவில்லை.

'ச்சி...ச்சி...இந்த பழம் புளிக்கும்' என்பது போல்...மனோ கரனிடம் "அவளுக்கு சீக்கு இருக்கு. அவ வேண் டாம்" என்றாள். கிழவியால் காரியத்தை சாதிக்க முடிய வில்லை என்பதை புரிந்து கொண்டார்.

சில நாட்கள் கழித்து தனது கையாள் ஒருத்தனை இர கசியமாக அனுப்பினார். செல்வி, தனியாக இருக்கும் ஒரு சந்தர்ப்பம் பார்த்து சந்தித்தான். ஆசைக்கு இணங் கினால் ...'சொந்த மனைக்கட்டு எழுதித் தருவார்' என எடுத்துச் சொன்னான்.

செல்வி, பிறரிடம் கையேந்தி கூலி வாங்கி ஏழ்மைப் பிழைப்பு செய்தாலும், தன்மானம் மிக்கவள். ஓழுக்க கேடான செயலுக்காக, விடாமல் விரட்டும் இந்த இழி மனிதர்களை என்ன செய்வது? அவளுக்கு ஆத்திரம் தலைக்கேறியது? ஆவேசம் ஆனாள். அவளையும் அறி யாமல் கடும் சொற்களை உதிர்த்துவிட்டாள்.

"ஏண்டா.. என்னை வந்து இப்படி கேட்குறியே...ஒரு மனைக்கட்டு எழுதிக்கொடுத்தா உன் முதலாளி அவ பொண்டாட்டிய என் புருஷன்கிட்ட அனுப்பி வைப் பானா? தூ" காறி துப்பினாள்- எல்லாராலும் அச் சத்தோடு பார்க்கப்படும் ஒரு தாதா தலைவரை..மி கச் சாதாரணமாக தனது சொற்களால் காலில் போட்டு மிதித்துவிட்டாள்.

வந்தவனுக்கு வேர்த்துவிட்டது. "யாரைப் பத்தி என்ன பேசுறே?" கையை ஓங்கினான்.

"என்னாடா, கையை ஓங்குற...கறி அறுக்குற கத்தியால உன் சங்க அறுத்துடுப்புடுவேன். இதெல்லாம் வேற எவ கிட்டயாவது வச்சிக்க..." பதிலுக்கு கையை ஓங்கி மிரட் டினாள்.

பதற்றமாய் பைக்கை உதைத்தான். பறந்துவிட்டான். "என்னாச்சு" -எதிர்பார்ப்போடு கேட்டார் மனோகர்.

லேசாய் தயங்கி, தலை சொறிந்தவன்...அழுத்திக் கேட் டதும்...அவள் சொன்ன வார்த்தைகளை வரி மாறாமல்

சொல்லிவிட்டான். அதைக்கேட்ட மனோகரின் காதுகள் சிவந்தன.

“அப்படியா சொன்னா?...அந்த தே...” பல்லை கடித்தார். எழுந்து குறுக்கும் நெடுக்கும் நடந்தார். கையை பிசைந்தார். “ஏண்டா..கையை ஓங்கி பேசுனாளடா... நாளைக்கு அந்த கை அவளுக்கு இருக்க கூடாது. புதுசா வந்த இவளாலே..இந்த ஊருல இவ்வளவு நாள் காப்பாத்தி வச்சியிருந்த பயம் போயிடும்.

என்ன பிரச்சனை வந்தாலும் நான் பாத்துகிறேன். இன்னைக்கு ராத்திரியே போய் வெட்டுங்கடா...” கடும் உத்தரவு பிறபித்தார்.

அன்று இரவு ஒரு மணிக்கு மேல் ஆறு பேர் ஒன்றாக மது அருந்தினர். மூன்று பைக்களில் சென்றனர். வண்டியை முன்னாடியே நிறுத்திவிட்டு, செல்வியின் வீட்டை அடைந்தனர். கதவு தட்டப்பட்டது. செல்வியின் கணவர் தூக்க கலக்கமாய் திறந்தார். அந்த கணமே அவரைத் தாக்கி, கீழே தள்ளி முண்ட முடியாமல் இருவர், மேலே ஏறி உட்கார்ந்தனர்.

உள்ளே இருந்து செல்வியை இழுத்து வந்து மற்றவர்கள், வாசலில் கிடந்த அம்மிக் கல்லில் வைத்து வலது கையில் அரிவாளால் ஓரே போடு. கை துண்டாகி விழுந்தது. அதை எடுத்துக்

கொண்டு மறைந்தனர். அதன்பிறகே அபயக்குரல் கேட்டு பக்கத்து குடிசைகளில் இருந்து வெளியே வந்தனர்.

“என் கண் முன்னால் நடந்த இந்த கொடுமையை தடுக்க முடியாதவனா இருந்துட்டேனே?” மார்பில் அடித்துக்கொண்டு பெருங்குரலில் அழுதார், செல்வியின் கணவர்.

அந்த இடமே நரக வேதனையானது. அக்கம் பக்கத்தி னர் பரிதவித்தனர். இரத்தம் இழந்த செல்வி மயங்கி னாள். ஒரு டிவிஎஸ் வண்டியில் செல்வியை தூக்கி உட் கார வைத்து பின்னாடி கணவன் பிடித்துக்கொள்ள...அ ரசு மருத்துவமனைக்கு விரைந்தார்கள்.

மனோகரன் ஆட்கள் இருவர் போலீஸ் ஸ்டேசனில் சரண் அடைந்தனர். செல்வியோடு கள்ள உறவு இருந் ததாக வாக்கு மூலம் கொடுத்து அசிங்கப்படுத்தினர்.

கையை இழந்த செல்வியின் உயிர் காப்பாற்றப்பட்டது.. ஒரு மாதத்திற்கு மேலாக மருத்துவமனையில் இருந்து குணமடைந்து டிஸ்சார்ஜ் ஆனாள். பஸ்ஸை விட்டு இறங்கினாள்.. வீட்டிற்கு போகவில்லை. நேராக அந்த ஊரின் மாரியம்மன் கோயிலில் போய் நின்றாள். சூடம் கொளுத்தினாள்.

“உன் எல்லைக்கு வாக்கப்பட்டு வந்தேன். இப்ப ஒரு கைய இழந்து நிக்கிறேன். இதுக்கு என்னதாயி நியாயம்? கண்ணீர்

விட்டால்...நீ உசுரு உள்ள தெய்வமா? செத்த கல்லா? ஒரு மாசத்துக்

குள்ள நியாயம் சொல்லணும். தண்டனை கொடுக்க னும்” எரிந்த சூடத்தை அனைத்தாள்...வீடு வந்து சேர்ந் தாள்.

செல்விக்கு நடந்ததைக் கேள்விப்பட்டு, அரசியல் மக ளிர் அமைப்புகள், தனியார் சேவை அமைப்புகள், மாற்று மத குழுக்கள் வந்தன. கொஞ்சம் பொருள் உதவி தந்தன. சிறுகடை வைத்து பிழைக்க வழி செய்வதாக சொன்னார்கள்.

பதினைந்து நாட்கள் ஆனது. நடுஇரவில் சிறுநீர் கழிக்க குட்டுக்கிழவி குடிசைக்கு வெளியே வந்து வேலிப் பட

லைத் திறந்தாள். அந்த படலில் கிழவியின் வருகைக் காக காத்திருந்தது போல் படலில் ஏறிக்கொண்டிருந் தது, கருநாகம் ஒன்று. வேலிப்படலில் கையை வைத் தாள். "ஐயையோ..." எனும் அலறலோடு கீழே சாய்ந் தாள், கிழவி. அடுத்தநாள் பாடையில் அவள் உடல் புறப் பட்டது. "ஒழிஞ்சா சண்டாழி" என இகழ்ந்தார்கள்.

மனோகரனின் வாழ்க்கையிலும்...இருள் பரவியது. சில பழைய வழக்குகளை இயற்கை தூசி தட்டியது. தொழி லிலும் சட்டென சில நஷ்டங்கள் ஆனது. அவரது டாட்டா சுமோ பெரும் விபத்தில் சிக்கி அப்பளம் போல் நசுங்கியது.

ஒரு மதிய வேலையில் தோப்புக்கு வந்திருந்தார், மனோ கரன். கயிற்று கட்டிலில் சாய்ந்தார், அப்படியே தூங் கிவிட்டார். தீடிரென வேர்த்து விருவிருத்து எழுந்தார். "யேலே மாடசாமி..." உதவியாளரை கூச்சலிட்டு கூப் பிட்டார். "என்னங்கையா..." ஓடிவந்தான். "குட்டு கிழவி வந்து தொட்டு எழுப்பினாடா..." முகம் வேர்த்தது. உதவி யாளரால் பதில் சொல்ல முடியவில்லை. "கனவா இருக் குங்கய்யா..நாங்க இங்கனத்தான இருந்தோம்" என் றான்.

தனது அனுபவத்தை அவனுக்கு உணர வைக்க முடி யாமல் "நான் என்ன பொய்யா சொல்றேன். @தாளைத் தொட்டு எழுப்புனாடாங்கிறேன்" என்றார்.

அடுத்த ஒருவாரத்துக்குள் மனோகரனுக்கு இதே மாதி ரியான அனுபவங்கள் அதிகரிக்க ஆரம்பித்தன.

முடிகயிறு கட்டினார்கள். தாயத்து கட்டினார்கள். மந் திரித்தார்கள். கோட்டை மாதிரி வீட்டில் பாதுகாப்பாய் படுத்திருந்தாலும் குட்டு கிழவி வந்து மனோகரனை கூப்பிடுவது நிற்கவில்லை.

மனபலம் இழந்தார். மாலை ஆறு மணிக்கு மேல் வீட்டிற்குள் அடங்கினார். உடல் மெலிந்தது. மனோகரன் தனித்து இருக்கும் இடங்களில் எல்லாம் குட்டு கிழவி வந்து கூப்பிடுவாள். மைனர் வாழ்க்கை அடியோடு கரைந்தது. மருத்துவ செலவு அதிகரித்தது.

பிரபல தனியார் மருத்துவமனையில் செக்க அப் செய்ய ரயிலில் புறப்பட்டார்கள். உதவிக்கு கையாளும் வந்திருந்தார். அதிகாலை ரயில் சென்னை வந்து சேர்ந்தது. கையாள் விழித்து பார்த்தார். படுக்கையில் மனோகரனை காணவில்லை. ரயில் முழுதும் தேடினார். புகார் கொடுக்கப்பட்டது. வரும் வழியில் ஆள் நடமாட்டம் இல்லாத இருப்புப்பாதை அருகே மனோகரன் விழுந்து கிடப்பது கண்டறியப்பது. உயிர் இருந்தது. ஆனால் பலத்த காயம்.

மூன்று மாதம் சிகிச்சை அளித்தார்கள். கடைசியில் ஒரு கையும் ஒரு காலும் செயல்பட செய்ய முடியவில்லை, 'இரவில் ரயிலில் டாய்லெட் சென்று திரும்பும் போது மைல்டு ஸ்டிரோக், வந்திருக்கலாம். பேராலிட்டிக் அட்டாக் வந்திருக்கலாம். என பலவாறு கருத்து சொன்னார்கள். பல மாதங்கள் கழித்து மனோகரன் திக்கி திக்கி பேச ஆரம்பித்தார்.....“ஏதோ ஒரு பொம்பள

சாமியாட்டம் தெரிஞ்சுது. அதுதான் என்னை கீழ தள்ளி உட்டுச்சி.” என்றார்.

## 18. காகமும், கருடனும் அமானுஷ்ய வடிவங்கள்!

மனிதன் நிலத்தில் ஆளுமை செய்கிறான். நடக்கிறான், ஓடுகிறான், நீரில் நீந்தவும் செய்கிறான். அமானுஷ்ய

சக்தி படைத்த சித்தர்கள் சிலரைத் தவிர  எந்த மனித னாவது கூடு விட்டு கூடு பாயும் கலையை, அந்தரத்தில் பறக்கும் ஆற்றலை வசப்படுத்த முடிகிறதா? அருணகி ரிநாதர் தன் இறுதிகாலத்தில் பச்சைக்கிளியுனுள் கூடு விட்டு கூடு பாய்ந்து வாழ்ந்தார் என சித்த இலக்கியம் சொல்கிறது.

பூமியில் மற்ற உயிரினங்களுக்கு இல்லாத சிறப்பு பற வைகளுக்கு மட்டுமே உள்ளது. ஆகாய மார்க்க பயணம் அதன் தனித்துவம். நிலத்தில் கூடு கட்டி, வம்ச விருத்தி செய்து வாழவும், சில நீரில் முழ்கி வேட்டையாடக்கூடிய கூடுதல் சக்தி கொண்டவையாகவும் உள்ளன. நிலம், நீர், ஆகாயம், காற்று என அதன் சஞ்சாரம் அகண்டது.

அத்தகைய பறவையினங்களில் ஆன்மீக, அமானுஷ் யக் குறியீடாக ஒருசேர இருப்பதுதான் காக்கை. சனிபக வனுக்கு மட்டுமல்ல, வடநாட்டில் தாந்தீரிக பூஜை செய் யக்கூடியவர்கள் இஷ்ட தெய்வமான தூமாவதி தேவி யின் தேரிலும் காக்கைகள் உண்டு.

எமன் மனிதர்களை உளவு பார்க்க, காகம் வடிவிலும் வருவான்  என்பது சாஸ்திர நம்பிக்கை. பழங்காலத் தில் கிராமத்து வீடுகளில் அண்டங்காக்கை கரைந்தால் “எமன் வந்தானா..., சனி வந்தானா.... தெரியலையே” என மூதாட்டிகள் பயபக்தியோடு உணவு வைத்த காலம் உண்டு.

இந்தியாவைப் போன்றே  பூமி முழுதும் பல ஆதி பூர்வ குடி மக்கள்  காகத்தை மூதாதையரின் அம்சமாக பார்க் கிறார்கள்.

காக்கைகளில் பலவகைகள் உண்டு. நீர்க்காக்கை, கத் திமூக்குக் காக்கை, கலிக்கிக் காக்கை, மாட்டுப்புழு

காக்கை, வெள்ளைக் காக்கை நூபூரம், பரிமளம், மணிக்காக்கை, அண்டங்காக்கை என பல பல...

பறவை இனங்களில் மிக மிக அபூர்வ பண்பு கொண்ட ஓர் பறவை, காகம். எங்கேனும், ஏதேனும் ஒரு காக்கை இறந்து

விட்டால்...? எல்லாம் ஒன்று கூடி ஒப்பாரி வைக்கும் ஓர் நிகழ்வு, மரண துக்கத்தை வாய்விட்டு கரைந்து கலை யும். இது மற்ற எந்த பறவைகளிடம் காண முடியாதது ஓர் சூட்சம அம்சம்.

மும்பை இயற்கை வரலாற்றுக் கழகம், நாட்டின் பல் வேறு பறவை சரணாலயங்களில் ஆய்வுகள் செய்கிறார்கள். பல ஆயிரம் மைல்கள் தரையிரங்காமல் தொடர்ச்சியாக வானில், தேசம் கடந்து பறக்கும் பறவைகள் பற்றி பதிவு செய்துள்ளார்கள்.

வெளிநாடுகளில் இருந்து வரும் பறவைகளை அதிகா லையில் பாதுகாப்பான வலை வைத்துப் பிடித்து அதன் காலில் அடையாள எண்கள் கொண்ட வளையம் மாட் டுவார்கள். 'இது, ஆஸ்திரேலியாவில் இருந்து வந்த பறவை. இது ஜப்பானில் இருந்து வந்திருக்கிறது. இத்தனை ஆயிரம் மைல்களை, இத்தனை நட்களில் பறந்து வந்திருக்கிறது.' என உறுதிப்படுத்துவார்கள். அதன் பயணத்தை 'வலசை செல்லுதல்' என்பார்கள்.

பூகோள ஞானம் அதன் பிறப்பிலேயே 'இன்பில்ட் சாப்ட் வேராக' இருக்கிறது. பறவைகள், ஒருவகையில் பிர பஞ்ச ஆற்றலின் இணைப்பு. அவை வாசியோகிகள் என வர்ணிக்கலாம். பூமியில் இருந்து விடுபட்டு செல் லும் ஆத்மாக்களை அவை பார்க்க இயலுமோ? பறவை கள் ஒவ்வொன்றையும் கூர்ந்து பாருங்கள். நம்முடைய எண்ண ஓட்டங்களை விரைந்து படிக்கும் சக்தி அவை களுக்கு இருக்கிறது! என அச்சரியப்படுவீர்கள்.

பறவைகள் உங்களைக் கண்டு அச்சம் கொள்ள வில்லை என்பதை பலவாறு, பல்வேறு சந்தர்ப்பங்க ளில் உறுதி செய்யப்பட்டால்,, அதை உங்களால் உணர முடிந்தால் நீங்கள் பிரபஞ்ச ஆற்றல் அலைவரிசையை, உங்களுக்குள் டியூன் செய்ய முயலாம். அது கைகூடும்.

மரங்களுடனான உணர்வு பரிமாற்றம் மனிதனுக்கு உண்டு. பறவைகளுடான அனுபவமும் பலருக்கு உண்டு. பறவைகளுடன் பேச மொழி வேண்டாம். உள் ளுணர்வு போதும். கணவனை இழந்தவர், தமிழரசி. வயதான தந்தையோடு வாழ்ந்து வந்தார்.

சர்க்கரை நோயாளியான அவர் தந்தை, சரிவர மருத் துவம் செய்து கொள்ளா நிலையில்..ஒருநாள் காலை பக்கவாதம் தாக்கி படுத்த படுக்கையானார். சிகிச்சைய ளித்தும் ஒரு கால் முழுக்க முடமானது. அதன் பிறகு ஆறு ஆண்டுகள் கழித்து, அவர் மறைந்தார்.

ஓராண்டு கடந்த நிலையில்... தமிழரசி, தன் தந்தைக்கு முதலாம் ஆண்டு தெவசம் கொடுக்க முடிவு செய்தார். உறவினர்களுக்கு, அக்கம் பக்க வீடுகளுக்கு சொல்லி வடை பாயாசம் செய்து படையல் போட்டு வழிபட்டார்.

வீட்டிற்கு வந்த ஓர் மூதாட்டி படையல் இலையில் இருந்து முதல் சோறு எடுத்துச்சென்று தெரு வாசல் கட் டைச் சுவற்றின் மீது வைத்து “கா... கா” என அழைத்தார்.



எந்த காகமும் வரவில்லை. தெவச சாப்பாடு சாப்பிட வந் தவர்கள், காலையில் இருந்து விரதமிருந்த வீட்டு உறவி

னர்கள்...பசியோடு காத்திருந்தனர். காகம் எதுவும் வர வில்லை. ஒரு பக்கம் இலை

போட்டாகி விட்டது. பந்தியில் விருந்தினர்களை உட் கார வைத்து விட்டார்கள்.

காக்கை சாப்பிடாமல் பரிமாறக்கூடாது என ஒருவர் சொல்ல. பசியில் இருந்த சிறியவர்கள், பெரியவர்கள் மாற்றி மாற்றி" கா.. கா.. எனக் கூப்பிட்டார்கள். காக்கை கள் பறந்து வந்தன. அருகில் வந்த அவை, சுவர் மீது வைக்கப்பட்ட இலை அருகே வராமல் தொலைவில் இருக்கும் தென்னை மட்டைகளில் போய் அமர்ந்தன.

மனம் கலங்கினார், தமிழரசி. 'வாழ்ந்த காலத்தில் அப்பா வுக்கு ஏதேனும் குறையாக நாம் நடந்துகொண்டு விட் டோமோ? தெவச வழிபாட்டில் ஏதேனும் குறையோ?'

"காக்கை சாப்பிடலேனா... பரவாயில்ல. வந்தவங்க ளுக்கு பறிமாற ஆரம்பிங்க" என்று சொல்லி விட்டனர், விருந்தினர்கள்.

பதற்றமான தமிழரசி 'கொஞ்சம் இருங்க' என்றார். தன் கையால் ஒரு உண்டை சாப்பாடு எடுத்தார். மனதில் பிராத்தித்தார். 'ஏதேனும் குற்றம் குறை இருந்தா மன் னிச்சுடுங்க அப்பா' சொல்லியபடியே வாசலில் கொண்டு போய் வைத்தார்.

விருந்தினர்கள் அனைவரும் வாசலையே பார்த்தனர். "கா..கா.." என ஏழு முறை அழைத்தார். ஒற்றைக் காகம் ஒன்று வந்தது. அது மணிக்காக்கை. பொதுவாக காகத் தின் இயல்பு பிற காகங்களை அழைத்து உண்ணும். அன்று தனியே வந்து இலையில் அமர்ந்தது.

பிற காகங்களை அழைக்க அது குரல் எழுப்பவில்லை. அருகே இருந்த மரங்களில் இருந்த காக்கைகளும்

அருகில் வரவில்லை. நிதானமாக ஏழு முறை இலையில் இருந்து உணவைக் கொத்தித் தின்றது.

அக்காக்கையை உறவினர்கள் சிலர் படம் எடுத்தனர். அப்போதுதான் கவனித்தனர்...வந்த காகத்திற்கு ஒரு கால் இல்லை. 'தமிழரசி உங்க அப்பா கடைசி காலத் துல ஒரு காலு முடியாம இருந்தாரே!" என்றனர். "இந்த காகம் அப்பாவோட ஆத்மாவாகத்தான் வந்திருக்கு" என வியப்பாய் பேசினர்.

"பொண்ணு கையால சாப்பாடு வைக்கணுமின்னு எதிர் பார்த்திருக்கார். அதான் தமிழரசி கொண்டு போய் வச் சதும்...வந்து சாப்பிட்டுட்டார்." கூடியிருந்த அனைவரும் அக்கருத்தை ஏற்ற நிலையில் அக் காகம் வானில் மறைந்தது. அந்நிகழ்வில் எடுக்கப்பட்ட புகைப்படம் தான் இது.

***

வைணவத்தின் ஆன்மீக அடையாளம், கருடன். பற வைகளின் அரசன். மங்கள வடிவம். கருட தரிச னம் நல்ல சகுனம். எத்தனை கோடி செலவு செய்து ஒரு ஆலய கும்பாபிஷேகம் செய்தாலும்...அங்கே தெய்வ குறியாகப் பார்க்கப்படுவது..கருட சஞ்சாரத்தைத் தான். கலசத்தில் நீர் ஊற்றும் போது... அண்ணாந்து பார்க்கும் அனைவரும் ஆகாயத்தில் கருடன் வட்டமிடுகிறாரா?, என ஆவலோடு எதிர்பார்ப்பர். அப்படி வட்டமிடும் போது கருடன் குரலெழுப்பினால் அது இன்னும் கூடுதல் ஆசீர்வாதம்! கருட தரிசனம் தந்தால் தான் கும்பாபிஷே கமோ, பெரும் வேள்விகளோ முழுமை பெறும்.

பாவ புண்ணியக் கணக்குகளைச் சரிபார்க்க, மனிதர் களை எச்சரிக்கை செய்ய, நல்வழிப்படுத்த, இறைவன், கருடனுக்கு உபதேசித்த நூலே...கருட புராணம். எந்தத் தவறுக்கு என்ன தண்டனை? என்பதை விளக்குகிறது.

சமூகத்தில் தீங்கிழைப்பவர்கள், தாங்கள் செய்த பாவ சாப வினைகளின் பயனை மறைவிற்கு பின்பான ஆத்ம வடிவமோ...பூமியில் தொடர்ந்து வரும் சந்ததியர்களோ கண்டிப்பாக அனுபவிப்பார்கள் என்பதை வலியுறுத்தும் நூல்.

***

ஒருகாலத்தில் பறவைகளால் பெரும் புகழடைந்த ஆலயமாக இருந்தது, திருக்கழுக்குன்றம்!

சென்னைக்கு அருகில் இருக்கும் ஓர் அழகிய மலைக் கோயில். சிவாலயம். இப்போது நல்ல பாதை வசதி உள்ளது. செங்கல்பட்டு வழியாகவும், மாமல்லபுரம் வழியாகவும் செல்ல முடியும்..

மலைக்கு நாள் தோறும் சொன்ன நேரத்துக்கு 'ஆபீஸ் வரும் ஊழியர்கள்' போல இரு கழுகுகள் வந்தன, அது இந்தியா முழுதும் ஆச்சரியத்தை உண்டு பண்ணியது. பல ஆண்டுகள் விடாமல் வந்தன. வடநாட்டினர் 'பட்சி தீர்த்தம்' என்ற அழைத்தார்கள்.



வட நாட்டு டூர் ஏஜெண்டுகளின் இஷ்ட ஊராக மாறியது. நாளும் குறிப்பிட்ட நேரத்தில் பெரும் கூட்டம் கூடியது. ஆலயம் 1400 ஆண்டுகால தொன்மை வாய்ந்தது. (தஞ்சை பெரிய கோயிலைவிட மூப்பு.) மலைக் கோயிலின் ஒரு கல் மண்டபம் முதலாம் மகேந்திரவர்ம பல்லவன் (கி.பி. 610-640) காலத்தில் கட்டப்பட்டது. இத்தகைய வரலாற்று சிறப்புகள் சாதாரணம் ஆயின. “கழுகு, வந்து அய்யர் கையில இருக்கிற பொங்கலை கொத்தி

சாப்பிடுதுங்க." ஆச்சரியம் தாங்காமல் தரிசனம் செய் தார்கள். கழுகளைக் கண்டதும் கன்னத்தில் போட்டுக் கொண்டார்கள். கையெடுத்து கும்பிட்டார்கள். நாளும் நிகழும் ஐந்து நிமிட பரவச நிகழுவுக்காக மணிக்கணக் கில் காத்திருந்தனர்.

சரியாக உச்சிகால  பொழுதில் இரு வெள்ளை கழு குகள் வந்த மலையில் அமரும். நைவேந்தியம் முடிந்த சக்கரைப் பொங்கலை குறிப்பிட்ட ஆலய பணியாளர், அருகே சென்று  உருட்டி வைப்பார். நெருங்கி வந்து சாப்பிட்டன. சில நேரங்களில் பணியாளர் கையில் வைத்து நீட்டும் பொங்கலை அச்சம் ஏதும் இல்லாமல் கையருகே வந்து கொத்தி சாப்பிட்டன. கழுகுக்கு வைக் கப்பட்ட பொங்கல் பாத்திரத்தில் மிஞ்சிய பிரசாதத்தை பக்தர்கள் போட்டிபோட்டுக்கொண்டு வாங்கிச் சென்ற னர்.

கழுகுகளுக்கு உணவு வைக்க என சிலர்  நிலங்களை ஆலயத்துக்கு எழுதித் தந்தனர். அதற்கென  தனிப் பாரம்பரியம் உருவானது. சம்பிரதாயங்கள் உருவாயின.

தலைமுறைத் தாண்டி தொடர்ந்த இச்செயல், ஒருநாள் சட்டென ஸ்தம்பித்துபோனது. கழுகுகள் வரவில்லை. 'வரும்.. வரும்...' என நாளும் காத்திருந்தார்கள். சிறப்பு பூஜைகள் நடத்தப்பட்டன. .

ஏமாற்றமே மிஞ்சியது. ஆம், கழுகள் வருவது நின்று முப் பது ஆண்டுகளுக்கு மேலாக ஆகிவிட்டது. இன்றளவும் அந்த ஊரின் வயோதிகர்கள் காரணம் அறிய  ஆர் வம் கொள்கின்றனர். அப்போது சந்தேகத்தின் பேரில் ஊர் கடைசியில் தங்கியிருந்த பறவை வேட்டையா டும் குறவர் குடும்பங்கள் கூட அப்புறப்படுத்தப்பட்டார் களாம். 'அந்தக் கழுகுகள் எங்கே? ஏன் வரவில்லை?' வினா எழுப்பியவர்கள் ஆயிரமாயிரம்....கிருதயுகத்தில்

வாழ்ந்த சிரவர முனிவரின் மகன்களான சண்டன், பிர சண்டன் தான் சாப விளைவு காரணமாக கழுகாய் பிறந் தனர். கலியுகத்தில் திருகழுக்குன்றத்து ஈசனை வழிபட் டால், சாப விமோசனம் பெறலாம் எனும் விதியின்படி இருவரும் நாளும் கழுகாய் வந்து வழிபட்டு சாபம் நீங்கப் பெற்றனர். அதனால் 'இனி கழுகுகள் வராது' என தேடி யோருக்கு விடையாய் கிடைத்தது.

## 19. உன்னத மரணங்கள்!

முருகனை வழிபடுவோர்... கிருபானந்த வாரியாரை நினைக்காமல் இருக்க முடியாது. அவர் எங்கு தனது உரையைத் தொடங்கினாலும் முதலில் உதிர்க் கும் சொற்கள்... "ஞானமே வடிவாகிய வயலூர் வள்ளல் பெருமானுடைய தனிப்பெரும் கருணையினாலே..." என்று வயலூர் முருகனை வணங்கியே தொடங்குவார்.

கிருபானந்த வாரியார் முருகனை நாளும், பொழுதும் கொண்டாடினார். அதற்கு முருக பெருமான் செய்த சிறப்பு என்ன? வாரியாருக்கு பதினைந்து வயது முதல் சொற்பொழிவு பயணம் தொடங்கிற்று. பத்தொன்பது வயதில் திருமணம்...நடந்தது. குழந்தைகளால் பெரிதும் கவரப்பட்ட அவருக்கு குழந்தை இல்லை. பாலகனாக காட்சியளிக்கும் முருகனே... "நானே நாளும் உன் உட னியிருக்க, உனக்கெதுக்கு குழந்தை? என கூறியிருப் பானோ என்னவோ? வாரியார் வாழ்வில் அதை ஒருநா

ளும் குறையென கருதியதில்லை. என்பத்தி ஏழு வயது வரை இந்த பூமியில் முருகன் புகழ் பாடும் அடியாராகவே வலம் வந்தார். அவர் போகாத நாடு இல்லை. நகரம் இல்லை. 1993-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 19-ந்தேதி கிருபானந்த வாரியார் லண்டன் உள்ளிட்ட பல்வேறு நக ரங்களில் சொற்பொழிவு நிகழ்த்த இரு மாத சுற்றுப்பய ணமாக விமானம் ஏறினார்..

லண்டனில் ஆன்மீக அன்பர்கள் அந்த ஞானப்பழத்தை ஆர்பரித்து வரவேற்றனர். அதில் ஒருபக்கம் உற்சாகம் ஏற்பட்டாலும்...உடல் சில அசௌரியங்களுக்கு ஆளாகி இருப்பதை உணர்ந்தார். ஒரு சொற்பொழிவு நிகழ்த்தி னார். உடம்பில் உற்சாகம் குறைந்தது. சளியும், சுரமும் வாட்டியது.. லண்டனில் உள்ள ஒரு ஆஸ்பத்திரியில் சேர்ந்தார். அங்கு, சற்றே குணம் அடைந்தாலும்..மன தில் இனம் புரியாத அச்சம் சூழ்ந்தது. திரும்பிவிடுவது என முடிவெடுத்தார்.

15 நாட்களோடு பயணத்தை பாதியில் முடித்துகொண்டு சென்னைக்கு புறப்பட்டார்.. நவம்பர் 6-ந்தேதி மாலை லண்டனில் இருந்து

சென்னைக்கு பயணம். துணைக்கு அவரது தம்பி மகன் கள் டாக்டர் திருஞானசிவம், அருள்நந்தி உடனிருந் தனர். கிருபானந்த வாரியாருக்கு விமானத்தில் முதல் வகுப்பு. தம்பி மகன்கள் இருவரும் 2-ம் வகுப்பு. விமானம் மறுநாள் (7-ந்தேதி) அதிகாலை 4-30 மணிக்கு மும்பை வந்தது.

வாரியார் இருக்கைக்கு சென்ற, தம்பி மகன் டாக்டர் திருஞானசிவம்..." சென்னையில் ஆம்பூலன்ஸ் தயாரா இருக்கு. இன்னும் இரண்டு மணி நேரம்தான். இறங்குன தும் நேரா ஹாஸ்பிட்டல் போயிடலாம். " என்றார். அமை தியாக கேட்டுக்கொண்டார் வாரியார். 5.30 மணிக்கு

சென்னைக்கு புறப்பட்டது. அப்போது ஒரு முறை வாரி யாரை போய் பார்த்தார். உடல் நிலை சீராக இருந் தது. முருகன் அருள்பெற்ற ஞானவான் அருணகிரியார் தனது திருபுகழில் ...

"உரையுஞ் சென்றது நாவும் உலர்ந்தது...." எனும் தொடங்கும் பாடலில் முருகனிடம் பின்வருமாறு விண் ணப்பிக்கிறார்...

'பேச்சும் நின்றுவிட, நாவும் வறண்டு போக, விழியும்

பஞ்சடைக்க ... வருத்தும் உறவினர்கள் வாயிலே விட்ட பால் உள்ளே இறங்காமல் தேங்கி நிற்க, கடை வாயிலிருந்து பால் ஒழுக, துயரம் மிகுந்த உடம்பு குளிர்ந்து போக, முடங்கிய கைகளும் கால்களும் யம னுடைய பாசக்கயிற்றைக் கண்டு நிமிர்ந்திட, பருத்த உடலும் தொந்தியும் இளைத்து வேகமாக வடிந்து போக, வைத்தியர் வந்து பார்த்து இனிமேல் ஒரு வைத்தியமும் பலிக்காது என்று கூறிவிட்ட பின்பு, சுற்றத்தாரும் பெண் களும் உடலின் மீது விழுந்து முட்டிக்கொண்டு அழ,... யமன் இங்கு வந்து என் உயிரைக் கொண்டு போகின்ற நாளில்... அழகிய தோகை மயிலும், பன்னிரு திருக்கரங் களும், பன்னிரு வலிய தோள்களாம் குன்றுகளிலே தவ ழும் வாசமிகு கடப்ப மாலையும்,...பண்பு மிகுந்த, காட்டு மின்னல் போன்ற வள்ளி, தேவயானை ஆகியோருடன் என் முன்னால் நீ வர வேண்டும் முருகா! என்னை அழைத்துச் செல்ல வேண்டும் முருகா! என கேட்டுக் கொள்கிறார்.

அந்த அருணகிரிநாதரின் திருப்புகழை எண்ணில் அடங்காத முறை பாடியவர் அல்லவா? வாரியார்! மிகக் கனத்த சாரிரம் கொண்ட வாரியார் ஒருவேளை இறுதி காலத்தில் படுத்த படுக்கையாக கிடந்து, அவர் முகத் தில் மொய்க்கும் ஈயை, அவர் கையைத் தூக்கி விரட்ட

முடியாதளவிற்கு, பலவீனம் அடைந்து அவதிப்பட்டால்... நாளும் முருகனை போற்றிய அடியாருக்கு இதுதான் கதியா? என சமூகம் முருகனை அல்லவா பழிக்கும்!

அதனால் முருகன் வாரியாருக்கு வானாளவிய மரி யாதை செய்ய முடிவு செய்தான் போல...விமானம் காலை 7-30 மணிக்கு சென்னை வந்து இறங்கியது. வரவேற்பு அளிப்பதற்காக... பிரமுகர்களும், சிகிச்சைக்காக மருத் துவர்களும் காத்திருந்தனர். வாரியாரின் இருக்கைக்கு.. தம்பி மகன்கள் இருவரும் சென்றனர்.

தூங்கும் நிலையில் காட்சியளித்த அவரை 'சென் னை வந்துவிட்டது' என எழுப்பினர். உடல் அசைந் தது. உயிர் பிரிந்திருந்தது. அதிர்ச்சியில்..விமான சூழலே பதற்றமடைந்தது. உடன் டாக்டர்கள் செயற்கை சுவாசம் கொடுத்து முயற்சி செய்தனர். பயன் அளிக்கவில்லை. வாரியாரின் ஆன்மா மண்ணில் பிரியவில்லை. விண் ணில் விமானம் பறக்கும் போதே பிரிந்துவிட்டது.

அருணகிரிநாதரின் பாடலில் வருவதுபோல இறுதி காலத்தில் படுத்தப் படுக்கையாக கிடத்தி அவதிப்பட அனுமதிக்காமல்... விண்ணில் வைத்து முருகனே மயில் வந்து அழைத்துசென்று விட்டான் போல....

ஒருபக்கம் வாரியாரை இழந்த துக்கம் சமூகத்தை வாட் டினாலும்... நல்ல சாவு என்று போற்றவும் செய்தனர் மக் கள். வாரியாரின் சொந்த ஊரான காங்கேயநல்லூரில் முருகன் கோவில் எதிரே "சரவண பொய்கை குளம்" என்ற மண்டபம் ஒன்றை, வாரியார் ஏற்கனவே அமைத் திருந்தார்.

அங்கே நல்லடக்கம் செய்யப்பட்டது. இறுதி ஊர்வலத் தில் சுமார் லட்சம் பேர் கலந்து கொண்டனர். நல்லோர் மறைவில் மழை பெய்யும் என்பது முன்னோர் வாக்கு!

அன்று மழை கொட்டியது. ஏராளமான மக்கள் நனைந் தபடியே அஞ்சலி செலுத்தினர்.

***

"ஆகட்டும் - பார்க்கலாமின்னேன்" - என்று சொல்லுக்கு சொந்தக்காரர். அரசியல் அவருக்கு தொழில் அல்ல! இறுதி வரை வாடகை வீடு! அவரது எண்ணற்ற மக்கள் பணிகளை காலம் உள்ளளவும் பேசும். அவரது மறை வும் ஓர் மகா உன்னதம்! வாழ்நாளெல்லாம் நேசித்த மகாத்துமாவின் பிறந்த நாளாளில் (அக்டோபர் 2) கர் மவீரர் காமராஜர் ஆன்மா விடைபெற்றதும் கூட, அவர் வாழ்ந்த எளிய, அரசியல் தூய்மைக்கு இயற்கை வழங் கிய மதிப்பெண் சான்று தானோ?.

கடைசியாக உதவியாளரிடம் சொன்ன வார்த்தைகள்..." வைரவா அந்த விளக்கை அணை" என்பது...! இன்று யோசித்தால்...அது எத்தனை அர்த்தம் கொண்ட வார்த் தையாக இருக்கிறது.

மறைவதற்கு ஓரிரு நாட்கள் முன்பாக ...அவருக்கு ஏதே னும் உள்ளுணர்வு தூண்டல் கிடைத்திருக்க கூடுமோ? என்னவோ? "வள்ளியப்பா.. இங்கே வா...!"கட்சி நிர்வா கியை அழைக்கிறார்.

"மாவட்டக் கமிட்டிகள் வசூலிச்ச பணம், பத்து லட்சம் நம்மகிட்ட இருக்கு. அத கையில வச்சிருக்க வேணாம். பேங்கிலே கட்டு..." என்கிறார்.

'உடனே போ... கட்டிட்டு வா..!' என அவசரப்படுத்து கிறார்.பணம் கட்டிய ரசீதையும், பாஸ் புக்கையும் சரி பார்க்கிறார்..நிம்மதி கொள்கிறார்.."கட்சி பணம்ன்னேன். அத நாம கட்டாம வச்சிகிட்டா... நாளைக்கு அடுத்த வன் சொல்லுக்கு ஆளாகனும். அதான் உடனே கட்ட

சொன்னேன்." என்கிறார். எல்லாம் உள்ளுணர்வு உந்திய வார்த்தைகளோ?!

செப்டம்பர் இறுதி நாட்களில் பத்து லட்சத்தை வங்கியில் கட்டினார். அக்டோபர் 2-ஆம் தேதி அவர் மறைந்தார். அவர் படுக்கையில் இருந்த பணம் வெறும் பத்து ரூபாய் தான்! ஒரு வேளை கட்டாமல் இருந்திருந்தால்...ஏழை பங்காளன் வீட்டில் பல லெட்சங்கள் இருந்தது எப்படி? அது கட்சி பணமா? கையூட்டு பணமா? என இன்று வரை விவாதம் நடத்தியிருப்பார்கள்!

காமராஜர் திருமணம் செய்துகொள்ளவில்லை. அவர் மறைவை மாநில மெங்கும்...மக்கள் தங்கள் வீட்டு துக்கமாக துயரமுற்றனர். சாதி மதம் கடந்து பல்லாயிரம் பேர் மொட்டை போட்டனர். அண்மைக் காலத்தில் போற்றத் தக்க மரணமாக அப்துல் கலாமை நினைத்து நெக்குருகின்றனர், நல்லோர்!

ஒரு மனிதனின் மரணத்தைக் காணும் பிற மனிதர்கள் இவரைப் போல் நமது பயணமும், எந்த நொடியிலும் நின்றுபோகலாம் என்ற உள் உணர்வால் உந்தப்படுதல் இயற்கை. இவ்வுலகில் நிலையாமைதான் நிலையானது என்ற புரிதலைக் கற்பிக்கும் இடம் மரண நிகழ்ந்த வீடு. அந்தவீட்டிற்குச் சென்று இறந்துவிட்ட மனிதனின் உடலுக்கு அஞ்சலி செலுத்தச் செல்வோர் மனதினுள் உணர வேண்டியது, 'உங்கள் பயணம் முடிந்ததுபோல...எனது பயணமும் முடியும் என்பதை உணருகிறேன்,' என்பதுதான்.

ஆனால் எதார்த்தத்தில் மரணவீட்டிற்கு வரும் பலர் மிகச் செயற்கையாக நடந்துகொள்வர். தனக்கும் மரணத்துக்கும் சம்பந்தம் இல்லாதவர் போல தைரியம் கொண்டிருப்பர். மரணம் தழுவாத மனிதன் இவ்வுலகில் இல்லை. இருக்கமுடியாது.நம் சமுதாயத்தில் காலங்காலமாகப்

பல வழக்குச் சொற்கள் உயிரோடு தொடருகின்றன. அவை மிகமிகப் பொருள் பொதிந்தவை. அப்படி ஒரு சொல் 'நல்ல சாவு'. 'அவருக்கு வந்தது நல்ல சாவு' என் பர். மரணிப்பதில் நல்ல சாவு என்று ஒரு வகை இருக் கிறது என்றால்... அது மறைபொருளாகக் கூறவருவது என்ன? சமூகத்தில் கெட்ட சாவு என ஒன்று இருப் பதைத் தானே...? அதிகாரம், பொருளாதார ஆளுமை இப்படி எதுவும் இல்லாமல்... சமூகத்தில் நலிந்த நிலை யில் வெறும் உயிர் வளர்க்கப் போராடி வாழும் மனி தனை அதிகாரம், பொருளாதார ஆளுமைமிக்க ஒரு வன் அநியாயமான வகையில் துன்புறுத்தும் போது...

அவனை எவ்வகையிலும் எதிர்க்க இயலாத நிலையில்... பாதிக்கப்பட்ட மனவலியோடு மற்றவர் காதில் விழா வண்ணம் சொல்வான், "அவனுக்கு நல்ல சாவு வராது. அடிப்பட்டுத்தான் சாவான், நெஞ்சு வெடிச்சிச் சாவான்" இப்படிச் செத்தவர்களைப் பார்த்து சமூகம் காலங்கால மாகச் சொல்கிறது..."என்ன பாவம் செஞ்சாரோ... அவரு வூட்டுல கெட்ட சாவா விழுது." ஆக மரணம் நிகழும் விதம் அந்த மனிதன் வாழ்ந்த வாழ்க்கையை மதிப் பீடு செய்யும் ஃபுராகிரஸ் ரிப்போர்ட் எனச் சுருக்கமாகச் சொல்லலாம்.

ஒரு குடும்பத்துக்காக, ஒரு ஊருக்காக, பலரது நன் மையை கருத்தில் கொண்டு தியாக வடிவில் தழுவும் மரணங்களை நல்ல மரணங்களாக சமூகம் கருத்தில் கொள்கிறது. நமது ஊர்களில் எல்லைத் தெய்வங்களாக வழிபடப்படும் பலர் நிஜத்தில் வாழ்ந்து, ஏதோ ஒருவ கையில் மற்றவர்களின் நலனுக்காக மரணத்தை தழுவி யவர்கள்தான். இவர்கள் பிற்காலத்தில் தெய்வங்களாகப் போற்றப்படுவதையும் கவனத்தில் கொள்ளலாம். ஆக மரணம் நிகழ்வதில் மறைந்திருக்கிறது பல சூட்சமங்கள்.

## 20. மரண இரகசியம்!

மரண பயம் என்பது கற்பனையின் ஓர் கத்தி. அது பாடாய்ப்படுத்தும். வயிற்றில் பந்து உருளச்செய்யும். கால்கள் வேர்க்கும். சற்று ஓய்ந்தால் அதன் தொல்லைத் தொடரும். என்ன செய்வது?

ஒரே பதில்...! மரணத்தை அழைத்து பேசிவிடுவதுதான். அப்படி ஓர் இரவில் மரணம் வந்தது. அருகில் அன் பொழுக அழைத்து அமர வைத்தேன். அது திகைத்தது. என்ன துணிச்சல்? என் மீதான பயம் நீங்கி

விட்டதா? மரணம் கேட்டது.நான் தெளிந்து விட்டேன். உன்னிடம் மண்டியிடுவதால் என்ன பயன்? பயமே அதி கரிக்கும். நாளும் பயந்து, பயந்து உன்னிடம் சிறை படு வதைவிட, விடுதலை அடைவதே மேல் இல்லையா? அது, எனது வார்த்தைகளைக் கொஞ்சமும் எதிர்பார்க்க வில்லை போல...சட்டென பொறுப்போடு கவனித்தது.

நான் மேலும் தொடர்ந்தேன்...

நீ ஒருநாள் வந்தே ஆகவேண்டும் என்பதை சிறியவன் அறிவேன். நீ இன்று வந்தாலும் சற்று தள்ளி வந்தாலும் என்னைச் சார்ந்தோருக்கு அது துக்கமே தரும். இழப் பாகவே அமையும். ஒருநாளும் அது மகிழ்ச்சியான நிகழ் வாக அமையப்போவதில்லையே! பிறகு ஏன் உன்னிடம் நான் மண்டியிட வேண்டும்?



நாளும் சில லெட்ச உயிர்கள் பூமியைவிட்டு விலகுகின் றன. சில லெட்ச உயிர்கள் பூமியில் பிறப்பு எடுக்கின்றன. விமான நிலையத்தில் விமானங்கள் எழுவதும், இறங் குவதும் போன்ற நிகழ்வு. ஆன்ம பயணங்களை மனித கண்களால் காண முடிவதில்லையே தவிர அங்கேயும் டிராபிக் ஜாம்தான் என்பதை உணர முடிகிறது. அத னால் இது எனக்கு மட்டுமான பிரச்னையில்லை. நான் மட்டும் ஏன் உன்னைக் கண்டு அலற வேண்டும்? அத னால் இனி நாளும் தூங்கும் போது எழுப்பி பதற வைக்க வேண்டாம். உன் பதிலைச் முடிவாகச் சொல். நான் சோர்வாக இருக்கிறேன். தூங்க வேண்டும். என்றேன்.

சரி தூங்கு, நான் புறப்படுகிறேன். என்றது சட்டென... நன்றி, நாளை சந்திப்போம் என்றேன். இல்லை இனி வரமாட்டேன். என்றபடியே எழுந்து கொல்லைக்கதவை நோக்கி நகர்ந்தது.

ஏன்? பதில் சொல்லிவிட்டு போ என்றேன்.நான் பயந்த வர்களை மட்டுமே தொடர்ந்து சந்திப்பேன். அதன் குரல் அழுத்தமில்லாமல் கேட்டு, மறைந்தது. இப்போது வயிற் றில் சுழன்றுகொண்டிருந்த பந்து நின்றது. மனம் ஒருநி லைப்பட்டது. அங்கே புதிய கதவுகள் திறந்தன. கனவு கள் தோன்றின. நான் தூங்கிக் கொண்டிருக்கிறேன்.

மனிதனின் வாழ்க்கைப்பயணம், மரணத்தை நோக்கி யது. நாளும் அதை நோக்கியே நடக்கிறோம். அதை நோக்கியே பாதைகள்....!

எல்லோருடைய பயணமும்; அதை நோக்கியே, என் பதே ஒரே ஆறுதல்! ஒரே மகிழ்ச்சி! யாருக்கும் இதில் விதிவிலக்கு இல்லை. கடவுள் அவதார புருஷர்களும் இதில் அடக்கம். ஒருவகையில்...மரணம் தான் இப்பிறப் பின் விடுதலை! ஆத்மாவின் அடுத்த பயணத்திற்கான தொடக்கம்! மரணத்தைக் கண்டு அஞ்ச வேண்டாம்!

ஞானம் பெற்றவர்கள் அதைக் கொண்டாடுகிறார்கள். இப்பூமியில் பிறந்துவிட்டதும், பயணமும் தொடங்கிவிட்டது...!

பயண சாலைகளின் இருப்பக்கமும் களிப்பூட்டும் நந்த வனங்கள், கடந்துபோகலாம்.. அவற்றை கண்டு களிக்கலாம். ஒரு நாளும் நின்று இளைப்பாற முடியாது. கால நொடிகள் யாருக்கும் கட்டுபடாதவை! இளைப்பாறி முடிக்கும் வரை வயதை நிறுத்தி வைக்க முடியாது. வழியில் கடன், நோய், அவமானம் எனும் கல், முள், குத்தும். நொண்டியபடியே நடக்க வேண்டும். நிற்கக் கூடாது.

ஒருபொழுதுபோல், ஒருபொழுது இருக்காது. இன்பமான பொழுதுகள் நீடிக்காது. துன்பமான பொழுதுகளும் தொடராது. எல்லாம் மாறி மாறி வரும். சிரிப்பு, அழுகை எல்லோருக்கும் கிடைக்கும்.

ஒரு இரவு, ஒரு பகல் உருண்டால்... பெற்று வந்த பயண நாட்களில் ஒன்று குறைந்துவிட்டது என அர்த்தம்! பூமிக்கு வந்தது முதல்... செலவான நாட்களுக்கு கணக்கு தெரியும். மிச்சம் இருக்கும் நாட்களின் கணக்கை அறிய முடியாது.

அதனால்தான் யாருடைய இறப்புச்செய்தியும் அதிர்ச்சி தருகிறது! "நேத்து கூட பேசுனோமே...அடுத்த வாரம் நேருல வரேன்னாரே" எந்த ஒரு மரணச் செய்தியையும் மனம் ஏற்க முடியாமல் தவிக்கும். மாட்டை இயக்க மூக்கணாங்கயிறு. மனுஷனை இயக்க மூச்சு கயிறு! மூச்சுக் கயிறு அறுந்தால் அந்த நொடியே முடிந்தது!

இந்த உடல் எனும் வீட்டை சதா காலமும் கண்காணிக்கும் பிக் பாஸ்ஸாக வீடினுள்ளேயே வீட்டிருக்கிறது மன சாட்சி! ஆதாரம்,

சாட்சி இல்லை. நம்மை ஒன்றும் செய்ய முடியாது எனும் இறுமாப்பு செயல்கள் அனைத்தும் நமது மரபணுக் கள் மீதே அழியாத வகையில் எழுதப்படுகிறது! அதன் பொருட்டே அடுத்து வரும் தலைமுறை நாம் செய்த பழி பாவங்களுக்கு பாரம் சுமக்கிறது! வெட்டி செலவுக ளுக்கு வரி கட்டுகிறது!

இந்த பயணம் சற்று வித்தியாசமானதுதான். பயணக் காலம் முடியும் போது, பயணமும் முழுமைப் பெற்றி ருக்க வேண்டும். அதுதான் சிறப்பு. பயணத்தையோ, காலத்தையோ நீங்கள் நிறுத்தவோ, நீட்டிக்கவோ முடி யாது. என்னால் நடக்க முடியவில்லை என பயணத்தில் இருந்து நீங்களே, உங்களை விடுவித்துக்கொள்ளலாம். அதாவது தற்கொலை வடிவில்...அதற்கான விசாரணை கள் தனி. தவறு செய்தவர், தவறுக்கு தூண்டுகோலாக இருந்தவர், தவறுக்கு காரணமானவர்கள் தண்டனை கள், அபராதங்களை எதிர்கொள்வர்.

"நான் கொஞ்ச தூரம் தான் பயணம் செய்திருக்கிறேன். இன்னும் கொஞ்சக் காலம் கொடுங்கள் பூர்த்திசெய் கிறேன்" என கேட்க முடியாது. அதாவது "மூணாவது பொண்ணு பத்து வருஷம் கழிச்சி பொறந்தா, அவளுக்கு கல்யானம் முடிச்சிட்டா என் கடமை முடிஞ்சிடும். அதுவ ரைக்கும் கால அவகாசம் வேணும்" விண்ணப்பிக்க இய லாது. அதெல்லாம் இருக்கிறவங்க பார்த்துப்பாங்க என பயணம், முடிக்கப்படும்.

அதனால் பருவத்தே பயிர் செய்ய வேண்டும். கவனத்து டன் பயிர் செய்ய வேண்டும். நீர் பாய்ச்சி, களை எடுத்து, உரம் இட்டு, அறுவடையைக் கண்டுவிட வேண்டும். கடமையில் கண்ணும் கருத்துமாக இருந்தால் மட்டுமே விளைச்சல் அமோகம் பெறும்.

முயல் ஆமை கதையில் கடைசியில் ஜெயிக்கும் ஆமை யின் பயணமுறைதான், வாழ்க்கைப் பயணத்திற்கு உகந்தது. சீக்கிரம் விளம்பரம் அடையணும், பணக்கார னாகணும்... அப்படியான இலக்குகளை தூக்கி ஏறியுங் கள். (கவனிக்கவும் புகழ் வேறு விளம்பரம் வேறு. சமூ கத்தில் நன்கு விளம்பரம் பெற்றோரை புகழ் பெற்றவர் எனகூறும் பழக்கம் இங்குண்டு.)

(எளிதில் புரியும் படியான ஓர் உதாரணம். இளம் வயதில் விளம்பரம் பெற்ற, புகழ்ப்பெற்ற பல திரைப்பட இயக் குநர்கள், நடிக, நடிகையர். அந்திம காலம் வரை படும் அவஸ்தைகள் அவர்கள் மட்டுமே அறிவார்கள். புகழ் வெளிச்சம் பின் வாழ்க்கையில் வருவது நிலைப்பெற்று நிற்கும்.)

பயணம் நிற்காமல் தொடருகிறதா?. தினமும் விறகு வெட்டுகிறீர்களா? வீட்டில் விளக்கு எரிகிறதா? தலை முறைகள் நீடிக்கிறதா? அதுவே வாழ்க்கையில் பாஸ் மார்க் தான். மனநிறைவு கொள்ளுங்கள்! பயணத் தில் உங்கள் பின்னால் வருவோருக்காக சாலையில் மரம் நட்டீர்களா? எதிர்பார்ப்பில்லாமல் நற்காரியங்கள் புரிந்தீர்களா? உங்களுக்கு மரியாதையோடு மரணப் பரிசு வழங்கப்படும். உங்களுக்கு மரணப் பரிசு வழங்கி, அழைத்துச்செல்ல ஸ்பெஷலாக ஏவல் தேவதைகள் வருவர். மூன்று நாள்களுக்கு முன்னரே பின் இரவில் வந்து தொடுவர். மரண ரகசியம் பகிர்வர். பணிந்து அழைப்பர். பணிவிடைகள் செய்வர். ஆழ்ந்து உறங் கும் பந்தங்களுக்கு ஆசி வழங்க வாய்ப்பளிப்பர். மூன் றாம் நாள் அதிகாலை அழைத்துச்செல்வர். (புண்ணிய பலம் இல்லாமல் பூமியில் பூனைப் படை சூழ வருபவர் கள் விஐபி அல்ல! மறைந்ததும் தேவதைகள் புடை சூழ ஆன்மா விண்ணோக்கி பயணமாக வேண்டும். அவரே நிஜ விஐபி)

நல் ஆத்மா பிரிந்த உயிர்க்கூடு சவ நிலையில் சிரித்த முகமாய் வீற்றிருக்கும். அந்த ஆண்டு அந்த வீட்டில் விவசாயம் செழிக்கும். நற்காரியங்கள் போன்றவை நிக ழும்.

.ஒருவர் மரண ரகசியக் குறிப்பு பெற்றவர் என்பதை அவர் மரணம் எய்திய பின்னரே நாம் உணர முடியும். மரண ரக சியக் குறிப்பைப் பெற்றவர்களில் அரிதாய் சிலரே சூசக மாக பதிவு செய்துள்ளனர். நினைவு தடுமாறி நீண்ட நாள் படுக்கை போன்றவை இவர்கள் மரணத்தில் இருக்கவே இருக்காது. மூன்றே நாட்களில் சிறுசிறு மாறுதல்களைப் பெற்று சட்டென மரணத்தைப் பெறுவர். நாள் நெருங்கி விட்டதை நாசூக்காய் யாரிடமாவது பதிவு செய்வர். யாராவது ஒருவரிடம் 'நாளை லீவு சொல்லிட்டு வீட் டுக்கு வா' என மறைபொருளாய் தன் மரணத்தைக் குறிப்பிடுவர்.

சிலர் நீண்ட காலமாக அணிந்திருந்த மோதிரம் போன்ற ஏதாவது ஒன்றை அனிச்சை செயலாக கழற்றி தருவர். மிகுந்த பற்றுகொண்டோரிடம் கோபம் கொள்வர். அது பந்தத்தை அறுப்பதே! அது கோபம் அல்ல! ஆசீர்வாதம்.

தன் ஆழ்மன ஆற்றலால் சந்தித்து பல ஆண்டு கள் ஆன நண்பரை, உறவினரை இருப்பிடம் நோக்கி தானாக வரும்படி செய்வர். எல்லோரிடமும் குறைந்த உரையாடல் நிகழ்த்துவர். குறைந்த உணவு எடுப்பர். பசி இல்லை என்பர். இதெல்லாம் சில குறிப்புகள்தான்... இப்படி மரண ரகசியக் குறிப்பு பெறுபவர்கள் எல்லாம் காவி உடுத்திய சாமியார்கள் என கருதி விடாதீர்கள்.

சாமானிய, குடும்பஸ்தர்கள், இல்லத்தரசிகள் தான் அதிகம். ஒவ்வொரு ஆன்மாவுக்கும் பூமிக்கு வந்து செல்ல செக் இன் மற்றும் செக் அவுட் பதிவேடு இருக்கி றது. விசா முடிந்துவிட்டால் வெளியேற்றப்படுவோம். பிர

பஞ்ச கடிகாரம் நொடி நேரம் கூட பிழை இன்றி இயங்கு கிறது.

மரணத்தை குறிக்க பல சொற்கள் சமூகம் பயன்படுத் தினாலும் மறைந்தார், மறைவு என்ற சொற்கள் தரும் ஈர்ப்பு எனக்கு பிற சொற்களில் ஏற்படுவதில்லை. ஒரு மனிதன் தோன்றுகிற நாள் முதலே மறைகிற நிகழ்வும் தொடருகிறது. ஒவ்வொரு நாளும் மனிதகூட்டில் பல லட்சம் செல்கள் மடிகின்றன. தோன்றுகின்றன. அதா வது கட்டிடத்தின் செங்கற்கள் வலுவிழந்தவை களை யப்பட்டு புதியவை கட்டமைக்கப்படுகின்றன. மனிதக் கூட்டில் நேற்றைய தோற்றம் இன்று இல்லை. நாளும் மைக்ரோ அளவில் மாறுதல்கள் நிகழ்ந்துகொண்டே இருக்கின்றன.

அத்தகைய மாறுதல்களால் உருவம் மாறிக்கொண்டே வந்த ஓர் உயிர்க்கூடு இனி இந்த பூமியில் நிரந்தரமாக மறைந்துபோனது எனும் உண்மை உறைக்கும்போது தான் இயற்கையிடம் மண்டியிடுகிறான். அந்த உயிர்க் கூட்டை இனி படமாக வரையலாம். சிலையாக வைக் கலாம். உயிராக மீட்டெடுக்க முடியுமா? இனி இல்லை. இதோ கண்ணுக்கு எதிரே மறைந்து போனது. அன்னா ரது மறைவு என்றும், அவர் மறைந்தார் என்றும் கூறும் சொல் வடிவம்தான் எனக்கு சட்டென ஈர்ப்பு தருகிறது. அதன் சூட்சமத்தை புரிய வைக்கிறது.

என்னா ஆட்டம் போட்டே... என்னை மீறி எதுவும் முடி யாது, தெரியுதா? என சிலரை மட்டும் அடித்து நசுக்கி இயற்கை தன் அசுர பலத்தை காட்டுவதும் ஏன்? அங்கே மரணம் பரிசாக வழங்கப்படுவதில்லையோ? தண்ட னையாக கொடுக்கப்பட்டதோ? அப்படியான மரணப்ப ரிசுகளை வழங்க தேவதைகள் வருவதில்லை மயானக் காளி, முனி போன்ற பெரிய அதிகாரிகளே வருகிறார்

கள். கபாலம் பிளந்து, உடல் கிழிந்து, இரத்தம் சிதற கொடுர பலி எடுக்கிறார்கள். அவர்கள் வருகைக்கு முன் அறிகுறிகள் என்ன? அத்தகைய இரகசியங்கள் இப் பொழுது எழுத வேண்டாம். தீயவர்கள் விழிப்படையக் கூடும்.

**************************************************

யாணன் எழுதிய பாவ புண்ணியக் கணக்குகள் படித்து விட்டீர்களா?

https://www.amazon.com/dp/B0893KMRPY